

# ஸ்ரீ டிராவல்ஸ்

12/A ரெட்ஹில்ஸ் ரோடு, கொளத்தூர், சென்னை - 99.
Ph: 5378620/5584866 Fax: 5584866
E-மெயில் : Sritrave@ md3.vsnl.net.in

## அனல் பறக்கும் கோடையில் குளு குளு மலைப் பிரதேசங்கள்!

**ST 4** புறப்படும் தேதி 21.04.1999

சென்னை - கல்கத்தா - டார்ஜிலிங் - கேங்க்டாக் (சிக்கிம்) - காத்மாண்டு (நேபாளம்) - வாரணாசி - அலகாபாத் - சென்னை.

பயணத் தொகை ரூபாய் 6,600/- 13 நாட்கள்

---

**ST 5** புறப்படும் தேதி 7.05.1999

சென்னை - ஆக்ரா - டில்லி - சிம்லா - குலு - மணாலி - சண்டிகார் - ஹரித்துவார்- ரிஷிகேஷ் - டில்லி - சென்னை.

பயணத் தொகை ரூபாய் 5,600/- 12 நாட்கள்

---

மேற்கண்ட இரண்டு சுற்றுலாக்களிலும் நட்சத்திர ஹோட்டலில் பிரபல திரைப்பட சிரிப்பு நடிகர்கள் திரு. ராக்கெட் ராமநாதன், திருமதி. காந்திமதி, திரு. ஓமக்குச்சி நரசிம்மன் ஆகியோர் கலந்து கொள்ளும் சிற(ரி)ப்பு நடைபெறும்.

---

**ST 6** பக்தி மணம் பரப்பும் பரவச இறை உலா!

புறப்படும் தேதி 24.05.1999

ஆக்ரா-மதுரா-டில்லி-அமிர்தசரஸ்-ஜம்மு வைஷ்ணவிதேவி-ஹரித்துவார்-ரிஷிகேஷ்-ருத்பிரயாக்-கர்ணபிரயாக்-பத்ரிநாத்-கேதார்நாத்-வாரணாசி-அலகாபாத்-சென்னை.

பயணத் தொகை ரூபாய் 6,600/- 15 நாட்கள்

---

ரிஷிகேஷில் திருமிகு. ராமானுஜச்சாரியார் அவர்களின் சிறப்புரை மற்றும் புது டெல்லியில் ஐந்து நட்சத்திர ஹோட்டலில் திருவாளர். சுகி. சிவம் அவர்களின் ஆன்மீக சொற்பொழிவும் நடைபெறும்.

---

- அனைத்து இடங்களிலும் தரமான ரூம் வசதிகள்
- டூர் முழுவதும் சைவ உணவு
- எல்லா இடங்களிலும் நுழைவுக் கட்டணம் உட்பட
- நட்சத்திர ஹோட்டலில் பிரத்தியேக விருந்து

**உடனடியாக முன் பணம் ரூபாய் 3,000/- செலுத்துபவர்களுக்கு மட்டுமே கண்டிப்பாக இடங்கள் கிடைக்கும்.**

**அனைத்து கிரெடிட் கார்டுகளும் ஏற்றுக் கொள்ளப்படும்.**

**L.T.C. வசதி உண்டு**

(இரயிலில் II tier A/C வேண்டுபவர்களுக்கு பிரத்யேக வசதி செய்து கொடுக்கப்படும்)

ஒருமுறை ஸ்ரீ டிராவல்ஸ் மூலம் பயணம் செய்திடுங்கள்.

சுகமான அனுபவம் உங்களுக்கு காத்திருக்கிறது

ஏமாற்றத்தைத் தவிர்க்க! உடனே முந்துங்கள்!



# ஒ·ரு·த·லை ஒருதலை!

தமிழ்நாட்டைச் சேர்ந்த பெண் துளசி. கணவருக்கு நிரந்தரமில்லாத, சொற்ப வருமான வேலை. இரண்டு குழந்தைகள். யாரோ குவைத் நாட்டுக்குப் போனால், வீட்டு வேலை செய்து காசு சம்பாதிக்கலாம் என்று சொல்லி விட்டார்கள். அதை நம்பி, பைனான்ஸ் கம்பெனியொன்றில் இருபத்தையாயிரம் ரூபாய் கடன் வாங்கி ஒரு ஏஜெண்ட்டிடம் கொடுத்து, குவைத் போய்விட்டார், கணவுகளுடன்.

அங்கே, ஒரு நாலு மாடி பங்களாவில் வேலை செய்ய அனுப்பப்பட்டார், துளசி. வீட்டு வேலை என்றால் நம் ஊர் போல காலையில் வந்தால், நாலைந்து வீடுகளில் பாத்திரம் தேய்த்து, பெருக்கித் துடைத்து விட்டுப் போகிற வேலை இல்லை. நாலு மாடியையும் துடைத்து, தரையைப் பளிங்கு போல் வைத்திருக்க வேண்டும். தரை விரிப்புகளை பிரஷ் கொண்டு சுத்தப் படுத்தினால் சீக்கிரம் சொர சொரப்பு வந்து விடுமாம். எனவே, ஒரு பிரத்தியேக சொல்யூஷனைப் பஞ்சில் நனைத்து, தரை விரிப்பு முழுக்க, அங்குலம் அங்குலமாக ஒத்தி எடுக்க வேண்டும். இதை முடிப்பதற்குள் இடுப்பு ஒடிந்து விடும்; முதுகு கழன்று விடும். தவிர ஒழுங்கான சாப்பாடு கிடையாது!

வேலைக்குச் சேர்ந்த முதல் நாளே பாஸ்போர்ட் முதலியவற்றை அந்தக் குடும்பத்தினர் வாங்கி வைத்துக் கொண்டு விட்டனர். இவையெல்லாம் போதாது என்று எதற்கெடுத்தாலும் அடி, உதை சித்ரவதைதான். காலையில் குப்பை கொட்ட ஒரு தடவை வெளியே வர அனுமதி. அவ்வளவுதான். மற்ற நேரமெல்லாம் பங்களாவே கதி.

ஒரு நாள் வீட்டிலிருந்து எப்படியோ



**"உன் கணவரை நம்ப முடியாதுன்னு ஒரே வாக்கியத்தில் புரிஞ்சுக்கிட்டியா... எப்படி?"**

**"கல்யாணத்துக்குப் பின் நீ எவ்வளவு புடைவை கேட்டாலும் வாங்கித் தரேன்னு சொன்னாரே..."**

**– இரா. திலீப்**

---

வெளியில் வந்து தன்னை அந்த பங்களாவில் வேலைக்கு அனுப்பிய துபாய் ஏஜெண்ட்டை சந்தித்திருக்கிறார் துளசி.

"உன்னை முப்பதாயிரம் ரூபாய் கொடுத்து வாங்கியிருக்கிறேன். அந்தப் பணத்தை வைத்துவிட்டு, ஊருக்குப் புறப்படு" என்று மிரட்டி இருக்கிறான் அந்த ஏஜெண்ட்.

கையில் காசு இல்லை. காரணம், தனக்கு சம்பளம் என்று தன் எஜமானன் எதுவும் தரவில்லை என்று துளசி சொன்னபோது, "மரியாதையாக, அந்த வீட்டுக்கே போகிறாயா? இல்லை உன் உடைகளைக் களைந்து, தனியறையில் அடைக்கட்டுமா? நீயே முடிவு செய்து கொள்" என்று சொன்னவுடன், வேறு வழியின்றி மறுபடி பழைய வீட்டுக்கே வந்து சேர்ந்தாள் துளசி. 'ஓடிப் போனாயா?' என்று அடிதடியுடன் அங்கே வரவேற்பு!

எப்படியாவது அந்த நரகத்திலிருந்து வெளியே போய்த் திருவது என்று முடிவுக்கு வந்தார் துளசி.

ஒரு நாள் காலை வெளியில் வந்தபோது, பக்கத்து வீட்டு டிரைவரிடம் (அவரும் தென்னிந்தியர்தான்) தம் சோகத்தைக் கொட்டித் தீர்த்து, தப்பிக்க வழி கேட்டார் துளசி. அதிகாலை வெளியே வரும்போது, அப்படியே கொஞ்ச தூரம் போய், வழியில் வருகிற டாக்ஸியில் ஏதாவது இந்திய முகம் தெரிந்தால், இந்திய தூதரகத்தில் கொண்டு போய் விட்டு விடும்படி கேள். கருணைப்பட்டு உன்னைக் கொண்டு போய் அங்கே விட்டு விடுவார்கள்' என்று ஆலோசனை தந்திருக்கிறார் அவர்.

அதன்படி, ஒரு நாள் காலை அங்கேயிருந்து தப்பித்து இந்திய தூதரகம் போய்த் தஞ்சமடைந்தார் துளசி. அங்கே என்னடா வென்றால் இவரைப் போலவே இன்னும் இருநூறு துளசிகள்!

இவர்களில் இருபத்தி இரண்டு பெண்கள், அண்மையில் சென்னைக்கு வந்து சேர்ந்தனர். இவர்கள் வருவதற்கான ஏற்பாடுகளைச் செய்தவர்கள் சுஹாசினியும், ரேவதியும். சுஹாசினியைச் சந்தித்தபோது சொன்னார்:

"இப்படி பாதிக்கப்பட்டு, குவைத் இந்திய தூதரகத்தின் காப்பகத்தில் தங்கியிருக்கும் பெண்களை பத்திரமாக இந்தியா அனுப்ப அங்குள்ள இந்தியப் பெண்கள் அமைப்பு ஒன்று உரிய முயற்சிகள் எடுத்து வருகிறது. கடந்த பிப்ரவரியில் ஒரு கலை நிகழ்ச்சி நடத்தினார்கள். அதன் மூலம் வசூலான தொகையில் விமான டிக்கெட் வாங்கி பாதிக்கப்பட்ட பெண்களை இந்தியாவுக்குத் திருப்பி அனுப்புவது அவர்கள் நோக்கம். அந்தக் கலைநிகழ்ச்சியில் நானும் ரேவதியும் கலந்து கொண்டோம். ஆனால், எவ்வளவோ முயற்சித்தும் பாதிக்கப்பட்ட பெண்களைப் பார்த்துப் பேச எங்களுக்கு அனுமதி கிடைக்கவில்லை.

"இந்தியா திரும்பிய பின், பாதிக்கப்பட்ட பெண்களில் ஒருவர், 'எங்களை எப்படியாவது மீட்க ஏற்பாடு செய்யுங்கள்' என்று கோரி கடிதம் எழுதியிருந்தார்.

"தமிழக அமைச்சர் சற்குண பாண்டியனைச் சந்தித்து இது பற்றிப் பேசினேன். குவைத்திலிருந்து முதல் கட்டமாக இருபத்தி இரண்டு பெண்கள் இந்தியா வந்து இறங்கினர். அவர்களை வரவேற்று, உணவளிக்க ஏற்பாடு செய்தேன். அடையாறில் ஓர் இல்லத்தில் சில நாட்கள் தங்க அரசு ஏற்பாடு செய்தது. என் சொந்தப் பணத்திலிருந்தும், நன்கொடையாகக் கிடைத்ததை வைத்தும், ஆளுக்கு ஒரு புடைவையும் ஆயிரத்து இருநூற்றைம்பது ரூபாய் ரொக்கமும் வழங்கினேன். எல்லோரும் அவரவர் ஊர் போய்ச் சேர்ந்து விட்டனர்!

"இப்போது என் கவலையெல்லாம், அங்கே இன்னும் சிக்கிக் கொண்டிருக்கும் அப்பாவிப் பெண்களை எப்படி ஊருக்கு அழைத்து வருவது என்பதுதான்!

"பாதிக்கப்பட்ட பெண்களில் ஒருவர், ரொம்ப நொந்து போய், 'எங்கள் சோகக் கதை மக்களுக்குத் தெரிஞ்சாகணும். பணம் சம்பாதிக்க வெளிநாடு போய், நரகத்தில் சிக்கிக் கொள்ளாமல் தடுக்கப் பலருக்கும் அது எச்சரிக்கையாக இருக்கும்' என்றார். அது இன்னும் என் காதில் ரீங்காரமிட்டுக் கொண்டே இருக்கிறது!"

**— மௌலி**

# சென்னையில் கேட்ட கொலம்பஸ் சிரிப்பொலி!

ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள புத்தகங்கள் ஆயிரம் டாலருக்கு ஏலம் போயின! ஒரு செட் பொன்னியின் செல்வன் மட்டும் 175 டாலருக்கு விற்றது! – அமெரிக்காவில் உள்ள கொலம்பஸ் நகரில் (ஒஹையோ மாநிலம்) இந்த ஏலத்தின் மூலமும் நன்கொடைகள் மூலமும் சுமார் 1.85 லட்சம் ரூபாய் நிதி சேர்க்கப்பட் டிருக்கிறது கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக் கட்டளைக்கு!

கொலம்பஸ் வாழ் தமிழர்கள் கல்கி நூற்றாண்டு விழா கொண்டாடுவது என்று முடிவு செய்துவிட, அதற்கான முன்னேற்பாடுகளைச் செய்தார்கள் சங்கர் ராமச்சந்திரனும் ஆர். சந்திரசேகரும்.

நிகழ்ச்சி பிப்ரவரி 20-ஆம் தேதி மிக வெற்றிகரமாக நடந்து முடிந்தது. இறைவணக்கமாக அமரர் கல்கியின் பாடலைப் பாடினார் அகிலா. சந்திரசேகர் வரவேற்க, சங்கர் க்ல்கி அறக்கட்டளையின் பணிகளை விவரிக்க, அதன் பின்னர் கல்கி நினைவுகளைப் பகிர்ந்து கொண்டனர் கொலம்பஸ் தமிழ்ச் சங்க உறுப்பினர்கள் சிலர்.

அமரர் கல்கியின் சீர்திருத்த நோக்கு அவரது எழுத்துக்களில் மட்டுமின்றி வாழ்க்கையிலும் வெளிப்பட்டதைச் சுட்டிக் காட்டினார் ஏ.வி. ரங்கராஜன். காந்தி மண்டப நிதி திரட்ட கல்கிக்கு உதவியதைப் பெருமிதத் துடன் நினைவு கூர்ந்தார்.

கல்கியின் தொடர் கதைகளுக்காகக் காத்திருந்து படித்து மகிழ்ந்த பழைய நினைவுகளைப் பகிர்ந்து கொண்டார் எஸ்.டி. ராவ். பிட்ஸ்பர்க் நகரிலிருந்து இந்நிகழ்ச்சிக்கென்றே புறப்பட்டு வந்திருந்த சாவித்திரி வெங்கடாசலம், தாம் சிறுமியாக இருந்தபோது கல்கி அவர்களை அண்மையில் கண்டு, பேசிப் பழகியதையெல்லாம் உணர்ச்சி பொங்கச் சொன்னார். மிக உயர்ந்த நோக்குடைய எழுத்தாளர், பழக மிகவும் இலகுவானவராக, இனிமையானவராக விளங்கியதை வியந்து குறிப்பிட்டார்.

எதிர்பாராத விருந்தினராக நிகழ்ச்சிக்கு வந்து சேர்ந்தவர் ரவி தமிழ்வாணன்! கொலம்பஸ் தமிழ்ச் சங்க முக்கிய உறுப்பினரான ஜவஹர் பழனியப்பனுடன் நிகழ்ச்சிக்கு வந்தவர், சிறப்புரை ஆற்றி கல்கியின் பன்முக எழுத்தாற்றலை விளக்கினார்; பத்திரிகைத் துறைக்கு அவர் ஆற்றிய பணிகளை விவரித்தார்.

நிகழ்ச்சியில் சேர்க்கப்பட்ட நிதியை தமிழ்ச் சங்கத் தலைவர் நாட் ராம்மோஹன் கல்கி அறக்கட்டளைக்கு வழங்கியதைத் தொடர்ந்து, ரேவதி சுப்ரமண்யத்தின் இசை நிகழ்ச்சி நடைபெற்றது. ரேவதியும் அவர் கணவரும் வயலின் வாசித்த சிவகுமார், மிருதங்க வித்வான் அருண்குமார் ஆகி



• கச்சேரியுடன் கல்கி விழா

யோர் வெவ்வேறு நகரங்களிலிருந்து இந்நிகழ்ச்சிக்காக சொந்த செலவில் வந்து சேர்ந்திருந்தார்கள். கச்சேரியில் கல்கியின் பாடல்களும் இடம்பெற்றன என்பதைச் சொல்லத் தேவையில்லை!

அப்பர் ஆர்லிங்டன் சிவிக் சென்டரில் நடந்த இந்த நிகழ்ச்சிக்கென்று ஒரு பிரத்யேகப் பாடலை இயற்றிப் பாடினார் சந்திரசேகர். சென்னையிலிருந்து கல்கி அறக்கட்டளை அறங்காவலர்கள் அனுப்பிய வாழ்த்துச் செய்தி படிக்கப்பட்டது.

இத்தனை உணர்ச்சி பூர்வமான நிகழ்வுகளையும் முந்திக் கொண்டு முதல் மார்க் வாங்கியது, கல்கி அவர்களின் 'ஓ மாம்பழமே'தான்! தமிழறியாத பலர் வந்திருந்த நிகழ்ச்சி என்பதால் அக் கட்டுரையின் ஆங்கில மொழி பெயர்ப்பைப் படித்துக் காட்டினார் அகிலா.

'அப்போது எழுந்த சிரிப்பொலி சென்னை வரை கேட்டிருக்குமே?' என்கிறார்கள் கொலம்பஸ் தமிழர்கள்!

— என்.என்.

# வாழவைக்கும் புன்னகைக்கு பொக்கே!

நந்திதா, தம் தோழி ஒருவருக்குப் பிறந்த நாளன்று ஒரு பொக்கே அனுப்பி வாழ்த்துத் தெரிவிக்க விரும்பினார். எனவே, பொக்கே விற்பனை செய்யும் 'ஃப்ளோரிஸ்ட்' ஒருவரை அணுகி, மறுநாள் குறிப்பிட்ட முகவரியில் வசிக்கும் தமது தோழிக்கு, ஒரு பொக்கேவைப் பிறந்த நாள் பரிசாக அனுப்பி வைக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். "சாதாரண ரோஜா மலர்களுக்கு பதிலாக, விலை உயர்ந்த பூ ரகங்களைப் பயன்படுத்த வேண்டும்" என்று அவர் கூறியதும், "அப்படியானால் கட்டணம் நாநூறு ரூபாய்" என்றார் விற்பனையாளர். நாநூறு ரூபாய் பணத்தை எண்ணிக் கொடுத்து விட்டு, "என் தோழி காலை எட்டரை மணிக்கு ஆபீஸ் புறப்பட்டுப் போய் விடுவாள். எனவே, காலை ஏழரை மணிக்கெல்லாம், பொக்கேவை அவரிடமே நேரடியாக டெலிவரி செய்துவிட வேண்டும்" என்றும் கேட்டுக் கொண்டார்.

ஆனால், மறுநாள் நடந்தது நேரெதிர். நந்திதாவின் தோழி வீட்டில் பொக்கே டெலிவரி செய்யப்பட்ட போது, மணி பதினொன்று. காலதாமதத்துக்கு, பொக்கே கொண்டு வந்து கொடுத்த ஊழியர் வருத்தம் தெரிவிக்கவில்லை என்பது மட்டுமில்லை; அந்த பொக்கேவில் பயன்படுத்தப்பட்டிருந்தவை, நந்திதா வேண்டாம் என்று குறிப்பிட்டுச் சொல்லியிருந்த சாதா ரக ரோஜாக்கள்தான்! நந்திதாவுக்கும், அவர் தோழிக்கும் கொடுத்த வாக்கைக் காப்பாற்றாத ஃப்ளோரிஸ்ட் மீது கோபம் கோபமாக வந்தது.

அப்போது, நந்திதாவுக்கு ஓர் எண்ணம் தோன்றியது. நாமே ஏன் பொக்கே விற்பனை ஆரம்பிக்கக் கூடாது? நமக்கு என்னென்ன சிரமங்கள், அதிருப்திகள் ஏற்பட்டதோ, அவை எல்லாம் மற்றவர்களுக்கு ஏற்படாதவாறு பார்த்துக் கொண்டால் என்ன?

எண்ணத்தைச் செயல்படுத்தி விட்டார் நந்திதா. அவருக்குத் தோதாக அப்போது காதலர் தினம் வர, தம் புதிய சேவை பற்றிச் சில வண்ண போஸ்டர்கள் தயாரித்து, பிரபல புத்தகக் கடைகள், கேக் விற்பனை நிலையங்களில் மக்கள் பார்வையில் படும்படி வைத்தார். ஒரு பேஜர் வாங்கி வைத்துக் கொண்டார்.

சென்னை மகா ஜனங்கள் நந்திதாவை ஏமாற்றி விடவில்லை. சுமார் பதினைந்து ஆர்டர்கள் கிடைத்தன.

"காதலர் தினத்தன்று, காலையில் பொக்கே சகிதம் தாமே புறப்பட்டு, திருவான்மியூர் போய் அறுபது வயதுப் பெண்மணியின் வீட்டுக் காலிங்பெல்லை அழுத்தி, அவரது மகன் சார்பாக பொக்கேவைக் கொடுத்தபோது, அவர் முகத்தில் ஏற்பட்ட மகிழ்ச்சியை இப்போது நினைத்தாலும் எனக்கு நெகிழ்ச்சி ஏற்படும்! என்னை வீட்டுக்குள் அழைத்து உட்கார வைத்து, என்னைப் பற்றி விசாரித்து, எனக்குக் காப்பி போட்டுக் கொடுத்து என்னை வாழ்த்தி வழியனுப்பி வைத்தார். நான் விளம்பரம் எதுவும் செய்வது கிடையாது. என் சேவையில் திருப்தியடைந்தவர்கள் செய்கிற சிபாரிசுதான் என் வளர்ச்சிக்கு அஸ்திவாரம்! இப்போது, நான்கு பேரை வேலைக்கு வைத்துக் கொண்டிருக்கிறேன். தினம் சராசரியாக ஐந்தாறு ஆர்டர்கள் வருகின்றன" என்று சொல்லி பூங்கொத்து போலச் சிரிக்கிறார் நந்திதா!

"நாளடைவில், வெறும் பொக்கே மட்டுமின்றி, கூடவே ஒரு வாழ்த்து அட்டையையும் கொடுக்க ஆரம்பித்தேன். ஒரு தடவை ஒரு சிறுமிக்குப் பிறந்த நாளன்று பொக்கேயும் பிறந்த நாள் வாழ்த்து அட்டையும் கொண்டு போய்க் கொடுத்தபோது, அவளது சந்தோஷத்தின் ஊடே, இலேசான ஏமாற்றமும் இருப்பதை என்னால் உணர முடிந்தது. யோசித்தபோது ஒரு ஐடியா வந்தது. அது முதல் சாக்லேட், கேக் இவற்றையும் சேர்த்து, டெலிவரி செய்ய ஆரம்பித்தேன். (இதற்கெல்லாம் உபரி சார்ஜ் உண்டு.)

"ஒருசிலர் ஒரு வருடம் முழுமைக்குமாக, யார் யாருக்கு எந்தெந்த தேதியில் பொக்கே தரவேண்டும் என்று வருட ஆரம்பத்தி

லேயே லிஸ்ட் கொடுத்து விடுவார்கள். அது போன்ற சமயங்களில், குறிப்பிட்ட தினத்தில் சரியாக பொக்கேக்கள் டெலிவரி செய்யப்படுவதுடன் விட்டு விடாமல், அதற்கு முந்தைய நாளன்று சம்பந்தப்பட்டவருக்கு டெலிபோன் செய்து, 'உங்கள் சார்பாக இன்னாருக்கு, நாளை பிறந்த நாள் பொக்கே வழங்கப்படவிருக்கிறது' என்று தெரிவிப்போம். இது மிகுந்த பாராட்டுகளைப் பெற்றுத் தந்து கொண்டிருக்கிறது'' என்கிறார்.

''கெஸ்சர்' என்ற எங்கள் நிறுவனப் பெயருக்கேற்ப,





நாங்கள் பொக்கேக்களைக் கொடுக்கிறபோது, இன்னார் சார்பில் உங்கள் பிறந்த நாளையொட்டி இதை வழங்குகிறோம். எங்கள் சார்பிலும் வாழ்த்துக்கள்' என்று புன்சிரிப்புடன் சொல்லிவிட்டு, பொக்கேவைத் தருவது வழக்கம்! இந்தப் புன்சிரிப்பே, எங்களுக்கு ஏராளமான புதிய வாடிக்கையாளர்களைப் பெற்றுக் கொடுத் திருக்கிறது. பிறந்த நாள் தான் என்று இல்லை; திருமண ஆண்டு விழா, பிரிவுபசாரம், வரவேற்பு, சீக்கிரம் நலமடைய வாழ்த்து என்று பல்வேறு சூழல்களிலும் இன்று பொக்கேக்கள் வழங்கப்படுகின்றன.''

''அது சரி நந்திதா! உங்கள் பிறந்த நாளுக்கு யாராவது பொக்கே கொடுப்பார்களா?''

சற்றே ஏக்கமுடன், ''முன்பெல்லாம் நிறைய வரும். இப்போது நானே பொக்கே விற்பனை ஆரம்பித்த பிறகு, எனக்கு பொக்கே தர பலருக்கும் தயக்கம்!''

இருப்பதிக்கே லட்டா என்று நினைத்து விட்டார்கள் போலும்.

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

அட்டை வண்ணப்படம், படம் : **ஸ்ரீஹரி**



# ஜெயலலிதா கைது ஆவாரா?

"நான் ஒரு கிரிமினல் லாயர். ஆனால் இது போன்ற ஒரு அசம்பாவிதம் நடக்கக் கூடும் என்று கொஞ்சம் கூட யோசிக்க வில்லை" என்று எழும்பூர் கண் மருத்துவ மனை அறை எண். 51ன் வாசலில் அமர்ந் திருந்த வழக்கறிஞர் கணேசன் நெஞ்சு விம்ம நம்மிடம் சொன்னார். உள்ளே அவரது சகோ தரரும், ஆடிட்டருமான ராஜசேகரன் கண் மற்றும் கை மணிக்கட்டுகளில் பாண்டே ஜுடன் படுத்துக் கொண்டிருந்தார். சர்ச்சைக் குரிய ஒரு விவகாரத்தில் சகோதரர் கதாநாய கனாக மாறி விட்டதன் பாதிப்பு கணேசன் முகத்தில் பளிச்சென தெரிந்தது.

தஞ்சை சரபோஜி கல்லூரியில் பட்டம் படித்துவிட்டு, தஞ்சையிலேயே சி.ஏ. சேர்ந்து விட்டார் ராஜசேகரன். கல்லூரித் தோழர் (சசிகலா) நடராஜன். தஞ்சையில் சி.ஏ. படித்தாலும் தொழில் நடத்த சென்னைதான் ஏற்ற இடம் என்று ராஜ சேகரன் சென்னைக்கு வந்து, மயிலை கேசரி பள்ளி யில் மாணவர்களுக்கு சி.ஏ. வகுப்புகள் எடுத்திருக்கிறார், முதலில். கூடவே தனியாக, சிறிய அளவில் துவங்கிய பிராக்டீஸ் சிறப்பாகப் பரிமளிக்கத் துவங்கி விட்டது. நடராஜன் அறிமுகத்துடன் ஜெய லலிதாவின் ஆடிட்டர் ஆனார்.

"ஒரு மணி நேரத்துக்கு மேல் சித்ரவதை செய்ததால், சாப்பிடாமல் பசியுடன் இருந்த அவனுக்கு நா வறண்டு போய்விட்டது. தண்ணீர் கேட்டவுடன் பாத்ரூமில் போய் பிளாஸ்டிக் மக்கில் பிடித்து கொண்டு வந்து கொடுத்திருக்கிறார்கள். பத்து வருடம் ஆடிட்டராக இருந்தவருக்கு இப்படிப்பட்ட கொடுமை! சி.பி.ஐ. விசாரணை கேட்கிறார் கள் அ.தி.மு.கவினர். பாதிக்கப்பட்டவரைச் சார்ந்தவன் என்ற முறையில் சொல்கிறேன்; நாங்கள் தயார்! ஆனால் அதற்கு முன், சி.பி.ஐக்குப் பொறுப்பாக உள்ள அ.தி.மு.க. அமைச்சரை மாற்றிவிட்டு வேறு ஒருவரை நியமிக்கட்டும்!

ராஜசேகரனின் கண் பார்வைக்கு ஒன்றும் ஆபத்தில்லை என்று நம்மிடம் சொன்னார் டாக்டர் ஒருவர். கண் பகுதி எலும்புகள் எக்ஸ்ரே எடுக்கப்பட்டுள்ளன.

இந்த விவகாரம் கிளப்பி விட்டுள்ள அர சியல் சூடு காரணமாக, மிகவும் கவனமாக அடிகளை எடுத்து வைக்கிறது அரசு. குற்ற வியல் சட்டம் 164ன் கீழ் ராஜசேகரன் வாக்கு மூலத்தைப் பெற்றது 'மிகவும் திட்டமிட்ட செயல்' என்கிறார்கள் அதிகாரிகள்.

"விசாரணையின் முடிவில் எவ்வளவு பெரிய மனிதர்களாக இருந்தாலும், தேவைப் பட்டால் கைது செய்வோம்" என்றார் உயர் காவல் அதிகாரி ஒருவர். ஜெயலலிதாவுக்கு டான்ஸி நிலம் வாங்கிய விவகாரத்தில் ராஜ சேகரனின் ஆலோசனையும் உண்டாம். டான்ஸி மற்றும், சொத்து குவிப்பு வழக்கு களில் ஜெ. - சசிகலாவுக்கு எதிராக அரசு சாட்சியாக மாறிவிட்ட ராஜசேகரன் தாக்கப் பட்டது குறித்து, போலீஸ் நினைத்தால் மற்றொரு வழக்கும் போட முடியும்!

"தமிழ் நாட்டில் ஏற்கெனவே ஜனாதிபதி சிகிச்சை எடுத்துக் கொண்டிருக்கிறார். பிரதமர் வேறு திருச்சி பா.ஜ.க. மாநாட்டுக்கு வந்து செல்ல இருக்கிறார். இந்த சமயத்தில் ஜெயலலிதாவைக் கைது செய்வது புத்தி சாலித்தனமான காரியமாக இருக்காது. அவர் கள் கட்சிக்காரர்கள் சட்டம் ஒழுங்கு பிரச் னையைக் கிளப்பி விடுவார்கள். ஆனால் ஜெ. கைதை எதிர்பார்த்துக் காத்திருக்கிறார். முன் ஜாமீனுக்குப் போகாமல் சம்பவத்தைச் அரசியல் ஆக்கி விளையாட நினைக்கிறார். அதுவும் மத்திய அரசே இவரது சொல்படி ஆடும் போது கேட்பானேன்?" என்றார் கோட்டை அதிகாரி ஒருவர்.

— ப்ரியன்

# சாம்பாருக்குத் தவித்த மேயர்!

**கா**விரி பாயும் கன்னிக் கர்நாடகச் செய்திகள் வாசிப்பது மஞ்சுளா.

பெங்களூர் நகர அபிவிருத்திக்கான திட்டங்களைச் சுருட்டிவர Honololuக்கு விமானம் ஏறினார், பெங்களூர் மேயர் சிம்ஹா. விமான நிலையத்தில், அவர் திரும்பி வரும் நாளில் ஆவலுடன் காத்திருந்த பத்திரிகையாளர்கள், முன்பே விஷயம் தெரிந்திருந்தால் விதவிதமான சாம்பார், வத்தக் குழம்பு வகையறாக்களை வீட்டிலேயே சமைத்து எடுத்து வந்திருக்கக்கூடும். விமான நிலைய வளாகத்திலேயே மேயரை உட்கார வைத்து சாம்பாரால் குளிப்பாட்டினாலும் பெரிய அஃபென்ஸ் இல்லை.

அபிவிருத்தி திட்டங்களைத் தேடிப்போன மேயருக்கு அங்கே வாகான சைவ உணவு கிடைக்கவில்லை; சாம்பார் சரியில்லை என்று நிருபர்களிடம் கண்ணீர் மல்காத குறையாகக் குமுறியிருக்கிறார். திட்டம் என்ன பெரிய திட்டம்! மேயர் முகத்தில் வாட்டம் வரலாமோ?



• ரவீணா டாண்டன்: 'டூ'விட வைத்த மயில்!

**பெ**ங்களூர் நகரம் சமீபத்தில் சாப விமோசனம் கண்டது. கண்கண்ட கனவுக்கன்னி, கான மயில், கட்டிளங் காளையரின் மனம் கவர்ந்த விண்மீன் ரவீணா டாண்டன், மாநகரில் தம் திருப்பாதம் பதித்தார்.

அவர் தங்கியிருந்த நட்சத்திர ஓட்டலை ஆறிலிருந்து அறுபதுவரை வயதான ரசிகப் பெருமக்கள் வட்டமிட்டு, ஆட்டோகிராஃபுக்கும் போட்டோகிராஃபுக்கும் தவம் கிடக்க, ரவீணா தலை தென்பட்டதும் உற்சாக மிகுதியில் நெருக்கியடித்து விட்டனர். டி ஷர்ட்டிலும் உள்ளங் கையிலும் கிடைத்த துண்டுக் காகிதங்களிலும் தேவதையின் கையெழுத்துக்காக நீட்டி, முட்டி மோத, ஒரு தென்றல் புயலாகிக் கரை கடந்துவிட்டது. கூட்டத்தைப் புறங்கையால் தள்ளி விட்டுக் காணாமல் போனார் ரவீணா. கொந்தளித்துப் போன ரசிகர்கள் தாற்காலிகமாக ரவீணாவுக்கு 'டூ' விட்டிருப்பதாகத் தெரிகிறது.

**பெ**ங்களூரிலுள்ள 'இன்டியன் இன்ஸ்டிடியூட் அஃப் மானேஜ்மெண்ட்' மாணவ, மாணவியரால் மொய்க்கப்பட்டுக் கொண்டிருக்கிறது. நுழைவுத் தேர்வில் வெற்றி பெற்றவர்கள் முகத்தில் ஏக சந்தோஷம். கஷ்டப்பட்டுப் படித்து விட்டால் பன்னாட்டுக் கம்பெனிகள் வந்து கொத்திக் கொண்டு போய்விடுமே! சம்பளம் ஆண்டுக்கு ஒன்றரை லட்சத்திலிருந்து பதினைந்து லட்சம் வரையாயிற்றே!

**ஒ**ரு ஞானபீடப் பரிசு (கிரிஷ் கர்நாட்) ஒரு பத்து விக்கெட் சாதனை (கும்ளே)இவற்றால் புல்லரித்துப் போய் மண்ணின் மைந்தர்கள் என்று அவர்களைக் கொண்டாடிக் கொண்டிருந்த கர்நாடகவாசிகளுக்குப் புதிதாகக் கொண்டாட நான்கு பேர் அகப்பட்டு விட்டதில் தலைகால் புரியாத மகிழ்ச்சி. 'சத்தா சகோதரர்கள்' என்ற அந்த நால்வர் 37 சீட்டுகளைக் கொண்ட நவீன பஸ் ஒன்றை நாற்பதே நாட்களில் செய்து முடித்தனர். உலகம் வியந்து கண்டது அந்த பஸ்ஸையும் அது போன இடத்தையும் பயணம் செய்தவரையும்.

ஆம்! பாகிஸ்தானுக்கு வாஜ்பேயி பயணம் செய்த பஸ்ஸைக் 'கட்டிய' நான்கு சகோதரர்கள்தான் இன்று கர்நாடகாவின் புதிய கொண்டாட்ட நாயகர்கள்.

• துணை மேயர்: கண்ணில் இருக்கிறது விஷயம்!

**பெ**ங்களூர் நகரத் துணைமேயர் 'சுநமி'ன் சில வினோதப் பழக்கங்களால் வெகு விரைவில் வலுக்கட்டாயப் பதவித் துறவறம் மேற்கொள்ள வேண்டி வரும் போலிருக்கிறது.

சகட்டு மேனிக்குக் கச்சடா மொழியை எதிராளிகளின் மேல் பிரயோகிப்பது, கூட்டங்களில் ஓயாமல் சூயிங் கம் மென்று அடுத்திருப்பவரை அவஸ்தைக்கு உள்ளாக்குவது, எதிரே அமர்ந்திருக்கும் தம் நண்பர்களைப் பார்த்து அடிக்கடி கண் அடிப்பது போன்ற இவரது காரியங்கள் படு இம்சை தருவன. சுநம் 'காணோம்' ஆகாமலிருப்பது அவர் கையில் – மன்னிக்கவும் – கண்ணில்தான் இருக்கிறது என்கிறது நம்பத்தகுந்த வட்டாரங்கள்.

மீண்டும் செய்திகள் அடுத்த வாரம்.

— மஞ்சுளா

## சென்ற வார TV

*– கர்நாடக இசைக் கலைஞர் நெய்வேலி சந்தானகோபாலன் விமர்சிக்கிறார்.*

● ''வாயேஜ் டு ஃப்ரீடம்'' (விடுதலையை நோக்கி ஒரு பயணம்) என்று ஒரு பத்து நிமிட செய்திப்படம். கால்கள் மட்டுமல்ல; ஒரு கையையும் இழந்த ஒருவர் தமது முயற்சியால் துப்பாக்கி சுடும் விளையாட்டில் பெரும் திறமை பெற்றதைக் காண்பித்தார்கள். ஜனாதிபதி நாராயணனின் கரங்களால் பரிசு பெற்ற இவரது முயற்சிகள், பார்ப்பவர்களுக்குப் பெரும் உற்சாகத்தைக் கொடுத்தது.

• சந்தானகோபாலன்

● 'சுரபி' வெகு தரமான ஒரு நிகழ்ச்சி. குடும்பத்தோடு எல்லா நாடுகளுக்கும் போய் வந்த உணர்வு ஏற்படுவது வழக்கம். இந்த வாரம் எகிப்தில் லக்ஸார் என்ற இடத்தில் உள்ள ஒரு பழைய கோயிலைக் காட்டினார்கள். அந்தக் கோயிலின் பிரம்மாண்டம் மனத்தில் பளிச்சென்று தைத்தது.

● 'க்ராஸ் ஃபயர்' என்ற நிகழ்ச்சியில் மத்திய அரசு எடுக்கும் முடிவுகள், சட்டத் திருத்தங்கள் ஆகியவை பற்றியெல்லாம் விவாதிக்கிறார்கள். சம்பந்தப்பட்டவர்களையும் அழைத்து பளிச் கேள்விகள் வீசுகிறார்கள். மாநில அளவிலும் இது போன்று சட்ட சபை மற்றும் சமூக பிரச்னைகள் குறித்து விவாதிக்கவும், தொடர்பு உள்ளவர்களைக் கேள்வி கேட்கவும், தொலைக்காட்சியில் ஒரு அரங்கம் உருவாக்கினால் நன்றாக இருக்கும்.

● கேபிள் சானல்களில் எங்கெங்கும் சினிமா ஆக்கிரமிப்பு. தூர்தர்ஷனாவது ஒன்றைச் செய்யலாம். காலையில் ஒளிபரப்பாகும் இசையரங்கத்தை இரவுக்கு மாற்றி விடலாம். விடியற்காலையில் ஜெய் ஹனுமான், ஓம் நமச்சிவாய போன்ற தொடர்களை ஒளிபரப்பலாம். குழந்தைகள் சீக்கிரம் எழுந்திருக்க இது பெரும் உதவியாக இருக்கும்.

தொகுப்பு: ஜி.எஸ்.எஸ்.



காதில் விழுந்தவை

பகுதியில் பரகராமர் ஈஸ்வரர் ஆலயம் என்ற பழமையான ஆலயம் இருக்கிறது. இந்த ஆலயத்துக்கு தக்கார் முறைப்படி நியமிக்கப்பட்டாலும், லோக்கல் த.மா.கா எம்.எல்.ஏவுக்கு ஏகப்பட்ட எரிச்சல். ஆலயத்தை ஒட்டி உள்ள கடை

''கூட்டுறவுத் துறையின் ஜனநாயகம் தழைத்தோங்க தேர்தலை நடத்தினார் கலைஞர். ஆனால் உடன்பிறப்புகளின் நோக்கம் வேறு விதமாக இருக்கிறதே!'' என்றார் ஓர் அதிகாரி.

● ஆடிட்டர் தாக்கப்பட்ட விவகாரத்தில் தி.மு.கவில் யாரும் வாய் திறக்கக் கூடாது என்பது உடன்பிறப்புகளுக்குக் கலைஞர் போட்டுள்ள 144. தனிப்பட்ட முறையில் பேசும்போது 'ஜெயலலிதாவை அவசரப்பட்டு கைது செய்து அவருக்கு அனுதாபம் வருவது போல் நடந்து கொள்ளக் கூடாது'' என்று ஒரே குரலில் சொல்கிறார்கள். ''போயஸ் தோட்டத்தில் இப்படியெல்லாம் நடக்குமா?'' என்று வியப்பவர்களுக்கு ''சந்தேகம் இருந்தால், தென்சென்னையின் முன்னாள் அ.தி.மு.க பாராளுமன்ற உறுப்பினரைக் கேட்டுப் பாருங்களேன்'' என்று சொல்கிறார் ஒரு மூத்த பத்திரிகையாளர்.

# ஊழியர்கள் பாராட்டும் அமைச்சர்!

● பரமசிவன் கழுத்துப் பாம்பாக இருந்தாலும் தலைமைச் செயலக ஊழியர்களுக்கும் பல பிரச்னைகள் உண்டு. நிதி மற்றும் சட்ட இலாகாவில் பணிபுரியும் ஊழியர்களுக்குத் தனி சீனியாரிட்டி நிர்வகிக்கப்பட்டு பதவி உயர்வு கொடுக்கப்பட்டு வந்தது. இதன் காரணமாக அந்த இலாகாக்களில் பணி புரிபவர்கள் விரைவில் பதவி உயர்வு பெறுவதும், மற்ற துறைகளைச் சேர்ந்த தகுதியுள்ளவர்களுக்கு விரைவில் பதவி உயர்வு கிடைக்காத நிலையும் இருந்து வந்தது. இந்த வேறுபாட்டைக் களைந்து ஏற்றத் தாழ்வுகளை நீக்கும் வகையில் தலைமைச் செயலக அனைத்து ஊழியர்களுக்கும் ஒரே சீனியாரிட்டி லிஸ்ட் நிர்வகிக்கப்பட வேண்டும் என்பது ஊழியர்களின் நீண்ட நாளைய கோரிக்கை. பலமுறை பலரிடம் சொல்லியும் தீர்வு காணாத இந்தப் பிரச்னைக்குச் சமீபத்தில் அமைச்சர் வீரபாண்டியார் மூலம் தீர்வு கிடைத்ததைப் பற்றிக் குறிப்பிட்டுச் சொல்கிறார்கள் ஊழியர்கள். பிரச்னையைச் சரிவர புரிந்து கொண்டு முதல்வரிடம் எடுத்துக் கூறி, கோரிக்கையை நிறைவேற்றி வைத்தாராம் அமைச்சர்.

● சென்னை அயனாவரம்

களில் ஒன்றைத் தமது ஆதரவாளருக்கு ஒதுக்காததால், எரிச்சல் கோபமாக மாறியது. விளைவு? தக்கார் அலுவலக அறையைத் தம் ஆட்கள் மூலம் பூட்டி விட்டாராம்! விஷயம் போலீஸுக்குப் போனது. இன்ஸ்பெக்டர் வந்து பூட்டை உடைக்க வேண்டியதாகி விட்டது. இப்போது எம்.எல்.ஏ.வின் கோபம் இன்ஸ்பெக்டர் மேல் பாய்ந்திருக்கிறது!

● வீடு கட்ட கடன் வழங்கும் கூட்டுறவுச் சங்கங்களுக்கு, மாநில அளவில் இணையம் (Federation) உள்ளது. மாநில அரசு மற்றும் ஹட்கோவின் நிதியுதவியைப் பெற்று இந்த இணையம் கூட்டுறவுச் சங்கங்களுக்கு நிதியுதவி செய்யும். இதற்குப் பல விதிகள் இருக்கின்றன. ஆனால் சமீபத்தில் பெரம்பூர் பகுதியில் உள்ள ஒரு கூட்டுறவுச் சங்கத்துக்கு விதிகளைப் புறக்கணித்து விட்டு, முப்பது லட்ச ரூபாய், முதலில் கைமாற்றாக சஸ்பென்ஸ் கணக்கில் கொடுக்கப்பட்டதும் பின்னர் அந்தத் தொகையை நிர்ணயிக்கப்பட்டதற்குக் குறைவான வட்டிக்குக் கடனாக மாற்றியது பற்றியும் தான் கூட்டுறவுத் துறையில் முணுமுணுக்கிறார்கள்.

● மார்ச் 31ம் தேதிக்குள் உ.பி. சகோதரி மற்றும் 'கரன்' சகோதரர்கள் மீதுள்ள அமலாக்கப் பிரிவு வழக்குகளுக்கு ஒரு முடிவு காண வேண்டுமென்று அம்மா நச்சரிக்கிறாராம். விழி பிதுங்கி 24 மணி நேரமும் அதே சிந்தனையில் செயல்பட்டுக் கொண்டிருக்கிறாராம் கடம்பூரார்.

● ஆபத்து! ஆபத்து! தி.நகர் பனகல் பூங்காவில் உள்ள மரங்களுக்கு ஆபத்து. நூற்றுக்கணக்கான மரங்கள் வெட்டப்பட்டு, இல்லையில் உள்ள பாலிகா பஜார் போன்ற நிலத்தடி கடைகள் கட்ட இருக்கிறதாம் மாநகராட்சி.

— சஞ்சயன்



## கோடநாடு எஸ்டேட்

**கோ**டநாடு எஸ்டேட்! ஒன்றா? இரண்டா? கிட்டத்தட்ட 1000 ஏக்கர் தேயிலை எஸ்டேட் அல்லவா! ஊழல் விவகாரத்தில் மாட்டி, நீதிமன்றத்துக்கு நடையாய் நடந்து கொண்டிருந்த காலத்தில் ஜெ-சசியின் முடக்கப்பட்ட சொத்துக்களில் இதுவும் ஒன்று. அஸ்திவாரக் கட்டடம் - பேஸ் மட்டத்துடன் நின்று போயிருந்த அவர்களின் சொகுசு பங்களா தற்போது 'கிடுகிடு'வென மேலெழுவதாகச் செய்தி கேட்டு அங்கே ஓடினோம்.

நீலகிரி மாவட்டம் கோத்தகிரியிலிருந்து சுமார் பதினேழு கி.மீ பயணித்தால் எட்டுவது கோடநாடு. ஒரு குட்டி கிராமம். கோடநாடு எஸ்டேட் ஒன்று மட்டும்தான் இந்தக் கிராமத்தின் ஒரே சொத்து. முழுக்க முழுக்க தேயிலைத் தோட்டங்கள். வரிசையாய் செக் போஸ்ட்கள் போல், வாயிற் கதவுகள். உள்ளே அந்நியர் யாருக்கும் அனுமதியில்லை!

ஊருக்குள் ஜெயலலிதா எஸ்டேட் என்றே பேச்சு. இதுவரை இங்கு ஜெயலலிதா வந்து பார்த்ததில்லையாம். அம்மா வந்து எஸ்டேட் வாங்கினதாகப் பேச்சு அடிபட்ட சமயம், மலை முகடுகளையும், வியூ பாயிண்டையும் அடிக்கடி ஒரு ஹெலிகாப்டர் சுற்றி வருமாம். 'அம்மா வந்து இடத்தைப் பார்த்துட்டுப் போறாங்க' என்றே சிலாகிப்பார்களாம் மக்கள்!

"மூணு வருஷம் முன்னால அம்மா பதவி இறங்கினப்ப ஒரு பெரிய தண்டோராவே போட்டாங்க. இந்தச் சொத்தை யாரும் வாங்கக் கூடாது விற்கக் கூடாதுன்னு! அதனால கட்டடம் கட்டுவதை நிறுத்திட்டாங்க. இப்ப ஒரு எலக்ஷன் வந்து பி.ஜே.பி ஆட்சி வந்துதே... அதுல அம்மா ஜெயிச்சதுலயிருந்துதான் மறுபடி இங்கே ஹெலிகாப்டர் ரவுண்ட் அடிக்குது. கட்டடங்கட்டறதுக்குப் பொருளெல்லாம் லாரி லாரியா உள்ளே போகுது. வெளியூர்களிலிருந்து ஏகப்பட்ட கொத்தனார்கள்..."

- அக்கம் பக்கம் பார்த்துக்கொண்டே நம்மிடம் பேசின பெண்மணி ஏற்கெனவே கோடநாடு எஸ்டேட்டில் பணிபுரிந்தவராம். பல பேரை வயது காரணம் காட்டி, அல்லது வேறு காரணங்கள் காட்டி வேலையை விட்டு வெளியேற்றி விட்டனர். உள் விவகாரம் வெளியே தெரியக்கூடாது என்பதால் வேறு கட்சி சார்ந்தவர்களுக்கு கட்டாய ஓய்வு என்றார்.

**கி**ரிமநாடு, கொரமேடு, பாணக்காடு என்று மூன்று பிரிவுகளாய் பேர் சொல்லி, பழங்காலத்தில் அழைக்கப்பட்ட கோடநாடு எஸ்டேட் பெயர் மாற்றம் பெற்றது இப்போதுதான். வார்விக், பாணக்காடு, கோடநாடு டிவிஷன் என மூன்றும் சேர்ந்தே கோடநாடு எஸ்டேட் என வழங்கப்படுகிறது. 1868-ம் வருடம் ஸ்தாபிக்கப்பட்டு பிரிட்டிஷ்காரர்களின் கையிலிருந்து மாறி மாறி இப்போது சசிகலா - சுதாகரன் கைக்கு வந்துள்ளதாம்.

"எங்களுக்குத் தெரிஞ்சு 20 வருஷமா எஸ்டேட் லாஸ்ல ஓடிட்டிருந்தது. அப்ப ஆளுக்கு தினக்கூலி 45 ரூபாய். இப்ப இவங்க எடுத்த பின்னாடி டீக்கு நல்ல விலை. நல்ல ஓட்டம். நிறையப் பேர் வேலை செய்யறாங்க (1000 பேர்). நல்ல பராமரிப்பு!

"ரொம்ப காலமா வராம இருந்த சசிகலா அம்மா இப்ப ஒரு வருஷமா அடிக்கடி வர்றாங்க. இந்த ஆறேழு மாசத்துல மட்டும் நாலஞ்சு தடவை வந்துட்டாங்க... கட்டடம் கட்டறதைப் பார்க்கத்தான்! போன தடவை - ஒரு மாசமிருக்கும் - சாயங்காலம் நாலு மணிக்கு வந்தாங்க. ஆறு கார்ல ஆளுக. உள்ளே யாரு என்னன்னே தெரியல.

# சசிகலா வந்தார் நிலை வாசல் வைத்தார்!

ஊர் ஜனமே ஓடி வந்து பார்த்தது. காலையில நாலு மணிக்கு கட்டடத்துக்கு நிலவு (வாசக்கால்) வச்சுட்டுப் போயிட்டாங்க. வேற விவரம் தெரியலை'' என்கிறார்கள் எஸ்டேட் வேலை பார்ப்போர் சிலர்.

உள்ளூர் கட்சிப் பிரமுகர் ஒருவரைச் சந்தித்த போது, ''ஆமா சார். நீங்க பாட்டுக்குப் போய் எழுதிடுவீங்க. இங்கே நாங்க குடியிருக்க வேண்டாம்? தொழில் பார்க்க வேண்டாம்? என் பேரைப் போடாம இருக்கிறதுன்னா சில விவரம் சொல்றேன்'' என்ற பீடிகையுடன் ஆரம்பித்தார்.

''இதை முடக்கி வச்சு இரண்டு வருஷத்துக்கு மேல ஆச்சு. மாஸ்டர் பிளான் சட்டம் (மாடி கட்டும் தடைச் சட்டம் - நீலகிரிக்கு மட்டும்) போட்டு விட்டு, அது ஜனங்களுக்கு மட்டும்தான் பொருந்தும்ங்கற மாதிரி அப்பவே தன்னோட ஆட்சியில அடுக்கு மாடிக் கட்டடம் கட்ட ஆரம்பிச்சாங்க. அந்தச் சட்டத்தை கலைஞர் அரசு ரத்து செஞ்சது. கோர்ட்ல கேஸ், சொத்து முடக்கம்ன்ன உடனே வேலைய நிறுத்தினவங்க, இப்ப எம்.பி தேர்தல்ல ஜெயிச்சவுடனே தைரியமா கட்ட ஆரம்பிச்சுட்டாங்க. கட்டட வேலைக் காரங்க மட்டும் நூத்துக்கணக்குல. தி.மு.க. காரங்க, அவங்க சொந்தக்காரங்க யாராவது அங்க வேலைல இருந்தா விவரம் தேடி வேலைய விட்டு நிறுத்திடறாங்க. கட்டடம் மனமளன்னு ஆயிட்டிருக்கு. வேறென்ன வேணும் உங்களுக்கு?'' என்று படபடவென்று பொறிந்து விட்டுப் போய் விட்டார். அவருக்கும் உள்ளூர பயம்!

பேருந்தில் எஸ்டேட் பக்கம் ஒருவர் ஏறினார். கட்டடத் தொழிலாளியாம். கொஞ்சம் கொஞ்சமாய்ப் பேச்சுக் கொடுத்து விஷயத்தைக் கறந்தோம்.

''125 அறைகள் கட்டறாங்க சார். எதுக்குன்னு புரியலை. லாட்ஜ் கட்டி, வெளிநாட்டுக்காரங்க வந்து தங்கற மாதிரின்னு பேசிக்கிறாங்க. ஹெலிகாப்டர் எறங்கற மாதிரி, சினிமா தியேட்டர், விளையாட்டு மைதானம்ன்னெல்லாம் சொல்றாங்க. எங்களுக்கென்னங்க தெரியும். இப்படிக் கட்டுன்னு இஞ்சினியர் சொன்னா கட்டறோம். இடின்னு சொன்னா இடிக்கிறோம். சசிகலா அம்மா வந்தது உண்மை. வாசல் நிலவு வச்சது நிஜம். இரண்டாவது மாடி வேலை ஆயிட்டிருக்கு!''

கோத்தகிரியிலிருந்து: **'கேயெஸ்வி'**



''உன் மனதில் எனக்கு இடம் கொடு கண்ணே!''
''அதை ஏற்கெனவே ஒருவருக்கு வாடகைக்கு விட்டு விட்டேனே!''
''அவுட் ஹவுஸிலாவது தங்க இடம் தரக்கூடாதா?''
– வெ. ராஜாராமன்



சூப்பர் மார்க்கெட்டில் புடைவை விற்கும் பகுதிக்கு ஒரு பெண் அவசரமாக வந்து விற்பனையாளரைப் பார்த்துக் கேட்டாள்: ''இங்கே என் கணவர் மூன்று மணிக்கு வருவதாகச் சொன்னார், எனக்கு நேரத்தோட வர முடியலே, மணி ஐந்து ஆயிட்டுது.. அவர் இங்கே வந்தாரா?''

கடைக்காரர் கேட்டார் : அவர் அடையாளம் எதுவுமே சொல்லாமக் கேட்கறீங்களே? அவர் முகம் எப்படி இருக்கும்?

இருப்புக் கொள்ளாமல் அவள் சொன்னாள் : அவர் முகம் இந்நேரம் சிவந்திருக்கும்!

'சிரியுங்கள்' நூலிலிருந்து
– மலர் சூர்யா

''அந்தப் போலீஸ்காரர் மாமூல் நிறைய வாங்கிட்டிருக்கார்னு நினைக்கறேன்...''

''எப்படி சொல்றே?''

'''கேடி வாழ்ந்தால் கோடி நன்மை'ங்கிறாரே!''

– வெ. ராஜாராமன்



## தலைநகரச் செய்திகள் :

மத்திய நிதியமைச்சர் யஷ்வந்த் சின்ஹாவின் ஆலோசகராயிருந்து வெளியேற்றப்பட்ட மோகன் குருசாமியைச் சந்தித்தோம். ஹார்வர்டில் படித்த இந்தத் தமிழர், நிதியமைச்சர் மீது மட்டுமல்ல; வேறு பலரின் மீதும் ஊழல் குற்றச்சாட்டுகளை அடுக்கிக் கொண்டே போகிறார்.

''ஒரு டன்னுக்கு 247 டாலர்களாயிருந்த உருக்கு விலையை 302 டாலர்களாக உயர்த்தியதற்கு என்ன காரணம் தெரியுமா? மத்திய அமைச்சர்கள் ராமகிருஷ்ண ஹெக்டே, நவீன் பட்நாயக், யஷ்வந்த் சின்ஹா மற்றும் பிரதமர் வாஜ்பாய் ஆகியோர் கூட்டுச் சேர்ந்து உருக்காலை அதிபர்களுடன் நடத்திய 'டீல்'தான்!'' என்கிறார்.

''பிரிட்டிஷ் – அமெரிக்கன் புகையிலைக் கம்பெனிக்கு (BAT) இந்திய புகையிலைக் கம்பெனியை (ITC)த் தாரை வார்த்து விடக் கூடாது என்று நான் எவ்வளவோ மன்றாடினேன். ஆனாலும் யாரும் கேட்கவில்லை. வேறு வழியில்லாததால் ஒரு ஷேரை 2,500 ரூபாய்க்கு விற்கலாம் என்று கோப்பில் குறிப்பெழுதினேன். ஆனால் அவர்கள் வெறும் 800 ரூபாய்க்கு ஷேர்களை விற்றார்கள். இதனால் அரசுக்கு 9,000 கோடி ரூபாய் நஷ்டம் ஏற்படச் செய்து விட்டார் நிதியமைச்சர். இதைக் கேட்டதாலேயே என்னை 'தங்கையா' (சிக்கிய முறைப்படி ஜாதிப் பிரஷ்டம் செய்யப்பட்டவர்களைக் குறிப்பிடும் சொல்) வாக்கி விட்டார்கள்!'' என்று குற்றச்சாட்டுகளை அடுக்கும் இவர் செய்யும் விமர்சனம் : வாஜ்பாயி – ஹிந்துஜாக்களின் கைக்கூலி; அத்வானி – எஸ்ஸார் மற்றும் ருயாக்களின் அடிமை; பிரமோத் மஹாஜன், சின்ஹா, ஹெக்டே, பட்நாயக், பெர்ணாண்டஸ்


• யஷ்வந்த் சின்ஹா


• கடம்பூர் ஜனார்த்தனம்

பத்திரிகையாளர்கள் மற்றும் தமிழ்ப் பத்திரிகையாளர்கள் மட்டுமே அழைக்கப்பட்டதால் தமிழிலேயே பேசினார். செய்தி கேள்விப்பட்டு வந்த தமிழரல்லாத மற்ற சில பத்திரிகையாளர்கள் இதனால்

# கோபத்தில் குருசாமி!


• மோகன் குருசாமி

ஆகியோர் கோடிக் கணக்கில் ஊழல் செய்தவர்கள்!

இவர் நம்மிடம் சொல்லாவிட்டாலும், தெரிந்த விஷயம் ஊழல் தொடர்பான பல ஆவணங்களை சரத்பவாரிடம் இவர் தந்து விட்டார் என்பதுதான்! வரும் ஏப்ரலில் ஹார்வர்ட் செல்லப் போவதாகக் கூறும் இவர், மீண்டும் ஏதாவதொரு தொழில் நிறுவனத்தில் வேலைக்குச் சேரவும் உத்தேசித்திருக்கிறாராம்.

● நீதிபதி சிவப்பா தலைநகருக்கு வந்து, உச்ச நீதிமன்றத் தலைமை நீதிபதி தமக்குச் சாதகமாக ஏதாவது சொல்லுவார் என்று எதிர்பார்த்துக் காத்திருந்தார். ஆனால் தலைமை நீதிபதியோ, 'ஏற்கெனவே ஜனாதிபதி ஒரு முடிவெடுத்து விட்டதால், பிரச்னையைப் பெரிதாக்க வேண்டாம்!' என்று சொல்லிவிடவே, அதிர்ச்சியோடு அடுத்த விமானத்தைப் பிடிக்கக் கிளம்பி விட்டார்!

● கடம்பூர் ஜனார்த்தனம் தமது அலுவலகத்தில் ஒரு பிரஸ் மீட் நடத்தினார். தமிழ்க்கார ஆங்கிலப் பத்திரிகையாளர்கள் ... கடுப்பாகிப் போனார்கள். சரி, பிரஸ்மீட்டில் அப்படியென்ன சொன்னார் என்கிறீர்களா? இந்தியன் வங்கி ஊழல் விவகாரத்தில் மூப்பனார் மீதும் பிறர் மீதும் சி.பி.ஐ. விசாரணை துவங்கி விட்டதாகச் சொன்னார். நஷ்டப்படும் வங்கிகளை லாபமீட்டும் வங்கிகளோடு இணைக்கப் போவதாகவும் சொன்னார்!

● பாண்டிச்சேரி முதல்வர் ஆர்.வி. ஜானகிராமன், கடந்த தேர்தலில் வெற்றி பெற்றதற்குக் காரணம், செத்துப் போனவர்களும் ஊரைவிட்டே சென்றவர்களும் அந்தத் தொகுதியிலேயே குடியிருக்காதவர்களும் வந்து வோட்டுப் போட்டதுதான்! எனவே, அவரது வெற்றி செல்லாது என்று அறிக்கைக் கோரி, முன்னாள் முதல்வர் டி. ராமச்சந்திரன் உச்ச நீதி மன்றத்தில் ஒரு வழக்குத் தொடுத்தார். வழக்கை ஏற்றுக் கொண்ட உச்ச நீதி மன்றம், அதை விசாரிக்கும் பொறுப்பைச் சென்னை உயர் நீதி மன்றத்துக்குக் கொடுத்திருக்கிறது! ◉

— டெல்லி வெங்கட்

# ஜோக்ஸ்!

"அரசியல்வாதிங்க வந்து மாலை போட்டு கௌரவிக்கிற மாதிரி என்னை பண்ணிட்டாரு அவரு?"

"புதுசா செருப்பு டிசைன் பண்ணியிருக்காரு. எவ்வளவு அடிச்சாலும் வெளியே தெரியாது. பூரா உள்காயம்!"

"தரகரே, நான்தான் சொன்னேனே... ஆபத்தான வேலைல இருக்கிற மாப்பிள்ளை கூடாதுன்னு! அப்புறம் ஆடிட்டர் ஜாதகத்தைத் தூக்கிண்டு வந்திருக்கீர்?"

"தலைவரே, எதிர்க்கட்சியில நீங்க ஒருத்தர் மட்டுந்தான் தைரியமா, திட்டவட்டமா அவங்க செருப்பால அடிச்சிருப்பாங்கன்னு சொல்லியிருக்கீங்க. எப்படி தலைவரே?"

"கூட இருந்தபோது வாங்கிப் பழக்கமாச்சே!"

"அன்பு மிக்க மாணவர்களே! நீங்களெல்லாம் வெற்றிகரமா சி.ஏ. முடிச்சு ஆடிட்டர் ஆகப் போற நேரம்... இன்னும் ஒரே ஒரு பாடம்தான் பாக்கி இருக்கு. கொரில்லா போர் முறைல நாலு வாரம் பயிற்சி முடிச்சிட்டா தைரியமா தொழில் தொடங்கலாம்."

ஜோக்ஸ் :
— 'மாதுரி'



1999 மார்ச் 28
வெகுதான்ய பங்குனி 14
மலர் : 57
இதழ் : 35

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## செருப்படி அரசியல்!

உடம்பு முழுவதும் கட்டுகளுடன், கண்ணில் கசியும் ரத்தக் காயத்துடன் பரிதாபமாக மருத்துவமனையில் கிடக்கிறார் ஆடிட்டர் ராஜசேகரன்.

போயஸ்தோட்டத்தில் தாம் அனுபவித்த கொடுமையே தம்மை இந்த நிலைமைக்குக் கொண்டு வந்து சேர்த்தது என்று அவர் காவல்நிலையத்தில் புகார் செய்ததோடு நீதிபதியிடமும் வாக்குமூலம் கொடுத்திருக்கிறார். மருத்துவமனையில் தம்மைப் பேட்டி காணவந்த பத்திரிகையாளர்களிடமும் அதையே கூறியிருக்கிறார்.

ராஜசேகரன் சொல்வது அத்தனையும் பொய் என்கிறார் ஜெயலலிதா!

ராஜசேகரன் படிப்படியாக நிகழ்ச்சிகளை விவரிப்பதைப் படிக்கும்போது நமக்கும் நம்புவதற்குக் கஷ்டமாகத்தான் இருக்கிறது. இவ்வளவு கேவலமாகக் கூட மனிதர்கள் நடந்து கொள்ள முடியுமா? என்று அவநம்பிக்கை கலந்த அதிர்ச்சி ஏற்படுகிறது. எனினும் கண்ணுக்கு மெய்யான காயங்களுடன் துடித்துக் கொண்டிருக்கிறார் ராஜசேகரன்!

மாஜிஸ்திரேட்டிடம் தாம் தந்த வாக்குமூலம் பொய்யானது என்று நிரூபணமானால் அதன் விளைவுகள் என்னவாயிருக்குமென்பது ஒரு ஆடிட்டருக்குத் தெரியாமலிருக்க முடியாது - பொய் வாக்குமூலம் தந்தவர் கிரிமினல் குற்றத்துக்கான தண்டனையைப் பெறுவார்.

அப்படி கிரிமினல் குற்றத்துக்கான தண்டனை கிடைக்கும் என்று தெரிந்த யாரேனும் இவ்வளவு விவரமாக ஒரு பொய்யை ஜோடித்துச் சொல்வார்களா? வலியச் சென்று உடம்பு முழுதும் அடிபட்டுக் கொள்வார்களா? அல்லது அடி தடியை வாங்கிக் கொண்டு ஆஸ்பத்திரியில்




அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கும் ஒருவருக்கு இத்தகைய விபரீத கற்பனைகள் வருமா?

ஜெயலலிதா சொல்வதுபோல் ராஜசேகரன் பேசுவது உண்மை அல்ல என நாம் ஏற்க வேண்டுமானால், ஜெயலலிதா பேசுவது மட்டும் உண்மை என்று எப்படி ஏற்பது?

அவர் சொல்வது உண்மையாயிருப்பின், குற்றம் சாட்டப்பெற்ற மகாதேவன் (சசிகலாவின் அண்ணன் மகன்) ஏன் தலைமறைவாக வேண்டும்? காவல்துறையினர் அவரைச் சல்லடை போட்டுத் தேட திருச்சி, தஞ்சை என்று ஏன் அலைய வேண்டும்...?

தமது வாதத்தை மட்டும் உண்மை என்று நம்பி ஏற்க வேண்டும் என ஜெ எதிர்பார்ப்பது அவர் மக்களை முட்டாள்களாக மதிப்பதால்தான்.

"ராஜசேகரன் போயஸ்தோட்டம் பக்கமே வரவில்லை; அவர் வந்ததாகச் சொல்வதற்கு யார் சாட்சி...?" என்று கேட்கிறாரே ஜெயலலிதா, வேலிக்கு சாட்சி சொல்ல ஓணானையா அனுப்ப முடியும்! போயஸ்தோட்டத்தைச் சேர்ந்த யார்தான் ஜெயலலிதாவுக்கு எதிராக சாட்சி சொல்வார்கள்!

அ.தி.மு.க தலைவியின் அகம்பாவத்தையும் தோழியின் இணை அதிகாரப் போக்கையும் நன்கு அனுபவித்த முன்னாள் அமைச்சர்கள், கட்சிக்காரர்கள் முதலியோர் தங்களுக்கு ஏற்பட்ட துர்க்கதியைப் பிரகடனப்படுத்த, அக்கட்சியிலிருந்து வெளியேறினால்தான் துணிவு பெறுகிறார்கள். அந்த அளவுக்கு 'சர்வாதிகாரப் போக்கு நிலவுகிறது ஜெயலலிதாவிடம்.

வழக்குரைஞர்கள் விஜயன், ஷண்முகசுந்தரம் தாக்குதல், சந்திரலேகா மீது ஆஸிட் வீசப்பட்ட வழக்கு எனப் பல கொடூரமான அடிதடி வழக்குகளில் ஏற்கெனவே ஜெயலலிதாவின் பெயர் தொடர்புபடுத்தப்பட்டுள்ளது. இன்று ஜெயலலிதாவுக்கு வக்காலத்து வாங்கும்விதமாக, 'ராஜசேகரன் பேசுவது கற்பனை' என்று சொல்லும் சுப்ரமணிய சுவாமிகூட ஒரு காலகட்டத்தில் ஜெயலலிதாவின் கிரிமினல் நடவடிக்கைகளைப் பட்டியலிட்டு வழக்கு தொடுத்தவரல்லவா...?

பி.ஜே.பி.யுடன் கூட்டணி அமைத்து வென்ற பிறகு, அரசியல் நிலவரம் ஜெயலலிதாவுக்குச் சாதகமாகிவிட்டதால் இன்று வாய் கூசாமல் வேறு விதமாகப் பேசுகிறார் சுவாமி.




ஜெயலலிதாவும் மத்திய அரசின் 'குடுமி' தன் பிடியில் இருக்கும் தைரியத்தில் எதற்கும் துணியக்கூடியவர்தான். தமது பேரிலுள்ள வழக்குகளை நேருக்கு நேர் சந்திக்காமல் இழுத்தடிக்க அவர் மேற்கொண்டிருக்கும் பகிரங்கமான நடவடிக்கைகளும் அதற்கு பி.ஜே.பி ஆட்சி கைகட்டி வாய் பொத்தி அளித்துவரும் ஒத்துழைப்பும் சிரிப்பாய்ச் சிரிக்கின்றன.

இந்த நிலைமையில் தாம் சொல்வதுதான் உண்மை, ராஜசேகரன் சொல்வது பொய் என்று ஜெயலலிதா பேசினால், அதை யார் நம்புவார்கள்?

நிஜமாகவே தாம் குற்றமற்றவராயின் அதை நிருபிக்க அவர் முன் வருவாரா...? பொய், கற்பனை, வேண்டுமென்றே போடப்பட்ட பழி, கருணாநிதியின் சூழ்ச்சி என்றெல்லாம் அறிக்கை விட்டுக் கொண்டிராமல் விசாரணைக்கு ஒத்துழைப்பாரா...?

ராஜசேகரனுக்கு மலர்ச்செண்டு அனுப்பி அனுதாப நாடகம் நடத்துவதைக் காட்டிலும் விசாரணைக்கு ஒத்துழைப்பதன் மூலம் அவருக்கு உதவட்டுமே!

ஆனால், ஜெயலலிதா நிச்சயமாக அத்தகைய ஒத்துழைப்பைத் தரப் போவதில்லை.

இது விஷயமாக தமிழக முதல்வர் கூறியிருப்பது போல், என்ன நடந்தது என்பதை மக்கள் புரிந்து கொள்வார்கள்.

ராஜசேகரன் ஜெயலலிதாவின் முன்னாள் ஆடிட்டர் என்பது வெட்டவெளிச்சமானது. ஜெயலலிதாவின் வருமான வரி கணக்குகள் சீராக இல்லை என்பதும் எல்லாருக்கும் தெரியும். போயஸ்தோட்டத்தில் ராஜசேகரனுக்கு முன்பு கிடைத்த மரியாதை வேறு விதமானதாக இருந்திருக்கும். இரண்டும் இரண்டும் நான்கு என்று கணக்குப் போடுவது கஷ்டமில்லை.

காவல் துறையின் புலனாய்வும் சுறுசுறுப்பும் நீதித் துறையின் ஒத்துழைப்பும் இணைந்து குற்றவாளிகளுக்குக் காலதாமதமாகவேனும் தண்டனை பெற்றுத் தரலாம்.

ஆனால், தமிழக அரசியல் நாகரிகத்துக்குக் கிடைத்துள்ளதென்னவோ செமத்தியான செருப்படி! நிகழ்ச்சியின் அதிர்ச்சியிலிருந்து மீளலாம். ஆனால் தமிழக சரித்திரத்தில் அது விட்டுச் செல்லும் வடு மாறப் போவதில்லை.

நடந்தாய் வாழி காவிரி என்னும் கவித்துவ வார்த்தையெல்லாம் மாறிப்போய் 'சிதைந்தாய் சிறிய காவிரி' என்று சொல்லுமளவுக்கு ஆகிவிட்டது!

நமது பிற்காலச் சந்ததிக்கு அகண்ட காவிரி என்பது கற்பனையாய், பழங்கதையாய் ஆகிவிடக் கூடும்!



அகண்ட காவிரியின் வட கரையிலிருந்து தென் கரையைப் பார்த்தால் ஆற்றின் எல்லாப் பகுதியிலும் அந்தமான் நிக்கோபார் தீவுகள் வடிவத்தில் ஆங்காங்கே பச்சைப் பசேலென காட்டாமணக்குச் செடிப் புதர்கள். இரு கரையோரப் பகுதி மக்களும் இதனை நெய்வேலி காட்டாமணக்குச் செடி என்கிறார்கள். நெய்வேலிக்கும் காட்டாமணக்குச் செடிக்கும் என்ன சம்பந்தம்? கிராமவாசிகள் யாருக்கும் பெயர்க்காரணம் தெரியவில்லை.

இந்த காட்டாமணக்குச் செடி தாவர வகைகளிலேயே மிகவும் விசித்திரமான உற்பத்தி அமைப்புக் கொண்டது.

சுமார் ஓர் அடி நீளமுள்ள, இலைகள் எதுவுமற்ற வெறும் காட்டாமணக்குக் குச்சி மட்டும் ஆற்று மணலில் 'சும்மா' கிடந்தால் போதும். அந்த ஆற்று மணலையே விளைநிலமாக்கி வெள்ளமாய் ஓடி வரும் காவிரி நீரை உறிஞ்சிக் கொண்டு, கொஞ்சம் கொஞ்சமாய் வேர் பரப்பி அடர்த்தியாய் வளர்ந்து செழிப்புடன் படர்ந்துவிடும். இந்தச் செடிக்கு தண்ணீரைத் தவிர வேறு எந்த உணவும் கிடையாது.



• வி. ராஜாராம்



• காந்திப்பித்தன்

தமிழக வயல்களுக்கு வந்தடைய வேண்டிய நீர், காட்டாமணக்குச் செடிகளுக்கே முதலில் சத்துணவாய்ப் பாய்கிறது! மீதமுள்ள நீரே ஆற்று மணலில் மௌனமாய் நகர்ந்து பயிர்களை அடைகிறது.

காவிரியின் வரலாறு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் முந்தையது. அப்படியானால் இந்தக் காட்டாமணக்குச் செடிகள் காவிரியின் நடுவே எந்த ஆண்டிலிருந்து குடியேறி இருக்கும்? ஏறத்தாழ பதினைந்து வருடங்களுக்கு முன்னர் இந்தச் செடிகள் சுத்தமாய்க் கிடையாது என்கிறார்கள் கரையோரப் பகுதி மக்கள்.

ஒரு பத்துப் பதினைந்து வருட கால அளவில் மிகவும் அபரிமிதமான வகையில் இந்தச் செடிகள் அசுர வேகத்தில் வளர்ந்து புதர்களாய் மண்டிப் போயின. மண்டிய இடங்களில் எல்லாம் ஆற்று மணல் கெட்டியான மணல் திட்டாய் மாற்றம் பெற்றுவிட்டது. இப்பொழுது மணல் திட்டுக்களைச் சுற்றிக் கொண்டு வரிசையாய் சின்னச் சின்ன வாய்க்கால் வடிவத்தில் தண்ணீர் தவழ்ந்து போகிறது. அகண்ட காவிரி சிதைந்து போகும் அவலம் நம் கண்முன்னே நடந்து கொண்டிருக்கிறது.

திருச்சியிலிருந்து குளித்தலை வழியாக கரூர் செல்லும் பேருந்தில் பயணம் செய்வோர்க்கும், திருச்சியிலிருந்து குணசீலம், முசிறி வழியாக சேலம் செல்லும் பேருந்தில் பயணம் செய்வோர்க்கும், இந்தக் காட்டாமணக்குச் செடிகள் காவிரியின் நடுவே காண்பதற்குக் 'கண்கொள்ளாக் காட்சியாய், பசுமையாய்' இருக்கும்!

# காவிரியில்-காட்டாமணக்குச் செடிப் புதர்கள்! களையெடுப்பது எப்போது?



• காட்டாமணக்குச் செடிகளின் ஆதிக்கம்.

ஆனால் இதை இப்படியே விட்டு விட்டு நமக்கென்ன என்று இருந்துவிட்டால் காவிரி காணாமல் போய்விடும்!

போதாக்குறைக்கு இந்தச் செடிகளின் அநியாய ஆக்கிரமிப்பினால் கெட்டிமணல் திட்டுகள் உருவாகி, காவிரி மேடு தட்டி உயர்ந்து கொண்டே வருகிறது.

ஈரோடுக்கு மேற்கே காவிரி, பாறைகளின் இடையே புகுந்து குதித்தோடி வருவதால் இந்தச் சனியன் அங்கே மண்டவில்லை. ஈரோடுக்கு கிழக்கே ஜேடர்பாளையம் தடுப்பு அணையிலிருந்து வெளிக் கிளம்பி நல்ல மணல் வெளியில் தவழ்ந்து வரும் காவிரி தன் மேல் இந்தக் களைச் செடியை கல்லணை வரைக்கும் கிட்டத்தட்ட 125கி.மீ. நீளத்துக்குத் தழைத்து செழித்து வளர வைத்துள்ளது.

குறிப்பாக இந்தச் செடிகள் மிகவும் பயங்கர அடர்த்தியாக - அடர்ந்த காடுகள் போல் இருப்பது குளித்தலை முசிறிப் பாலத்தில் இருந்து சுமார் 30 கி.மீ. தொலைவு இருக்கும் மாயனூர் வரைக்கும்தான்.

இதற்குத் தீர்வுதான் என்ன?

பழுத்த தேசியவாதியும், திருச்சி-கரூர்- பெரம்பலூர் மாவட்ட காவிரி நீர்ப்பாசன விவசாயிகள் சங்கச் செயலாளருமான மகேந்திரமங்கலம், காந்திப் பித்தன் (பெ. ரெங்கசாமி) கூறுகிறார்:

"கர்நாடகாவோட தண்ணிக்காகப் போராடிட்டு இருக்கோம். போனாப் போவுதுன்னு கெடைக்கற தண்ணியில பத்து சதவிகிதத்தை நாம் இந்தக் காட்டாமணக்குச் செடிங்களுக்கு தாரை வாத்துத் தர்றதைத் தடுத்து நிறுத்துனாத்தான் காவிரியில ஓடி வர்ற தண்ணிய முழுசா விவசாயத்துக்குப் பயன்படுத்த முடியும். உடனடியா களையெடுக்கற வேலையிலே அரசு கவனம் செலுத்தணும்."

காந்திப் பித்தனின் கூற்று நம் சிந்தனையைக் கிளறி விடுகிறது.

இதைக் களையெடுப்பது எப்படி? களையெடுத்தபின் அதனை எங்கே கொண்டு போய்க் கொட்டுவது? இந்த மாதிரி வினாவை எம்.ஜி.ஆர். ஆட்சியின்போது நீர்ப்பாசனத்துறை அமைச்சராய் இருந்த எஸ்.எம். யூசுப் தம்மிடம் கேட்டதாக நினைவு கூர்கிறார் மகாதானபுரம் வி. ராஜாராம்.




திருச்சி மாவட்ட காவிரி நீர்ப்பாசன விவசாயிகள் சங்க துணைத் தலைவராகவும், மற்றும் பல விவசாய அமைப்புகளில் முக்கிய பொறுப்புகளில் இருப்பவரும், 1963லிருந்து காவிரி சம்பந்தப்பட்ட பிரச்னைகளில் ஆழ்ந்த கவனம் செலுத்திவருபவருமான ராஜாராம், "1924க்கு முன்னர் தலைக்காவிரியிலிருந்து கல்லணை வரைக்கும் அணைகள் இல்லை. அதன் பின்னரே கிருஷ்ணராஜசாகரும், மேட்டூர் அணையும் கட்டப்பட்டன. முன்பெல்லாம் காவிரியில் சுமார் ஒரு லட்சம் கன அடி தண்ணீர் பெருவெள்ளம் போல் பொங்கி ஓடி வரும். அதன் அசுர வேகத்தில் இந்தச் செடி செத்தைகள் எல்லாம் அடித்துக் கொண்டு போய் விடும்.

''கர்நாடகாவிலும், தமிழகத்திலும் அணைகள் கட்டப்பட்ட பின்னர் இருபத்தைந்தாயிரம் (அதிகபட்சம்) கன அடிகளுக்குள்ளேதான் காவிரியில் தண்ணீர் வருகிற வாய்ப்பு. வெள்ளம் அதிகமாய் வராததால் இந்தக் காட்டாமணக்குச் செடிகள் பச்சை மலைக் குன்றுகள் போல் வளர்ந்து விட்டன.

''வேறு எந்த நதிப் பிரதேசத்திலும் இதைப் போல ஒரு மிக நீண்ட சமதளமான பாசனப் பகுதி ஏறக்குறைய 250-300 கி.மீ. நீளத்துக்குக் கிடையாது என்கிறார்கள் உலக வங்கியினர். நமது காவிரி நதி நீர்ப்பாசனப் பகுதியை சூப்பர் டெல்டா (Super Delta) என்று குறிப்பிடுகிறார்கள் அவர்கள்.

''அதற்குக் கேடு விளைவிப்பது போல் மண்டிப் பெருகும் இந்தக் காட்டாமணக்குச் செடிகளை அழிப்பதற்கு அரசு இந்தக் கோடைக்காலப் பருவத்தில் முனைந்து செயல்படுவது நல்லது.

''இதற்கு மிக அதிகப்படியான தொகையை அரசு ஒதுக்கீடு செய்தால்தான் களையெடுப்புக்குக் காவிரியில் கால் வைக்க முடியும். இப்பொழுதே அரசு திட்டமிட்டுச் செயல்படாமல் போய்விட்டால் காவிரி, தான் தவழ்ந்து வருவதற்கு 'தனியொரு பாதை'யைத் தானே திட்டமிடாமல் இயற்கையாய் அமைத்துக் கொள்ளுமோ என்கிற அச்சம் ஏற்படுகிறது.

''ராட்சத புல்டோசர்களை விட்டு இந்தக் காட்டாமணக்குச் செடி மணல் திட்டுகளை அலாக்காகத் தூக்கி (செடியின் வேர் ஓர் அடி ஆழத்துக்குமேல் கீழே பரவுவது கிடையாது) இரண்டு கரையோரங்களிலும் சேர்த்து விட வேண்டும். கரையின் இந்தப் பக்கமும் -அந்தப் பக்கமும் சம அளவு சேர்த்துக் கொண்டு போனால் திட்டுகளும் சுத்தமாகும்; நோஞ்சான் கரையும் பலமானதாக ஆகிவிடும்.''

கடந்த வருடம் கல்லணைக்குக் கிழக்கே காவிரியின் ஐந்து கிளை வாய்க்கால்களிலும் தூர் வாரும் பணி எல்லா தரப்பினரும் பாராட்டும் வகையில் சிறப்பாக நடந்தது.

இந்த வருடம் அகண்ட காவிரியில் காட்டாமணக்குச் செடிகளைக் களையெடுக்கும் பணி தீவிரமாய்ச் செயல்படுத்தப் படவேண்டும் என்பது கரையோரப் பகுதி பொது மக்கள், காவிரி நீர்ப்பாசன விவசாயிகளின் கனவு.

கனவு மெய்ப்படுவது தமிழக அரசின் கையில்தான் இருக்கிறது.

— திருவரங்கம் திருநாவுக்கரசு

உ
சிவமயம்



குடவாசல் வட்டம் கருவேலியில் எழுந்தருளி இருக்கும்

## ஸ்ரீ சர்வாங்க நாயகி ஸமேத ஸ்ரீ சற்குணேஸ்வர ஸ்வாமி ஆலயத்தில்

## 3.4.1999 சனிக் கிழமை அன்று 2-ம் வருட

# சம்வத்ஸராபிஷேகம்

அப்பர் சுவாமிகளால் பாடல் பெற்ற கருவேலி மிகப் பெரிய க்ஷேத்திரம். இப்புண்ணிய க்ஷேத்திரம் இந்திரன் பூஜை செய்தும், ஸ்ரீ உருத்திரகணங்கள் பூஜித்தும் பெயர் பெற்ற ஸ்தலம்.

**கருவேலியில் எழுந்தருளியிருக்கும் அருள்மிகு ஸ்ரீசற்குணேஸ்வர ஸ்வாமி ஆலயத்தின் 2-ம் வருட சம்வத்ஸராபிஷேகம்** நிகழும் வெகுதான்ய வருஷம் பங்குனி மாதம் 20-ம் தேதி 3.4.99 சனிக் கிழமை கீழ்கண்ட நிகழ்ச்சியின்படி அதிவிமரிசையாக நடப்பதால் ஆஸ்திக மெய்யன்பர்கள் மேற்படி விழாவில் கலந்து கொண்டு சிவனருளைப் பெற்றுய்யுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

## நிகழ்ச்சி நிரல்

**வெகுதான்ய வருஷம் பங்குனி மாதம் 20உ (3.4.99) சனிக்கிழமை**

காலை 8 மணிக்கு ஹோமங்கள் ஆரம்பம்
" 10:30 மணி அளவில் பூரணாஹுதி தீபாராதனை
" 11:00 மணி அளவில் அபிஷேக ஆராதனைகள்
மாலை 6 மணி அளவில் சந்தனக் காப்பு—தீபாராதனை
" 5:30 மணி முதல் பஜன்—பக்திப் பாடல்கள்—
தஞ்சாவூர் திருமதி ஜானகி சுப்ரமணியம் குழுவினர்

**சர்வசாதகம் :** ஆகமப்ரவீணர் அலங்கார திலகம் சர்வசாதக சிரோமணி
சிவஸ்ரீ ப. இராமநாத சிவாச்சாரியார், கும்பகோணம்.

ஸ்ரீ சற்குணேஸ்வர ஸ்வாமி
கோயில் நிர்வாகக் குழு.
6A வாரன் ரோடு, மயிலை,
சென்னை – 600 004.

இப்படிக்கு,
**Dr. V. கிருஷ்ணமூர்த்தி,** *பரம்பரை தர்மகர்த்தா*
*மற்றும்*
*நிர்வாகிகள், கிராமவாசிகள்.*

**கருவேலி—கும்பகோணம் பூந்தோட்டம் சாலையில் கூந்தலூருக்கு வடக்கே ஒரு கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது.**





**'வாஜ்பாயை நான் அறிமுகப்படுத்தவில்லை என்றால் யாருக்கு இவரைத் தெரியும்?' என்று முன்பு ஜெ. கேட்டார். பா.ஜ.க. ஆட்சிக்கு வந்து பதின்மூன்று மாதங்கள் ஆகிவிட்டன. கட்சியின் பிரபலங்கள் பற்றி மக்கள் தெரிந்து கொள்ள வேண்டாமா என்ற ஆதங்கத்தில், ஒவ்வொரு தலைவரைப் பற்றியும் சின்ன பயோ–டேட்டா வழங்குகிறோம்:**





**அடல் பிகாரி வாஜ்பாய்:** முன்பு ஒரு தடவை 13 நாட்களுக்குப் பிரதமராக இருந்தாரே, அவரேதான். அப்போது அகடவிகடம் தெரியாத அப்பாவி. ஆட்சி கையைவிட்டுப் போகிற வரை, அதை வைத்துக் காப்பாற்றிக் கொள்ளத் தெரியாத அளவுக்கு அசடாக இருந்தார். இப்போது 13 மாதங்களில் பிரதமராக இருந்து ருசி கண்ட பூனை ஆகிவிட்டார். மமதா மிரட்டல், சமதா அதட்டல், ஜெ. பாய்ச்சல், சௌதாலா காய்ச்சல், எல்லாவற்றையும் துடைத்துவிட்டு, ஒரு நாட்டின் பிரதமராக இருக்க வேண்டுமானால், அளவுக்கு மீறி அவமானப் பட்டாலும் அதில் தவறில்லை என்று நிதர்சனமாக எடுத்துக் காட்டிய மூத்த தலைவர். 'மோசமான கட்சியில் இருக்கிற நல்ல தலைவர்' என்று எல்லாரும் வர்ணித்த போது, 'என் கட்சியா மோசமான கட்சி?' என்று ரோஷத்துடன் திருப்பிக் கேட்கத் தைரியம் இல்லாமல், 'ஏதோ நம்மையாவது

# இவர்களைத் தெரிந்து கொள்ளுங்கள்!

நல்ல மனிதர் என்று ஒப்புக் கொண்டார்களே!' என்று திருப்திப்பட்டுக் கொண்டவர். ரொம்பவும் இளகிய மனசு இவருக்கு. பாப்ரி மசூதி இடிக்கப்பட்ட போது, பக்கத்திலேயே இருந்து பொறுமையுடன் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, எல்லாம் சுத்தமாக இடித்து முடிக்கப்பட்டவுடன், 'இது நடந்தே இருக்கக் கூடாது. மிகப் பெரிய தவறு' என்று மனசு வருந்தினார், பாவம். போன வருடத்து சாதனை: போக்ரான் குண்டு. சமீபத்திய சாதனை: எந்த பாகிஸ்தானை மிரட்ட போக்ரானில் குண்டு வெடித்தாரோ, அதே பாகிஸ்தானுக்குப் பாதி தூரம் பஸ்ஸில் போய், நவாஸ் ஷெரீபின் கையைக் குலுக்கி மகிழ்ந்து, இந்திய-பாக் நட்புறவு தேவை என்று பிரகடனம் செய்தது.

**லால்கிஷன் அத்வானி:** இவருக்குப் பெரிய எதிரி இவரது நாக்கேதான்.



சந்தர்ப்பம் தெரியாமல் ஒன்று கிடக்க ஒன்று சொல்லிவிட்டு பிறகு மன்னிப்புக் கேட்பது இவருக்குக் கைவந்த கலை. (உதாரணம்: முன்னாள் பீகார் கவர்னர் சுந்தர் சிங் பண்டாரி பற்றி இவர் அடித்த கமென்ட்; பிறகு அவரிடமே கேட்ட மன்னிப்பு) தம்மை இரும்பு மனிதர் சர்தார் பட்டேலுடன் ஒப்பிட்டுக் கொள்ள ஆசை. ஆனால் தோழமைக் கட்சித் தலைவியே இவர் இலாகா இயங்கும் விதத்தை வர்ணித்து ஒரு வாங்கு வாங்கிய பிறகு, அந்த நப்பாசை போய்விட்ட பரிதாபம் மட்டுமே இவரிடம் மிஞ்சியிருக்கிறது. முன்பு ஒரு முறை தோழமைக் கட்சித் தலைவியே இவருக்கு செலக்டிவ் அம்னீசியா என்று கேலி செய்தபோது, ஏதோ பாராட்டுப் பத்திரம் வாசித்துக் கேட்ட மகிழ்ச்சியில் மூழ்கித் திளைத்துப் பேச்சு மூச்சில்லாமல் திக்குமுக்காடிப் போனவர்.

**யஷ்வந்த் சின்ஹா:** முன்பு சமாஜ்வாதி கட்சியில் இருந்து, சந்திரசேகர் பிரதமராக இருந்தபோது, நாட்டில் இருக்கிற தங்கத்தை எல்லாம் கொண்டு போய் அந்நிய நாட்டு வங்கிகளில் அடைமானம் வைத்த ஒரே பெருமை இவருக்கு உண்டு. (இப்போது மறுபடியும் தங்கத்தின் மீது கண்!) மோகன்குருசாமி என்று ஒருவரை இவருக்கு ஆலோசகராக நியமித்தது பலருக்கும் தெரியாது. ஆனால், அவர் போகிற போக்கில் இவர் மீது சேற்றை வாரி இறைத்துவிட்டுப் போனது மட்டும் எல்லாருக்கும் நினைவு இருக்கிறது!

**வெங்கய்ய நாயுடு:** ஒரு கட்சியின் செய்தித் தொடர்பாளர் எப்படி இருக்

கக் கூடாது என்பதற்குச் சரியான உதாரணம். (ஒரே ஆறுதல்: இ. காங்கிரசிலும் இவருக்கு ஜோடியாக ஒருவர் இருக்கிறார்- அஜித் ஜோகி.) பா.ஜ.க. மீது கொஞ்ச நஞ்சம் அனுதாபம் இருக்கிற நபர்களுக்குக் கூட அக்கட்சி மீது ஆத்திரமும் வெறுப்பும் ஏற்பட்டுவிடச் செய்யும் அளவுக்கு, கட்சியின் செயல்பாட்டையும், கொள்கைகளையும் விளக்கிச் சொல்லும் கெட்டிக்கார மனிதர்!

**கோவிந்தாசார்யா:** 'கூட்டணிக் கட்சிகள் எல்லாம் தூய்மையுடன் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்க முடியாது. தூய்மை என்பதன் அளவுகோல், கட்சிக்குக் கட்சி மாறுபடும்' என்று திருவாய் மலர்ந்தருளிய கொள்கை பரப்புச் செயலாளர். மறந்தது: உமாபாரதியை. மறக்காதது: வாஜ்பாயின் வெறுப்பை.



**குஷாபாவ் தாக்ரே:** சிவசேனா தலைவர் பால் தாக்ரே பெயர் தெரிந்த அளவுக்கு இவர் பெயர் பிரபலமாகவில்லைதான். இவர் என்ன சொன்னாலும், கட்சியிலும் ஆட்சியிலும் யாரும் இவரை லட்சியம் செய்ய மாட்டார்கள். இப்படி ஓர் ஆளும் கட்சித் தலைவரைப் பார்ப்பது அபூர்வம்.

**பிரமோத் மகாஜன்:** வகிப்பது என்னவோ ஒலி-ஒளிபரப்புத்துறை அமைச்சர் பதவியே ஆனாலும், பம்பாய் தொழிலதிபர்களின் நெருங்கிய நண்பர் என்று சொல்லப்படுபவர். ஜெயலலிதாவின் கோபத்துக்கு ஒருமுறை ஆளானவர். அப்புறம் அவரைப்பற்றி வாயைத் திறக்காத தைரியசாலி.

**சுஷ்மா சுவராஜ்:** தில்லி சட்டசபைத் தேர்தலில் பலி கொடுக்கப்பட்ட ஆடு. பத்திரிகையாளர்களையும், எதிர்க்கட்சிக்காரர்களையும் சமாளிக்கத் தெரிந்த வசீகரமான அரசியல்வாதி. முதல்வர் பதவியும் போய், மத்திய அமைச்சர் பதவியும் போய், இப்போது வெறும் எம்.பியாக இருக்கிறார்.

**இல. கணேசன்:** மாநில துணைத் தலைவர் மைத்ரேயன் பெயர் தெரிந்த அளவுக்குக் கூட, இவர் பெயர் பிரபலம் ஆகவில்லை என்றால், மைத்ரேயன் மாதிரி, தொட்டதற்கு எல்லாம் அறிக்கை விடுகிற பழக்கம் இல்லாதவர் என்பதே காரணம். போயஸ் கார்டனைவிட, கோபாலபுரத்தார் மீது சாஃப்ட் கார்னர் உள்ளவர் என்று கருதப்படுபவர்.

**சோ:** பா.ஜ.க வந்தால் நல்லாட்சி தரும் என்று நினைத்து ஆதரித்து, ஏமாந்துபோய், வாராவாரம் தமது தலையில் தாமே குட்டிக்கொண்டு வருந்தும் பத்திரிகை ஆசிரியர்.

**— சாருகேசி**

**லா**ஸ்ட் ஜனவரி, காயிதேமில்லத் காலேஜ்ல நடந்த புக் ஃபேருக்குப் போயிருந் தப்ப, தருமமிகு சென்னைல படிப்பார்வம் உள்ளவர்கள் இத்தனை பேரான்னு ரொம்ப சந்தோஷமாயிருந்தது.

ரொம்ப சந்தோஷப்படறது உடம்புக்கு ஆகாதில்லையா? மௌண்ட் ரோடு NCBHல இப்ப நடந்துட்டிருக்கற 'தமிழ்ப் புத்தகத் திரு விழா'வுக்குப் போனபோது, மைல் நீள ஹால்ல, என்னையும் NCBH செகரட்ரி சுப்ர மணியனையும் தவிர ஒரு கொசுகூட இல்லை! தினசரி பேப்பர் விளம்பரம், மார்ச்ல முடிய வேண்டிய கண்காட்சி ஏப்ரல் பத்து வரைக் கும் நீட்டிப்புன்னு விதவிதமா மக்களை வர வழைக்க ட்ரை பண்ணிட்டிருக்கறதா சொன் னாங்க.

சுஜாதா, ஜெயகாந்தன் மாதிரி பெரிய ரைட்டர்ஸெல்லாம் வந்து தொடங்கி வெச்ச புத்தகத் திருவிழா. பப்ளிசிடி பிரமாதமாத் தான் இருந்தது. ஏன் கூட்டம் வரலை?

இடம்தான் பிரச்னைன்னு பட்டுது. ஹார்ட் ஆஃப் தி ஸிடின்னாலும், பெரிய ஹால்தான்னாலும் வாசல் கண்ணுல படணுமே? இதுக்கெல்லாம் ஓப்பன் கிரவுண்ட் தான் பெஸ்ட்.

But, நல்ல புஸ்தகங்களை இங்க சுலபமா கண்டுபிடிக்க வசதியா டிஸ்ப்ளே பண்ணியிருக் காங்க. உலகத் தமி ழாராய்ச்சி நிறுவனத் தோட சமீபத்தில சில வெளியீடுகள் அட்ராக் டிவா இருக்கு. Fictionஐப் பொறுத்த வரைக் கும் ரைட்டர்ஸ் வாரியா அடுக்கியிருக்கறது, விசிறிகளுக்கு வசதி.

முன்ன மாதிரி இப்பல்லாம் சமையல் கலை புஸ்தகங்கள் அவ்வளவா போறதில் லைன்னு ஒரு ஆச்சரியத்தைத் தூக்கிப் போட் டார் செகரட்ரி சுப்ரமணியன். But, நாவல் ஸைப் பொறுத்த வரைக் கும் இப்பவும் ரமணி சந்திரனைத்தான் வண்டி எடுத்துட்டு வந்து அள்ளிட்டுப் போறாங்களாம்.

நான், எஸ். ராமகிருஷ்ணனோட காட்டின் உருவம் - கலெக்ஷனை ஆர்வமா வாங்கிட்டு, (ரொம்ப நாளா தேடிட்டிருந்தேன்) 'போரும் அமைதியும்' கொண்டாங்கன்னு படு கான்ஃபிடன்டா கேட்டேன். இப்ப வர்றதில் லையாம்.

சோவியத் யூனியன் உடைஞ்சதுல அந்த தேசத்து ஜனங்களைவிட, ரஷிய மொழி பெயர்ப்பு ரசிகர்களுக்குத்தான் பெரிய நஷ்டம்.

முன்னெல்லாம் ரஷ்ய நாவல்களை நல்ல தமிழ்ல ட்ரான்ஸ்லேட் பண்ணி நல்ல கெட் அப் புக்ஸா கொண்டுவர, ஸப்ஸிடி கிடைச்சி வந்திருக்கு. But not now. அதனால ரஷ்ய இலக் கியங்கள் தொடர்ந்து தமிழ்ல வர்றது நின்னு போயிருக்கு. NCBHக்குப் பெரும்புகழ் கிடைச் சதே இந்த ரஷ்ய மொழிபெயர்ப்புகளால தான்.

"அது வர்றபோது மறுபடி வரட்டும். நீங்க ஏன் சார் கான்டம்ப்ரரி லிட்ரேச்சர் பக்கமே தலை வெச்சுப் படுக்காம, தெனாலிராமன் கதையெல்லாம் திரும்பத் திரும்பப் போட றீங்க?"ன்னு கேட்டேன்.

# கூட்டம் இல்லையேல்

வாங்கறாங்களாமே! ஆனா, இன்றைய படைப்பாளிகள் பக்கமும் இனி கவனம் செலுத்தப் போறதா சொன்னார் சுப்ரமணி யம். ரொம்ப தேங்ஸ் சொன்னேன்; எப்படி யாவது வார் & பீஸ் வாங்கித் தந்துடறதா பிராமிஸ் பண்ணினதுக்கும் சேர்த்து.

• • •

**'வி**ஷ்ணுபுரம்: ஒரு பார்வை' சமீ பத்துல, ஒரே மூச்சுல நான் படிச்சு முடிச்ச புஸ்தகம். ஒரு நாவலைத் தொடர்ந்து, அதைப் பற்றிய விமர்சன/ஆய்வு/அறிமுக/ பாராட்டு/ துதி நூல்கள் வர்றதுங்கற கல்சர் தமிழுக்கு ரொம்பப் புதுசு. அநேகமா இது முன்னோடி புஸ்தகம்னு நினைக்கிறேன். (வேற எந்த நாவலைப் பத்தியாவது புஸ்தகம் உண்டுன்னா எழுதி அனுப்பலாம்.)

ஜெயமோகனோட 'விஷ்ணுபுரம்', ஒரு காவியம்னு நிறுவற முயற்சி இது. பக்கத்துக்





• NCBH புத்தகக் கண்காட்சியில்...

குப் பக்கம், பேராவுக்கும் பேரா பூரிச்சுப் போய் எழுதி இருக்கார், நூலாசிரியர் ராஜ சேகரன். அவர் பார்வையை நாம் விமர்சனம்

# வட்டம்!

பண்ண முடியாது. ஆனா, கடைசில ஜெயமோகன் ஒரு கட்டுரை எழுதியிருக்கார் பாருங்க, ஹாரிபிள்!

இன்டலெக்சுவல் டெரரிஸம்னு ஒரு கான்ஸெப்ட் உண்டு. (அறிவு ஜீவித் தீவிர/ பயங்கர வாதம்னு தமிழ்ப் படுத்தலாம்.) அறிவுத் தளத்துக்கும் மேல ஒரு அதிபயங்கர புத்திதளத்துல நின்னுக்கிட்டு, பயமுறுத்தற சமாசாரம்.

ஜெயமோகன் இந்தக் கட்டுரைல தன் நாவலை விமர்சிச்ச அத்தனை பேரையும் பெஞ்ச் மேல நிக்க வெச்சு, "உன் கல்வித் தகுதி என்ன? நீ யாரு என் நாவலை விமர்சிக்க? உனக்கு சரித்திரம் தெரியுமா? புராணம் தெரியுமா? கல்சர் தெரியுமா"ன்னு தொடங்கி, நாத்திப் பன்னெண்டாவது வட்ட கழகப் பேச்சாளர் ரீதில - மத்தவங்களை எதிர்க் கட்சிக்காரங்களா நிறுத்தி விளாசியிருக்கார்.

படைப்பாளி உணர்ச்சிவசப் படக் கூடியவன்தான். ஆனால், ஒரு புஸ்தகம்னு கொண்டு வந்தப்புறம், மாற்றுக் கருத்துகளோ, வேறு அபிப்பிராயமோ, விமர்சனமோ கூடவே கூடாது; ஒண்ணு, புகழலாம் - சாஷ்டாங்கமா விழுந்து சேவிக்கலாம், 'அல்லது'..ங்கற பேச்சுக்கே இடமில்லைங்கறது எந்த ஊர் நியாயம்? 'விஷ்ணுபுர நியாயம்' அவருக்கு மட்டுமே அப்ளிகபிள்.

ஜெயமோகனோட இந்த சாடல் திருவிழா, அறிவுபூர்வமான வாதமா இல்லாம வெறும் WWF ஷோ மாதிரிதான் இருக்கு.

**(விஷ்ணுபுரம்: ஒரு பார்வை/இரா. ராஜசேகரன்/தெய்வத் தமிழ் மன்றம், மயிலாடுதுறை வெளியீடு/ ரூ.18)**

• • •

**எ**மிஷன் டெஸ்ட் பண்ணாத டூ வீலர் ஸ்டாக்கெல்லாம் எட்டுலேயோ ஓம் போதுலயோ சனி.

பாக்கற இடத்துல எல்லாம் டிராபிக் கான்ஸ்டபிள்ஸ் பிடிச்சி செமத்தியா கறக்கறாங்க. (எத்தனை பேர் ரெஸிப்ட் தராங்க?)

வாகனப் புகை விஷயத்துல ஆட்டோக்களையோ, லாரிகளையோ இந்த இரு சக்கர மூஞ்சூறுகள் எப்பவும் பீட் பண்ண முடியாது. சிடி பொல்யூஷனுக்குத் தலையாய காரணம், அதிகமாயிட்ட லாரிகள்.

ஆனா, எந்த லாரியையும் ஆட்டோவையும் ஏன் எந்த கான்ஸ்டபிளும் மடக்கறதே இல்லை?

"அதை ஓட்டறதெல்லாம் ஒண்ணுமில்லாதவங்க. ஓனர்லெல்லாம் பெரிய தலைகள்ங்கறதுதான் காரணம்"னு சொன்னான், என் ஃப்ரெண்ட் ரங்கராஜன்.

நான் என் மூஞ்சுறு வாகனத்தை எடைக்குப் போட்டு பேரீச்சம்பழம் வாங்கி சாப்பிட்டுட்டு, ஒரு லாரி வாங்கிடலாமான்னு யோசிச்சிட்டிருக்கேன்.

• • •

**தொ**ண்ணூறுகளின் பிரதிநிதிகள்னு நான் போட்ட பட்டியல்ல பலருக்கு அபிப்பிராய பேதம். இவரை ஏன் விட்டே? அவரை ஏன் சேர்த்தேன்னு நிறைய போன் கால்ஸ் - லெட்டர்ஸ். நான் என்ன வாக்காளர் பட்டியலா தயார் பண்ணினேன், எழுதற ஒருத்தர் பேரும் விடாம இருக்கறதுக்கு? அந்தந்தத் துறையைப் பத்தி நினைச்சதும் சட்டுனு ஞாபகத்துக்கு வந்த பேர்கள் அவை.

கவிதைல மகுடேஸ்வரனையும் மனுஷ்ய புத்திரனையும் சேர்க்காதது பத்தித்தான் நிறையப் பேர் கேட்டாங்க. ஒன் அவர் யோசிச்சுட்டு, இப்ப மகுடேஸ்வரனைச் சேர்த்துக்கறேன்.

- சுமி

அப்பா போட்ட க்ஸ்டிஷன் காரணமாக எங்களுக்கிடையிலான கடிதப் போக்குவரத்து நின்று போனது. ஆனால் நாங்கள் இரண்டு பேரும் கனவிலே பேசிக்கொண்டோம்; கடிதங்கள் எழுதிக்கொண்டோம்.

இப்படியே ஒரு வருட காலத்துக்கும் மேல் ஓடிப் போனது. என் அப்பாவும் தடை உத்தரவு காலாவதியாகிவிட்டது என்று எங்களிடம் சொல்லவில்லை. எனக்கும், இனிமேல் நாங்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளலாமில்லையா? கடிதப் பரிமாற்றம் தொடங்கலாமில்லையா? என்று அப்பாவிடம் கேட்பதற்குத் தயக்கமாக இருந்தது. பெங்களூரிலிருந்தும் ஒரு தகவலும் இல்லை.



இந்தக் காலகட்டத்தில்தான் என் அப்பாவுக்கு டெல்லிக்கு மாற்றல் ஆனது. (எனக்கு மூன்று வருடக் கல்லூரிப் படிப்பு முடிந்து விட்டது. என்றாலும், இந்தியில் ஒரே ஒரு பரீட்சை எழுத வேண்டியிருந்தது) எங்கள் குடும்பம் டெல்லிக்குக் குடிபெயர்ந்தது. என் படிப்பு விஷயத்தில் மேற்கொண்டு என்ன செய்வது என்பது பற்றி நான் இந்திப் பரீட்சை எழுதிய பிறகு தீர்மானித்துக் கொள்ளலாம் என்று என் அப்பா சொல்லி விட்டார்.

டெல்லியில் நாங்கள் சந்தித்த பிரச்னை, வீடுதான். ஆமாம்! எங்களுக்கு குடியிருக்க நல்ல வீடு உடனடியாய்க் கிடைக்கவில்லை. அந்த இக்கட்டான சூழ்நிலையில் எங்களுக்கு ஆபத்பாந்தவனாக கை கொடுத்தவர் அப்போது பாராளுமன்ற லோக்சபாவின் துணை சபாநாயகராக இருந்த அனந்தசயனம் ஐயங்கார். ஆம்! அவர் எங்கள் குடும்பத்துக்கு ரொம்ப வேண்டியவர் என்பதால், டெல்லி போனவுடன் என் அப்பா, அவரைச் சந்தித்துப் பேசினார். அப்போது வீடு பிரச்னை பற்றி இவர் பேச்சோடு பேச்சாகக் குறிப்பிட, அனந்தசயனம் மாமா, "நீ ஏன் வீட்டுக்குத் திண்டாடணும்? என் பங்களாவிலேயே ஒரு பகுதியில் நீ உன் குடும்பத்துடன் குடி வந்து விடேன்" என்றார். இப்படி ஒரு [illegible] கேட்டவுடன் என் அப்பாவுக்கு இன்ப அதிர்ச்சி ஏற்பட்டு விட்டது. எங்களிடம் இந்தத் தகவலைச் சொன்னபோது, நாங்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

அனந்தசயனம் மாமாவின் பங்களாவில் நாங்கள் குடியேறிய சில நாட்களில் எனக்கு இன்னும் ஓர் இனிய ஆச்சரியம் காத்திருந்தது. ஒருநாள் மாலை நான் அவருடன் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தேன். அப்போது, அங்கே ஓர் இளைஞர் வந்தார். அவரைப் பார்த்தவுடன், 'இவர் எங்கேடா இங்கே வந்தார்? என்று நான் ஆச்சரியப்பட, 'இவளுக்கு இங்கே என்ன வேலை?' என்று அவருக்குப் புதிராக இருந்தது. ஒருவரை ஒருவர் ஆச்சரியப் பார்வையால் விழுங்கிக் கொண்டிருந்தோம்! "இந்த இளைஞர் பேர் பார்த்தசாரதி! அகில இந்திய ரேடியோவில்

## மாதா, பிதா, மாணவன் — 5

உத்தியோகம். டெல்லியில் பிரபலமான சௌத் இண்டியா கிளப் மூலமா நிறைய நாடகமெல்லாம் போட்டுக் கொண்டிருக்கிறார்!'' என்று எனக்கு அவரை அறிமுகம் செய்து வைத்த கையோடு, நான் யார் என்று அவருக்குச் சொன்னார்.

இரண்டு பேரும், அனந்தசயனம் மாமாவைப் பார்த்து ஒரு சேரச் சிரித்தோம். காரணம், அவர் அறிமுகப்படுத்தி வைத்த (ஒய்.ஜி) பார்த்தசாரதியும், நான் காதலித்து, கடிதம் எழுதிக் கொண்ட, என் தோழி வைதேகியின்* அண்ணனும் ஒருவரே தான்!

எங்கள் காதல், கடிதப் பரிமாற்றம், அப்பா போட்ட தடை உத்தரவு, என்று எங்கள் கதை முழுக்க அனந்தசயனம் ஐயங்காரிடம் விவரித்தோம். "ஓ! அப்படியா! பேஷ்! பேஷ்!'' என்று அவர் சொன்னது, எங்கள் காதலை அங்கீகரித்து, ஆசீர்வதித்தது போல இருந்தது.

# திருமதி ஒய்.ஜி.பி

அப்பாவுக்கும், ஒய்.ஜி.பி மீது நல்ல அபிப்ராயம் ஏற்பட்டது. அவர்கள் இரண்டு பேரும் நண்பர்களானார்கள்.

ஒய்.ஜி.பி. எந்த அளவுக்கு என் அப்பாவுக்கு நெருக்கமானார் என்பதற்கு ஓர் உதாரணம் சொல்கிறேன். ஒய்.ஜி.பி. தமது டெல்லி நண்பர்களுடன் ஒரு நாடகம் போட்டார். பெயர் ரிக்ஷாக்காரன். அதில் என் அப்பாவையும் ஒரு முக்கியமான பாத்திரத்தில் நடிக்க வைத்து விட்டார்! ஒரு காட்சியில், என் அப்பாவை ஒரு ரிக்ஷாவில் உட்கார வைத்து மேடையிலேயே ரிக்ஷாவை இழுத்துக்கொண்டு வருவார். அந்தக் காட்சி எனக்கு இன்னமும் நினைவில் உள்ளது.

## படிக்கிறபோது மனைத இனைப்பாய விசக்கூடாது!

அன்று இரவு படுத்தவுடன் எனக்குத் தூக்கமே வரவில்லை. (ஒய்.ஜி.பி.க்கும் அப்படித்தான்). இனி எந்த எதிர்ப்பு வந்தாலும், அனந்தசயனம் மாமா எங்கள் திருமணத்தை ஜாம் ஜாம் என்று நடத்தி வைத்து விடுவார் என்று நம்பிக்கையுடன் தூங்கினேன்.

அப்புறம் என்ன? ஒய்.ஜி.பி. அடிக்கடி அனந்தசயனம் மாமா வீட்டுக்கு வருவார். நாங்கள் பேசிக் கொள்ளுவோம். என் அப்பாவிடம் ஒய்.ஜி.பி.யைப் பற்றி மிகவும் உசத்தியாய்ச் சொல்லுவார் மாமா. என்

* (சென்ற இதழில் இடம் பெற்ற மாதா, பிதா, மாணவன் தொடரில் வைதேகி என்ற பெயர் வைஜெயந்தி என்று தவறாக அச்சாகிவிட்டது. வைதேகி என்று திருத்தி வாசிக்கும்படி வேண்டுகிறோம். தவறுக்கு வருந்துகிறோம். - ஆர்.)

தினமும் மாமா வாக்கிங் போகிறபோது, நானும், ஒய்.ஜி.பி.யும் கூடவே போவோம். அவர் பேசிக்கொண்டே வருவார். அவருடைய பேச்சு அறிவுபூர்வமாக இருக்கும் என்றால், ஒய்.ஜி.பி.யின் பேச்சில் நகைச்சுவை கொட்டும். ஒய்.ஜி.பி.யிடம் என்னை மிகவும் கவர்ந்த அம்சம் என்று நான் அவருடைய அதீதமான நகைச்சுவை உணர்வைத்தான் குறிப்பிடுவேன். அதே போல ஒய்.ஜி.பி.யின் ஞாபக சக்தியும் அபாரமானது.

அனந்தசயனம் ஐயங்கார் எதையும் வெளிப்படையாகப் பேசி விடுவார். அப்படித்தான் ஒருநாள், நானும் என் அப்பாவும் அவருடன் பேசிக் கொண்டிருந்தபோது, சற்றும் எதிர்பாராத வகையில் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டார்! "நம்ம பாச்சாவுக்கு (ஒய்.ஜி.பி) ராஜம்மாவுக்கும் (நான்தான்) பேசாம கல்யாணம் பண்ணி வைச்சுடேன்!'' என்று சொல்லி விட்டார்.

என் அப்பா, என்னை முறைத்துப் பார்த்தார். 'எல்லாம் உன் வேலைதானே? நீயாக என்னிடம் கேட்பதற்கு பயந்துகொண்டு, இவர் மூலம் கேட்கச் செய்து விட்டாயா?' என்பதுதான் அந்த முறைப்பின் அர்த்தம் என்று என்னால் புரிந்து கொள்ள முடியாதா என்ன?

உடனே, நான் பட்டென்று "நான் ஒன்றும் இவர் மூலம் கேட்கச் செய்யவில்லை; மாமா தானாகக் கேட்கிறார்!" என்றேன்.

என் அப்பா அதை நம்பிய மாதிரி தெரியவில்லை; நம்பவில்லை என்பது போலவும் காட்டிக் கொள்ளவில்லை. "ம்... பார்க்கலாம்... பார்க்கலாம்!" என்று பொதுவாக ஒரு பதிலைச் சொல்லி வைத்தார்.

"இன்னும் என்ன பார்க்க இருக்கிறது?" என்று கேட்டார் மாமா?

"ம்? ஜாதகம் பார்க்க வேண்டாமா?" என்றார் அப்பா.

"என்னது? ஜாதகம் பார்ப்பதா? அதுவும் இந்த நிலையிலா?" என்று வியந்தார் மாமா.

"ஜாதகம் பார்ப்பது எல்லாம் அவசியமில்லாதது. ஒருவேளை இரு ஜாதகங்களும் பொருந்தவில்லை என்றால், என்ன பண்ணுவீர்கள்? கல்யாணம் பண்ணி வைக்க மாட்டீர்களா? எனக்குக் கல்யாணம் என்றால் ஒய்.ஜி.பி.யுடன்தான், இல்லையெனில் நான் கல்யாணம் செய்து கொள்ளாமலேயே இருந்து விடுகிறேன்!" என்று படபடவென்று பொரிந்து தள்ளினேன்.

நான் இப்படிப் பேசியதற்கு ஒய்.ஜி.பி. என்ற தனி மனிதர் மீது நான் கொண்டிருந்த காதல் மட்டுமே காரணமில்லை. அவரது குடும்பப் பின்னணிகூட ஒரு முக்கிய காரணம். மிகவும் நாணயமான குடும்பம். கலைகளை ரசிக்கும் குணமுடையவர்களைக் கொண்டது. பாரம்பரிய பண்பாடுகளை விட்டு விலகாமல், அதேசமயம் விசாலமான மாடர்ன் அவுட்லுக் கொண்ட குடும்பம். எனவேதான் நான் மணந்தால் ஒய்.ஜி.பியைத்தான் மணப்பது என்பதில் உறுதியாக இருந்தேன்.

என் அப்பாவுக்கு இந்தத் திருமணத்தில் ஏன் இஷ்டமில்லை என்பதும் எனக்குத் தெரிய வந்தது. ஒய்.ஜி.பி தரப்பில், வசதியான, கலை ரசனையுடைய குடும்பம் என்றாலும், பெரிய அளவில் சொத்து என்று எதுவும் கிடையாது. அவருடைய உத்தியோகம்தான் அவருடைய ஒரே சொத்து. என் தரப்பில் இன்னொரு விதமாகச் சொன்னார்கள். 'ஒய்.ஜி.பி கொஞ்சம் கறுப்பு நிறம் என்பதால், செக்கச் சிவந்த – அழகான நீ அவரை ஏன் விரும்புகிறாய்? வேறு அழகான மாப்பிள்ளையாய்ப் பார்க்கலாமே!'

இதற்கு நான் அளித்த பதில்: "கறுப்பு, சிவப்பா முக்கியம்? மனிதருக்கு நேர்மை, நியாயம் இதெல்லாம்தான் முக்கியம். தனி மனித ஒழுக்கம் முக்கியம். இந்த நல்ல குணங்கள் எல்லாம் அவரிடம் இருக்கு. எனவே அவர்தான் எனக்குக் கணவராய் வரணும் என்று விரும்புகிறேன்!"

வரதட்சணை என்று ஒரு பைசா வாங்குவதில்லை என்ற ஒய்.ஜி.பியின் கொள்கையைப் பற்றியும் நான் பெருமையாகக் குறிப்பிட்டேன்.

இவையெல்லாம் ஒருபுறம் நடந்து கொண்டிருக்க, என் அப்பாவுக்கு சென்னைக்கு மாற்றல் வந்தது. எங்கள் குடும்பம் சென்னைக்குக் குடிபெயர்ந்தது.

பிறகு எங்கள் குடும்பத்திலும் மனமாற்றம் ஏற்பட்டது. ஒய்.ஜி.பி.க்கு என்னைத் திருமணம் செய்து கொடுக்க என் பெற்றோர் சம்மதித்தனர். ஒருவழியாக, சென்னையில் எங்களுடைய நிச்சயதார்த்தம் சுபமாக நடைபெற்றது.

டெல்லியில் ஆல் இந்தியா ரேடியோவில் வேலை பார்த்துக் கொண்டிருந்த ஒய்.ஜி.பியை சிலோனுக்கு மாற்றினார்கள். அங்கே வெளியுறவு அமைச்சகத்தில் வேலை. இப்போதைக்கு, "மறுபடி இந்தியாவுக்கு மாற்றல் கிடைப்பது சாத்தியமில்லை!" என்று சொன்னார் ஒய்.ஜி.பி. கல்யாணம் ஆன கையோடு, சிலோனில் தனிக் குடித்தனமா? என்று என்னை நானே லேசான பயத்துடன் கேட்டுக்கொண்டேன்.

நானும் ஒய்.ஜி.பியும் காதலித்துக் காத்திருந்து பெற்றோர்களின் ஒப்புதல் பெற்ற கதையை இத்தனை விவரமாக நான் எதற்காகச் சொல்கிறேன் தெரியுமா? வாழ்க்கையில் பொறுமையும் நிதானமும் ரொம்ப முக்கியம் என்று உணர்த்துவதற்காகத்தான். காதல் விஷயத்தில்தான் என்று இல்லை; படிக்கிறபோதுகூட பொறுமையும் நிதானமும் ரொம்ப முக்கியம்.

எங்கள் பத்மா சேஷாத்ரி போன்ற மாணவ – மாணவியர் சேர்ந்து படிக்கிற பள்ளிகளில் எதிர்ப் பாலரிடையே ஈர்ப்பும் மயக்கமும் ஏற்படும் நிகழ்ச்சிகள் சகஜம் தான். அது போன்ற தருணங்களில் மனதை அலைபாய விடக்கூடாது. படிக்கிறபோது படிப்புதான் முக்கியம் என்பதை மிக கவனமாகவும் அக்கறையுடனும் விளக்க வேண்டியிருக்கும்...

(இன்னும் சொல்லுவேன்)

# சோகமாயிருக்கும் ஆனந்தன்!

**பூகம்பத்தை முன்கூட்டியே அறிவிக்க முடியும் என்கிற தமது கண்டுபிடிப்போடு, அதை அணுசக்தி துணைகொண்டு திசை திருப்பவும் முடியும். கட்டுப்படுத்தவும் முடியும். பூகம்ப அழிவிலிருந்து இந்த மனிதகுலத்தையே காப்பாற்றவும் முடியும் என்றால் யாருக்குத்தான் சந்தோஷமிருக்காது?**

**1990**-ஆம் வருடம். நவம்பர் கடைசி நாள். வட அமெரிக்காவின் அலாஸ்கா மீது இரண்டு நாட்களில் ஒரு பெரும் பூகம்பம் ஏற்படுவதற்கான அறிகுறி. இதற்கு முன் இதே போல் ஏராளமான பூகம்பங்களை தமது ஆராய்ச்சிக் கூடத்தின் மூலம் கண்டுணர்ந்து துல்லியமாக உலகுக்கு அறிவித்த அந்த அதிசய விஞ்ஞானி, இம்முறை தாம் கணித்த பூகம்பம் ஏற்பட்ட போது மிகவும் குழம்பிப் போனார். காரணம் அலாஸ்காவில் ஏற்பட வேண்டிய பூகம்பம் ஜப்பானிற்கு இடம் மாறி பெருத்த சேதத்தை

• சூரிய ஒளியைக் கொண்டு ஆராய்ச்சி!

விளைவித்திருந்ததுதான்.

ஒவ்வொரு விநாடியும் கண்ணுக்கு விளக்கெண்ணெய் விடாத குறையாய் ரிக்டர் ஸ்கேல் வைத்துக் கொண்டு நில நடுக்கத்தை ஆராயும் ஜப்பானிய விஞ்ஞானிகளுக்கோ வேறொரு குழப்பம். அவர்களின் மீட்டரில் நிலநடுக்கம் ஏற்பட்ட பின்பு கூட அதற்கான அறிகுறியே இல்லை.



• ஆனந்தன்

இங்கிருந்தே அந்த பூகம்பத்தை கண்டுபிடித்த நம் அதிசய விஞ்ஞானி விடவில்லை. நிலநடுக்கம் திசை மாறியது எப்படி என ஆராய்ந்த பொழுது கிடைத்த ஒரே செய்தி இன்னொரு புதிய கண்டுபிடிப்புக்கு அச்சாரம் இட்டது.

பூகம்பம் ஏற்பட்ட அதே நாள், அதே நேரம் சைபீரியா பாலைவனத்தின் ஒரு பகுதியில் அணுகுண்டு பரிசோதனை நடந்து முடிந்ததன் விளைவாகத்தான் பூகம்பம் திசை மாறியிருக்கிறது என்பது அவர் கண்டுபிடிப்பு.

பூகம்பத்தை முன்கூட்டியே அறிவிக்க முடியும் என்கிற தமது கண்டுபிடிப்போடு, அதை அணுசக்தி துணைகொண்டு திசை திருப்பவும் முடியும். கட்டுப்படுத்தவும் முடியும். பூகம்ப அழிவிலிருந்து இந்த மனித குலத்தையே காப்பாற்றவும் முடியும் என்றால் யாருக்குத்தான் சந்தோஷமிருக்காது?

தமது கண்டுபிடிப்புகளுக்கான அத்தனை ஆதாரங்களையும் எடுத்துக் கொண்டு மேலும் ஆராய்வதற்கான நிதி ஆதாரம் வேண்டி அரசின் உயர் அதிகாரிகளிடம் போனார். எவரும் கண்டுகொள்ளவில்லை. கண்டுபிடிப்பை உதாசினப்படுத்தியதோடு கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளாத குறையாய்த் துரத்தியடிக்கப்பட்டிருக்கிறார்.

என்றாலும் விடாமல் கடந்த பத்து வருடங்களுக்கு மேலாக உதவி கேட்டு, தன்னம்பிக்கையுடன் போராடிக் கொண்டிருக்கிறார்.

இத்தனைக்கும் வடக்கு - தெற்கு வாக்கில் காந்த ஊசி கணக்கிட்டு செய்து



''இன்னாது? டீச்சர் உன்னை 'வீட்டுப்பாடம்' எழுதிட்டு வரச் சொன்னாங்களா! நமக்கு ஆடே கிடையாதுன்ற விஷயம் அவங்களுக்குத் தெரியாதா...?!''

— பாஸு

கட்டப்பட்ட ஓர் சிறிய ஓட்டுக் கட்டடம் தான் இவரின் ஆராய்ச்சிக்கூடம். கூரையில் பதிக்கப் பெற்ற சிறிய கண்ணாடி. அதனூடே புகுந்து சுவரில் பதிந்து நகரும் சூரிய ஒளிதான் கண்டுபிடிப்புக்கான முக்கிய உபகரணம்!

விஞ்ஞானி ஆனந்தன் என்று கேட்டால் திருப்பூர் - பூலுவப்பட்டி கிராமத்தில் படு பிரபலம். ஐம்பது வயது. ஆங்கிலேயரால் வளர்க்கப்பட்டவர். வெறும் எஸ்.எஸ். எல்.சி. படிப்பு. பிழைப்பு நிமித்தம் சித்த வைத்தியம் பார்க்கிறார். முழுக்க முழுக்க ஈடுபாடு இந்தப் புவிப் பந்தின் மீதுதான்.

விளையாட்டில் படு சூரர். பள்ளிப் பருவத்தில் நெற்றிப் பொட்டில் அடித்த பந்தினால் இரண்டு கண் பார்வையும் இழந்து வாழ்க்கை இருண்டு போய் நிற்க, பிறகு ஒற்றைக் கருவிழி ஆபரேஷன் மூலம் ஒரு கண் பார்வை மட்டும் கிடைத்ததாகக் கூறுகிறார்.

'1988-ல் இரண்டு நாள் முன்னதாக அறிவித்த ஆர்மீனியா பூகம்பம், 1989-ல் முந்தின நாள் அறிவித்த புதுடில்லி நிலநடுக்கம், 1993-ல் ஏரான உயிர்களையும், உடைமைகளையும் விழுங்கின மகாராஷ்டிரா பூகம்பம்' என வரிசையாய் முன்னறிவித்த பூகம்பங்களுக்கு ஆதாரமாக வட்டாட்சியர், தந்தி அலுவலகம், மாவட்ட ஆட்சியாளர், கொடைக்கானல் புவியியல் வல்லுனர்களிடமிருந்தெல்லாம் பெறப்பட்ட பல் வேறுபட்ட ஆதாரக் குவியல்கள்...

மத்திய - மாநில அரசுக்கும், புவியியல் - அறிவியல் துறை அதிகாரிகளுக்கும் எழுதி எழுதி பதில் பெறப்பட்ட கடிதங்கள். இவர் பட்டதாரியில்லாததால் இவரின் கண்டுபிடிப்புக்காகப் பரிந்துரைத்த பல்கலைக்கழக நிபுணர்களின் கடிதங்கள்... வெளிநாட்டிலிருந்து வந்த பாராட்டுக் கடிதங்கள்.... என மூச்சு முட்டுகிறது. ஆயினும் தமது ஆராய்ச்சிக்கு அரசு அங்கீகாரம் தராததைச் சொல்லிச் சொல்லிக் குமுறுகிறார் ஆனந்தன்.

''என் கண்டுபிடிப்பு எவ்வளவு நிஜம்? ஒவ்வொன்றுக்கும் ஏரானமான ஆதாரங்களும் வச்சிருக்கேன். எப்படிப்பட்ட விஞ்ஞானிகளுடனும் வாதாடத் தயாராயிருக்

கேன். இதன் மூலம் மனிதகுலத்தைக் காப்பாற்ற முடியும்னு அலையா அலையறேன்! யாரும் இதுவரை கண் திறக்கவேயில்லை. கலிலியோவையே கல்லால் அடித்த உலகம் இது. என்னை மட்டும் விட்டு வைக்குமோ?"

"1992-ல் டெல்லியின் காப்புரிமைத் துறைக்கு ஈரோடு தொழில்நுட்பக் கல்லூரியின் பரிந்துரை மூலமாக உதவி கேட்டபோது இந்த ஆய்வுக்கு எனக்குத் தகுதியில்லை என மறுத்து விட்டது. பட்டப் படிப்பு அவசியமாம். 1991-ல் நிகழ்ந்த உத்திர காசி பூகம்பத்தை நான் முன் அறிவித்ததைப் பாராட்டி, 'உலகமே பாராட்ட வேண்டிய விஷயம்' என்று பரிந்துரை செய்தது கொடைக்கானல் நிலநடுக்கப் பதிவுத் துறை. அந்தப் பரிந்துரையையே ஆறு வருடம் கழித்து திருப்பியனுப்பின நியூடெல்லி விஞ்ஞான பிரச்சார் 'அப்படி எதுவும் கண்டு பிடிக்கப்படவில்லை' என முற்றிலுமாக மறுக்கிறது. இதிலிருந்தே தெரியவில்லை...? இது தெற்கத்துக்காரனை அமுக்கும் சூட்சுமம் என்று!"

சரி, தமிழ்நாட்டில் எப்படி?

"அம்மா ஆட்சியின் போது 'சி.எம். ரொம்ப பிஸி பார்க்க முடியாது' எனத் தகவல் வந்தது. சென்னை சென்று தங்கி நேரில் பார்க்க முயற்சித்த போது, விரட்டி அடிக்காத குறையா அடிச்சு விரட்டினாங்க அதிகாரிகள். கலைஞரிடம் 76-லிருந்து கட்சி ரீதியாகவும், ஆராய்ச்சி ரீதியாகவும் மனு எழுதி எழுதிச் சோர்ந்த நிலை. கடைசியில் திருப்பூர் எம்.எல்.ஏ. சுப்புராயன் மூலம் எனக்கென தனி கவன ஈர்ப்புத் தீர்மானம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. அப்போது எம்.எல்.ஏ. கேட்ட கேள்விக்கு பதிலாக, 'இந்த ஆராய்ச்சியை அரசு அங்கீகரிப்பது மட்டுமல்லாமல் தம்முடைய கவனத்துக் குட்பட்ட சொந்தப் பிரிவாகவும் இவ்வாராய்ச்சி நடத்தப்பட வேண்டும்' என முதல்வர் அதிகாரிகளுக்கும் உத்தர விட்டதாக எம்.எல்.ஏ. சொன்னார்.

"தொடர்ந்து மாவட்டக் கலெக்டர் மூலமாக திருப்பூர் அரசு அதிகாரிகள் ஆராய்ச்சிக்கூடத்திற்கு வந்து விசாரித்து ரிப்போர்ட் அனுப்பினர். நானும் மிக ஆர்வமாய் இருந்தேன். கடைசியில் தலைமைச் செயலக அறிவியல் பிரிவு நேரில் வந்து பார்க்காமலேயே, 'நிதியுதவி செய்வதற்கு சிபாரிசு செய்யப்படவில்லை' என 24.7.98-ல் கடிதம் அனுப்பியுள்ளது. ஒரு கண் பார்வை இல்லாததால் உடல் ஊனமுற்றோர் ஆராய்ச்சிக்குன்னு நிதி உதவி இருக்குமான்னு கூட மோதிப் பார்த்தேன். அங்கேயும் 'இல்லை'ன்னுதான் பதில்!"



- ரொம்பவும் சோர்ந்து போய்ச் சொன்னாலும் இன்னும் விடாது அரசுடன் மல்லுக்கு நிற்கிறார் மனிதர்.

தமது ஆராய்ச்சிக்காக நிறைய செலவு செய்து விட்டு இன்று ஏழையாக வாழ்கிறார்... ஏதேனும் விஞ்ஞான அமைப்பைச் சேர்ந்தவர்கள் ஆனந்தனின் ஆராய்ச்சிகளையும் கண்டுபிடிப்புகளையும் பரிசீலித்துத் தெளிவுபடுத்தலாமே!

கட்டுரை, படங்கள் : **கேயெஸ்வி**

## அத்திபூத்த மாதிரி ஒரு நீல நிலா...

**'HONEY MOON- தேன் நிலவு' உங்களுக்குத் தெரியும். 'BLUE MOON- நீல நிலவு' தெரியுமா? மாதம் ஒன்று வீதம் ஒரு வருடத்தில் 12 பௌர்ணமி வரும். அத்திபூத்தாற் போல் ஓர் ஆண்டு 13 பௌர்ணமிகள் வரும். அதிகப்படியான ஒன்றை 'BLUE MOON-' என்றழைக்கிறார்கள். 83 வருடங்களுக்கு முன் 1915ல் வந்தது. அதன் பின்னர் இந்த வருடம் 1999ல் 13 பௌர்ணமிகள்.**

**அதாவது ஜனவரியில் 2 மற்றும் 31 தேதியில், மார்ச் மாதம் 2 மற்றும் 31 தேதிகள் பிப்ரவரியில் இல்லை. மற்ற மாதங்களில் ஒருமுறை ஆக 13 பௌர்ணமிகள் இந்த வருடம்.**

**நன்றி: ஹிந்து**

**தகவல்: ஈரோடு ராணி குருநாதன்**

# தேர்நிலைத் தூரங்கள்

"பெரிசுக பழம் பெருமை
பேசியே புத்திகெட்டுப் போகும்.

நம்மன மேடேற விடாது! அது இல்லாட்டி என்ன, நா எதுக்கு இருக்கேன்? நடங்கடா போவலாம்!" மகுடிக்குக் கட்டுப்பட்டதுபோல் முத்துவீரன் அதட்டலில் அவன் பின்னே நகர்ந்து போன உருவங்கள். முண்டாசு கட்டின ஆண்கள். முக்காடு போட்ட பெண்கள். சட்டை போட்டு, 'குறாய்' மாட்டிக் கொண்ட இளவட்டங்கள். அனைவரின் கால் அசைவுகளிலும் எதையோ எட்டிப் பிடித்து விட்ட சந்தோஷம். இன்னும் எதையெதையோ எடுத்துக் கொள்ளத் துடிக்கும் உயிர்த் துடிப்பு.

அடிமுடி தெரியாமல் நீண்டு நெளிந்து வளைஞ்சு கிடந்தது கரட்டாங் காட்டு வழி. எட்டு மேல எட்டு வச்சாலும் தீராத தடம். ஒரே எட்டில் எட்டிப் புடிக்கிற மாதிரி. 'செத்து, செத்து'ன்னு நடையை எட்டிப் போட்டார் பெரிய முத்துக் கருப்பு.

கண்ணுக்கெட்டின தூரம் வரைக்கும் ஒரு காக்கா குருவியில்லை. ஒரே இருட்டு மயம். பல்லைக் கெஞ்சிக் கிடக்கும் 'மெட்டல்' ரோட்டில் கைத்தடிபட்டு எழும்பும் ஒலியால் வேலியோரம் சலசலத்துப் பதுங்கும் பூச்சிகள். சத்தத்தை உருட்டி ஒடுக்கி அமைதி காத்து, பிறகு சலசலக்கும் வேலிக் காத்தான்கள். நடுங்கும் கால்களில் நிறையும் அழுத்தம். மனசிலோ இறுக்கம். பஞ்சடைத் தாப்பல மங்கும் கண்ணை கொஞ்சம் கூர் படுத்தி விழிச்சபோது வெகுதூரத்தில் சென்னியாண்டவன் மலை மேல் மின்னும் கலசச் சுடர்.

'வடம் புடிச்சிருப்பானுகளோ? தேர் நிலை வந்து சேர்ந்திருக்குமோ? பாவி மக புள்ளே வெட்டுப்பட்டு, குத்துப்பட்டு வீதியில கெடப்பானோ?' நினைத்த மாத்திரத்தில் 'அடேய்ய்... முத்து வீரு...'ன்னு கத்தனும் போல கிழவருக்குள்ளே வெச்சுக் கிளம்புது ஆங்காரம்.

'நா ஒரு கூறு கெட்டவன். படுபாவிப் பயக வந்து, 'நீ வந்து வடம் புடிச்சாத்தான் ஆச்சு'ன்னு பெரிய மனுசனா மதிச்சு வந்து கூப்பிட்டப்பவே போயிருக்கோணும். பெரிசா குலநாசம், சாமி குத்தம்ன்னு பினாத்திட்டு இருந்தேம் பாரு. சோட்டால போடணும் புத்திய...!'

கோயில் திண்ணையில் புரிபடாத உருவங்களில் எண்ணெய் வழியும் சிலைகள். எதிர்த்த வாக்கில் விண்முட்ட நிற்கும் சுடலை மாடனும் வெள்ளை முனியப்பனும் அணைந்து எரியும் வீதி விளக்கொளியில் பளீரிட்டு மறைகின்றனர். வெள்ளை முனி அமர்ந்திருந்த கறுப்புக் குதிரையின் நாக்கு, வெளிச்சத்தில் சிவப்பதும் இருட்டில் கறுப்பதுமாய். விசுக்கென வீசின காற்றில் எழுந்த கவுச்சி. வழக்கமாய் வீசும் பலிபீடக் கவுச்சியிலிருந்து மாறுபட்டு நரபலிக் கவுச்சி மாதிரி பிரமை.

"ஐயோ முத்து வீரு...!"

வீச்சரிவாள் எடுத்தால் மனுஷ ரத்தக்குறி காட்டாம கீழே வைக்காத பொங்காளி அய்யாவுக வம்சம். தேர்நிலை சேர்றதுக்குள்ளே இன்னும் எத்தனை பேரை வீசித் தள்ளுமோ?

எந்த சாமியும் நரபலி கேட்டதாக ஊர்ல சரித்திரமில்லை. சிவராத்திரி முழிப்பு முடிஞ்சதும் எட்டுக் கிடாயும், பச்ச ரத்த மும் வருஷந் தவறாம கேட்கும் கருப்பராயனுங்கூட சாமியாடி அப்படி சொன்னதில்லை. இன்னெய்க்கு வெத்துத் திருநீறு பூசி

பூ, பழத்தோட பஞ்சாமிர்தம் கலக்கி, உற்சவம் போற சாமி இத்தனை பேரை வெட்டிச் சாச்சிருக்குன்னா? இங்கே பத்துன்னா 'அங்கே பதினெட்டு. அதுல பதினெட்டுன்னா இங்கே முப்பத்திரண்டு.

போலீஸ் நுழையாத கிராமம். இருபது நாளா படற பாடு. எடுத்ததுக்கெல்லாம் கலெக்டரு, கமிஷனருன்னு வராத அதிகாரிக எல்லாம் வர்றாங்க. எட்டுப் பத்துக் கிராமமும் ஒரே பூட்ஸ் கால் மயம். அவங்க எத்தனை நாளைக்கு இவனுகளுக்குக் காவலிருந்தற முடியும்? குடியானவங்களை அண்டிப் பொழைக்கிற ஜாதிக்கு குடியானவங்க கும்பிடற சாமி அவ்வளவு முக்கியமா? 'அவங்கவங்க சாமி அவங்கவங்களுக்கு.'

"ஒனக்கு வேண்ணா அப்பிடி இருக்கலாம் அப்பச்சி. எங்களால அது முடியாது. ஏ அப்புச்சி. நீயும் எழுபது வருஷத்துக்கும் மேலே அதே தடத்துல போறே வர்றே. செருப்புத் தச்ச காசுல கொஞ்சத்தை சென்னியாண்டவன் கோயில் படிக்கட்டு உண்டியல்லயும் போடறே. ஒரு நா கூட அந்தக் கோயில் மலையேறணும். சாமி முகம் பார்த்து நெஞ்சாரக் கும்பிட்டு ஐயரு கையில விபூதி வாங்கி நெத்தி நெறையப் பூசணும்ன்னு ஆசைப்பட்டதில்லே நீ? எங்கே, உன் நெஞ்சைத் தொட்டுச் சொல்லு. தினத்திக்கு நீ பூஜை செய்யற கருப்பராயன் கன்னியாத்தா மேல ஆணையிட்டுச் சொல்லு பார்ப்பம்?" நாண்டுகிட்டு செத்துப் போற மாதிரி கேட்டானே ஒரு கேள்வி.

முகம் மறந்து போன அய்யனின் கையைப்



**கா. சு. வேலாயுதன்**

பிடித்துக் கொண்டு கோயில் வழியே போன போதெல்லாம் எழுந்த எண்ணம். ஊர் முறைமை உலக வழக்கம் புரியாம அந்த வயசுல அய்யனைக் கேட்ட அதே கேள்வி.

"ஏனப்பூ நாம கோயிலுக்குள்ளே போறதில்லே?"

"சென்னியாண்டவன் சாமி தண்டிச் சிடும்."

"பெரிய பண்ணாடி சின்னப் பண் ணாடி யவுகளெல்லாம் போறாங்களே."

"அவுங்க குல தெய்வம் அது. நம்மளுக்குத்தான் முனியும் கருப்பராய னும் இருக்காங்களே!"

"அது மட்டும் மலைமேல இருக்கு. இது நிலத்தோட இருக்கே!"

"நிலத்தோட இருந்தாலும் பெரிய சாமி நம்மளுது. பகாசூரன் மாதிரி எப்படி வெள்ளை முனி அவ்வளவு உயரத்துல குக்கிட்டு இருக்கான் பாரு."

அய்யன் ஆயிரம் சமாதானம் சொன் னாலும் வயசு ஏற ஏற சென்னியாண்ட வனைப் பாக்கணும். கண்ணு முன்னாடி நிறுத்தி கண் மூடிக் கும்பிடணும்ன்னு ஆசை நெறைஞ்சு தான் வந்தது. யாருக் கும் தெரியாமல் நிலையில் நின்றிருக்கும் தேரை தொட்டுப் பார்க்க எட்டி எட்டி குதித்திருக்கிறான். தேர் வடத்தைக் கையில் வருடி சந்தோஷப்பட்டிருக் கிறான். கோயில் வழியா போகும் போதெல்லாம் பதினெட்டுப் படிக்கு மேலா இருக்கிற ஆண்டவனைப் பார்க்க துடியாய்த் துடிப்பான்.

கோயில் நந்தி விலகி நம்மாளு ஒருத் தனுக்கு தரிசனம் கொடுத்தாராம் சிவன். அது மாதிரி அந்தப் பதினெட்டுப் படி யும் விலகி சென்னியாண்டவன் நமக்குக் காட்சி தரமாட்டானான்னு ஏக்கமா இருக்கும். வயசுக்கேத்தாப்பல பழகிப் போன பழக்கம். படியேறாததே அந்தக் கடவுளுக்குக் கொடுக்கிற மரியாதையாய் மாறிப் போனது.

'ஈனச் சாதி ஆசைப்படலாம். தீயில் போட்டு பொசுக்க வேண்டிய ஆசை. புடம் போட்டு உருவேத்தலாமா? இருக் கிற ஒரே மக வயித்துப் பேரன் புடம் போட்டுத் தொலைச்சிட்டானே. இவ னுக்கு இப்படிப் பேசச் சொன்னது யாராயிருக்கும்?

எண்ணிப் பத்துப் பேரை ஒரே முட்டா திரட்டிப் பேச முடியாத ஒரு வம்சத்துல பத்தாயிரம் பேரைத் திரட்டி காவு கொடுக்கவும் வைக்கிற துணிச்சல் இவனுக்கு மட்டும் எப்படி? நேரெதுக்கால பேசவே ஒடுங்கி நிற்க வேண்டிய குடியானவங்க முன் னாடி தோள் தட்டி சவால் விட்டவன், 'உத்தி ரத்துக்கு காவடியோட மலையேறுவோம், தேர்வடம் புடிப்போம், வளுவச் சுத்தி வரு வோம்'னு விவரந்தெரியாத விடலைப் பசங் களையெல்லாம் திரட்டி கூட்டம் போட் டவன். சிறிசு பெரிசுன்னு இல்லாமல் பொண்டு புள்ளைக வரைக்கும் ரோஷத் தைக் கிளப்பினவன். பெரிய பெரிய அரசி யல் தலைவனுகளையெல்லாம் சேரிக்கு இட்டு வந்து சுத்திக்காட்டி, 'எட்டாயிரம், பத் தாயிரம்'ன்னு ஓட்டுக் கணக்கை எண்ண வச்சவன். கோயிலையும் சாமியையும் காட்டி ஊரு சனத்துக்கே வேலை வெட்டியில்லாம ஆக்கி, பட்டினி போட்டு பாவத்தைத் தேடிக் கிட்டவன் எப்படி தன் மக வயித்துல வந்து பொறந்தான்?

**தோ**ள் தட்டி நிற்கும் அவன். அதே நேர்த்தியில் மறைவாய்த் தெரியும் பொன் னாக்காணி சாமி. சுத்துப் பத்துக்கே மகா ராசா. அடர்ந்த புருவம். பருத்த மீசை. மார் பில் தவளும் புலிநகத்துச் சங்கிலி. 'பசேல்'னு நெருங்கி நிற்கிற மக்காச்சோளக் கதிர்கள் சர சரக்கும் ஓசை. கதிரறுக்கப் போன பயல் பெரிய முத்துக் கருப்புவின் கண்களில் வெந் தணலை வீசிவிட்ட காட்சி. மல்லாக்காகக் கிடந்த பொன்னாக்காணி சாமியின் மார் பில் தங்கச் செயினின் தவழ்ச்சியை விட நெளிசலாய் மினுங்கும் பெண் உடல்.

அய்யனைக் கண்ட மாத்திரத்தில் துணியை அள்ளி பின்பக்க, வெற்றுடம்பு தெரிய ஓடும் கன்னியம்மா. அகலக்கரை வேட்டியை இழுத்துச் செருகி, சாவகாசமாய் சட்டையை உதறிப் போர்த்தும் பொன்னாக் காணி மவராசா கால்களில் நெடுஞ் சாணாய்க்கிடந்தான் முத்துக் கருப்பு.

"இந்தப் பாவிய கொலை பாதகனாக்கி புட்டீங்களே சாமீ. ஐயனவுங்ககிட்டே எந்த மொகரையைக் கொண்டுட்டுப் போவேன்? ஈனச் சாதி வம்சத்தை தீண்டிப்புட்டீங்களே. மவராசன் காதுல கேட்டா எங்க வம்சமே எரிஞ்சுடுமே சாமீ!"

கறுத்துக் குலுங்கிப் பிதற்றும் தோள்பட் டையை தூக்கி நிறுத்தி தட்டிக் கொடுக்கும் சாமி.

"கவலைப்படாதடா கருப்பு. அப்பாரு மாதிரி, ஐயா மாதிரியில்ல நான். கன்னியாத்

● போருக்கும் காதலுக்கும் ஓர் ஒற்றுமை உண்டு. இரண்டையும் மிக எளிதாக துவக்கி விடலாம். ஆனால் இரண்டையும் நிறுத்துவதுதான் மிகவும் கடினமான செயல். – மென்க்கன். தகவல்: கே.ஆர். உதயகுமார்

தாளை நானே கன்னாலங்கட்டிக்கிறேன்."

'நெருப்பை' எரிஞ்சுட்டு 'கருக்'குனு போயிட்டார் பொன்னாக்காணி. இளரத்தம். படிச்ச படிப்பு. செல்வச் செழிப்பு. இப்படிக் கூட பேசுமோ?

வாலிப வயசுல டவுனுக்கு வேலைக்குப் போன அருமைப் புள்ளை சின்ன முத்துக் கருப்பு; ரொம்ப நாள் கழிச்சு ஊர் வழக்கம் மறந்து தரைகூட்ட 'துளு துளுன்னு' வெள்ளை வேட்டி கட்டி வந்தான்னு கம் மாங்காட்டுல தலை தனி முண்டந்தனியா ஆக்கின பெரிய பொன்னாக்காணி மவ ராசா. இதைக் காதுல கேட்டா இந்த நீசக் குடும்பத்தையே கொன்னு பொலி போட்டு ருவாரே!

"குல நாசம் பண்ணிட்டியேமட கூறு கெட்ட முண்டை!"ன்னு மூலையில கிடந்த மவனை அடிச்சு உதைச்சு இழுத்துட்டுப் போய் பெரிய மவராசா முன்னாடி நெடுஞ் சாணா விழுந்து தொலைச்சப்ப கூட்டுல உயிர் இல்லை.

"நீங்க எத்தனை கூறு போட்டாலும் தகும் சாமீ... மவராசா வம்சத்து எதுக்கால வர்ற துக்கே நாதியத்தவ மவ புள்ளை, சின்ன மவராசா மின்னாடி தளுக்கிக்கிட்டுப் போயிட்டா சாமீ... பெரிய மனசு வச்சு நீங்க மன்னிச்சா 'சாமீ'. வெட்டிக் கூறு போட்டா 'கடவுள்'. எல்லாத்துக்கும் பொறுப்பேத்துக் கிடக்கிறோம் சாமீ!"

தரையோட புதைச்ச முகம் நிமிர்த்தற துக்கு சக்தியில்லை. நிலம் கழுவுது கண்ணீர். அர்ச்சுன மகாராசா போல பெரிய ஐயா என்ன நெனச்சாரோ? வாஞ்சையோட தூக்கி நிறுத்தினவர் கையில மலங்க மலங்க விழிக் கிறா கன்னியம்மா. பெரிய மவராச ரோட பெரியம்மாவும் வாசலில்.

நாலு அச்சுக் கருப்பட்டி, நாலு பக்கா நெல்லு. உடுத்த கூரைச் சேலையும் கொடுத்து பண்ணைக்காரன் அம்மாவாசையக் கூப் பிட்டு தாலியைத் தந்து கட்டச் சொன்னாரே பார்க்கலாம்.

"அர்ச்சுன மவராசா நீங்க ஆயிரம் வரு ஷம் அம்சமா வாழோணும்!" பித்துப் புடிச் சவ போல நின்ன மவனை இழுத்துத் தள்ளி கீழே விழுந்து கும்பிட்ட கோலம்.

"இதென்னடா உம்புள்ளை ஊர் ஒலகத் துல நடக்காததையா செஞ்சுட்டா? போடா போ. போய் ஜோலியப் பாரு!"

**ஊ**ர் உலகத்துல நடக்காதது நடந்த மாதிரிதான் கடைசி வரைக்கும் அம்மா வாசை மருகியிருக்கோணும். கூத்துக்கு



"ஆனாலும் நம்ம தலைவர் ரொம்ப மோசம்..."

"எப்படி?"

" 'இந்த ஆட்சியில் சட்டம் ஒழுங்கே கெடவில்லை. எனவே, இந்த அரசைக் கலைக்க வேண்டும்'னு அறிக்கை விடறாரு!"

– பா. ஜெயக்குமார்

ஒருத்தன். மாரடிக்க வேறொருத்தனா?ன்னு யாருகிட்டவோ அழுதது கேள்வி. கன்னா லம் கட்டும்போது கன்னியம்மாளுக்கு வயித்துல நாலு மாசம். அதிலிருந்து எண்ணி ஆறுமாசம் 'செகடந்தாழி' 'பட்டை' சாரா யமா ஊத்தி வந்தவன். கட்டின பெண்டாட் டிய தம் பொட்டு நகம் கூட படாமப் பார்த்துகிட்டவன். முத்து வீரன் தரையில விழுந்தபோது கப்ராயம்புதூர் ரயில் ரோட் டோரமாய் ரத்தங்கக்கிக் கிடந்தான்.

யார் சாபமோ பெரிய பொன்னாக்காணி போன குட்டுல இவனும் போய்ச் சேரவும் அய்யா வீட்டுலயிருந்து தவசந் தானியம் வந்தது. பெரிய பண்ணாடிச்சி ஒரு எட்டு வந்து வாசல்ல நின்னு முந்தானைய வாயில வச்சுட்டுப் போனாங்க. புதுப் பொண் டாட்டி வந்த மோகம் சேரி மக கூட கூத் தடிச்சது எல்லாமே மறந்து போயிருந்தார் சின்னப் பொன்னாக்காணி. தாலி கட்டின மவராசிக்கு எட்டுல செவ்வாயோ, புதனோ எண்ணி எட்டே மாசம் சிறு நாகம் கடிச்சு சின்னவரும் மேலோகம் போய் விட்டார்.

'அந்தக் கன்னியாத்தா தண்டிச்சிட் டான்னு' கோரமா சிரிச்சா கன்னியம்மா. கலர் புடைவையைக் களைஞ்சிட்டு வெள் ளைப் புடைவையைக் கட்டிக்கிட்ட போது தான் சேரி ஜனமே அதிசயமாப் பார்த்தது. 'புருஷன் செத்தப்ப வெள்ளையுடுத்தாத முண்டை, இதென்னடி கூத்து?'

இதையெல்லாம் நினைச்சு மருகிட்டிருந்த நேரத்துலதான் நிழலிருட்டில் வெள்ளையா அந்த உருவம். இழுத்துப் போர்த்து நேரே வந்து நிற்கும்போது பதற்றத்துடன் எழுந்தே விட்டார்.



''உனக்காக எதையும் தியாகம் பண்ணத் தயார், கமலா!''

''முதல்ல நீங்க வாங்கியிருக்கிற கண்டம் பொட்டலத்தை நீங்களே காலி பண்ணாம, ஒரு நாலு கண்டலாவது எனக்குத் தின்னக் கொடுங்க; மற்றதை அப்புறம் பார்க்கலாம்!''

– ஞா. ஞானமுத்து

---

"பண்ணாடிச்சி... நீங்களா சாமீ!"

பரிதவிச்சுப் போய் வாய் குளறியது. சின்னய்யாவைக் கட்டிக்கிட்ட குலதெய்வம். அம்சமா வாழ்ந்து எட்டு மாசத்துல புழு பூச்சிகூட உருவாக்கிக்காத மகமாயி. அந்த நினைப்பிலேயே வருஷக் கணக்கா துரு துருன்னு வெள்ளைப் புடைவை. அகால வேளையில் மினுங்கி வந்து நின்னுருக்கே.

"கருப்பு. சின்னப் பண்ணாடியவங்க வம்சம். விட்டுட்டுப் போன ஒரே அடை யாளம். உம் பேரன் முத்து வீரனைக் காப் பாத்தோணும்!"

நடுங்காத குரல். சோகமும், பதற்றமும் இழையோட்டமாய்.

"என்ன சொல்றீங்க. கூறுகெட்ட கெழ வனுக்கு ஒண்ணும் வெளங்கலியே!"

"முதல்ல வடம் புடிக்கிற உங்க வளவுக் காரன் தலை, தேர் நிலை போறதுக்குள்ளே தரையில உருளோணும்ன்னு பொங்காளி கூட்டம் ஆக்னை போட்டிருக்கு. முத்து வீரன்தான் மொத வடம் புடிக்கப் போறான்னு காதுக்குப் பட்டு ஓடியாரேன்...!"

"அம்மணி."

"தம்பு கருப்பு. பத்து நாளா அவங்க போட்ட ஆக்னையில எல்லாம் காலைக் கையப் புடிச்சு காப்பாத்திட்டன். இப்ப முடி யாதுன்னு தோணுது. எல்லாமே கை நழுவிப் போச்சு. அய்யாவுக்கு அடையாளமா கண்ணு மறைப்புல இருக்கிற ஒரே ரத் தம்...ம்..."

"இத்தனை போலீசு, மிலிட்டரி இருந்தும் முடியுமா?"

"இது அவுகளுக்கு கௌரவப் பிரச்னை. உங்க ஆளுகள்லயே கொஞ்சம் பேரைக் கூலிக்குப் புடிச்சு கூட்டத்துல சேர்த்துட் டாங்க."

ஆடாத பெரிய முத்துக் கருப்பு அப் படியே ஆடிப் போனார்.

"முதல் வடம் புடிக்கிறவன்தானே பலியா வான். முத்துவீரனுக்கு ஒண்ணும் ஆவாது. பத்ரமா ஊடு போங்க தாயி. நா பாத்துக் குறேன்!"

தூரத்திலிருந்து நெருங்கி வரும் பெட்ரோ மாக்ஸ் சுடர்கள். சலசலத்து நிறை யும் மனிதத் தலைகள். பெரியவர் வேகம் பார்த்து விலகி நகரும் இளவட்டங்கள். நுனி புரிபடாமல் நெடுகத் தரையில் உருளும் தேர் வடம். கோயிலுக்கும் சேராது, ஊருக்கும் சேராது ரெண்டாங்கட்டி வழியில் அலங் கார வெளிச்சத்தில் உயர்ந்து நிற்கும் தேர்.

இன்னும் யாரும் வடம் பிடிக்கவில்லை. நெஞ்சில் ஏறும் பெருமூச்சு. 'சைரன்' கொடுத்து பயமுறுத்தும் போலீஸ் ஜீப்புகள். ஓடி வந்து அப்பச்சியின் கைகளைப் பிடிக் கும் முத்துவீரன். கண்களில் சந்தோஷ மினுங்கல்.

"மனசு மாறி வந்துட்டியா அப்புச்சி...!"

அவன் பின்னால் நிறையும் சேரி ஜனங்கள். முதல் வடம் பிடிக்கப் போற பெரிய மனுஷன். நெற்றி நிறைய விபூதி அப்பினார்கள். கழுத்தில் எலுமிச்சம் மாலை. சம்பங்கி மாலை. துளசி மாலை மாகாளியாத் தாளுக்கு துளுக்குப் பிடிக்கும் கிடாய் நினைவுக்கு வந்தது.

அரசாங்க அதிகாரி ஒருவர் தேர்வடம் பிடிக்க, இவர் கையையும் எடுத்து வடத்தில் வைத்தனர்.

"அர அர அரகர அரகரோவ்வ்வ்...!" கட்டுக் கொள்ளாது எழும் ஓங்காரம். யார் யாரோ நெட்டித் தள்ளும் வேகம். பதற்றம். சலசலப்பு.

கைகளுக்குள் அடங்காத கயிறு. கக்கத்தில், இடுப்பில், மார்பில், வயிற்றில் மாறி மாறி வைத்து தன்னிலையறியா சந்தோஷம்.

"அரகரோவ்...!"

கடகடக்குது தேர்ச்சக்கரம். கண்களை மூடிக் கொண்டு சக்தி முழுக்க கயிற்றில் வைத்து இறைவனையே இறைஞ்சினாலும்... கண்ணுக்குள்... நிழலுருவாய்... நிறைய வீச்சரிவாள்களும், வெட்டரிவாள்களும், குத் திட்டிகளுமாய் பொங்கிப் புறப்பட்டு வரும் உருவங்கள்.

கண்ணைத் திறந்தாலும், மூடினாலும் தேர்நிலை இன்னும் கூட வெகு தூரம் இருப்பதாய்ப் பட்டது. ●

# பொன்னியின் செல்வன்

## இரண்டாம் அத்தியாயம்

## மோகவலை

வயது முதிர்ந்த பிறகு இளம் பெண்களை மணந்து கொள்வோர் எப்போதும் சந்தேகம் என்னும் மாயா உலகத்தில் வாழ்கிறார்கள். அவர்களுக்கு அன்னியர்கள் யாரைக் கண்டாலும் இயற்கையான அருவருப்பு ஏற்படுகிறது. பழுவேட்டரையருக்கு இத்தகைய அருவருப்பு ஏற்பட அதிகக் காரணம் இருந்தது. நந்தினி தமக்கு முன்னால் வந்து நின்று பேசத் தொடங்கியதை அவர் சிறிதும் விரும்பவில்லை. அதேசமயத்தில் நந்தினியைக் கடிந்து கொள்ளவும் அவரால் முடியவில்லை.

எனவே நந்தினி கேட்ட கேள்விக்கு மறுமொழியாக,

"ராணி! இந்த உலகத்தில் நமக்குத் தெரியாதவர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். எல்லாரையும் நாம் பார்த்து அறிந்திருக்க முடியாதல்லவா? அதனால் நமக்கு நஷ்டமும் இல்லை!" என்றார்.

இதைக் கேட்ட பார்த்திபேந்திரன், "ஐயா! சோழ நாட்டின் பொக்கிஷ மன்னரின் பட்டமகிஷிக்கு என்னைத் தெரியாததினால் நஷ்டம் ஒன்றுமில்லை; நஷ்டம் எனக்குத்தான். ஆகையால் என்னை நானே தெரிவித்துக் கொள்கிறேன். அம்மணி! என்னைப் 'பார்த்திபேந்திரப் பல்லவன்' என்று அழைப்பார்கள்!" என்று சொன்னான்.

"ஓ! அப்படியா? தங்கள் பெயரை நான் கேள்விப்பட்டிருக்கிறேன்!" என்றாள் நந்தினி.

"பார்த்திபேந்திரா! ஏன்




கல்கி கலெக்ஷன்

அமரர் கல்கி

விருதுகளை விட்டு விட்டுப் பெயரை மட்டும் சொல்லிக்கொண்டாய்? இவ்வளவு தன்னடக்கமும் பணிவும் எப்போது ஏற்பட்டன? நந்தினி! இவன் வெறும் பார்த்திபேந்திரன் அல்ல. வேங்கியும் கலிங்கமும் வென்று **வீரபாண்டியன் தலைகொண்ட** பார்த்திபேந்திரப் பல்லவன்!'' என்று பழுவேட்டரையர் பரிகாசக் குரலில் கூறினார்.

நந்தினியின் முகம் ஒரு கண நேரம் புயல் குமுறும் வானத்தைப்போல் இருண்டது. அவளுடைய இரு கண்களிலிருந்தும் இரு மின்னல்கள் தோன்றி ஒளி வீசி உடனே மறைந்தன. அடுத்த கணம் அவள் கலகலவென்று சிரித்தாள்.

''ஐயா! 'வீர பாண்டியன் தலைகொண்ட' பெருமையான பட்டத்தை எத்தனையோ பேர் சூட்டிக்கொள்கிறார்கள்! அதற்கு ஏதேனும் கணக்கு உண்டா?'' என்று கேட்டாள்.

"அம்மணி! தனாதிகாரி என் பேரில் உள்ள அபிமானத்தினால் அவ்விதம் கூறினார். உண்மையில் அந்த விருதுக்கு நான் உரியவன் அல்ல. வீரபாண்டியன் தலைகொண்ட பெருமை ஆதித்த கரிகாலர் ஒருவருக்கே உரியது!"

"அது ஏன் அப்பா, அவ்விதம் சொல்கிறாய்? செத்த பாம்பை அடித்த பெருமையில் உனக்குக் கொஞ்சமும் பங்கு வேண்டாமா?" என்று பழுவேட்டரையர் பரிகாசக் குரலில் கேட்டுவிட்டு குறுஞ் சிரிப்புச் சிரித்தார்.

"இல்லை, அரசே! இல்லை! ஆதித்த கரிகாலர் செத்த பாம்பைக் கொல்லவில்லை. அவர் வாளை ஓங்கியபோது வீரபாண்டியன் முழு உயிர் உள்ள பாம்பாகத்தான் இருந்தான். அவன் உயிரைக் காப்பாற்றுவதற்காகத் தேவலோகத்து மோகினியை ஒத்த ஒரு மங்கை முன்னால் வந்து நின்று கை கூப்பிக் கெஞ்சினாள். வாளை ஓங்கியவன் நானாக இருந்தால் உடனே அவ்வாளைத் தூர வீசி எறிந்திருப்பேன்; வீரபாண்டியன் பிழைத்துப் போயிருப்பான்!" என்று பார்த்திபேந்திரன் பழுவேட்டரையருக்குப் பதில் சொன்னான். ஆனால் அவனுடைய கண்களோ நந்தினியின் முகத்தைக் கூர்ந்து நோக்கின.

நந்தினி, பேச்சு அபாயகரமாகப் போய்க் கொண்டிருப்பதை உணர்ந்தாள்.

பழுவேட்டரையரைத் திரும்பிப் பார்த்து, "நாதா! அந்தப் பழைய கதை இப்போது எதற்கு? இவர் இங்கு வந்த காரியம் என்னவென்று விசாரிக்கலாமே!'' என்றாள்.

உடனே பழுவேட்டரையரும், "ஆம், தம்பி! பழைய கதை வேண்டாம்! உன் கதையைச் சொல்! காஞ்சியிலிருந்து எப்போது புறப்பட்டாய்? எங்கே பிரயாணம்? இங்கு இறங்கி வந்த காரணம் என்ன?'' என்று கேட்டார்.

நந்தினியைப் பார்த்ததால் மதி மயங்கிப் போயிருந்த பார்த்திபேந்திரனும் தான் வந்த காரியத்தை நினைவு கூர்ந்தான்.

"ஐயா! என்னை மன்னிக்க வேண்டும்! ஏதேதோ பேசிக் கொண்டிருந்து விட்டேன். மிக முக்கியமான செய்தியுடன் வந்திருக்கிறேன். சோழ நாட்டையே துயரக் கடலில் மூழ்கச் செய்யக்கூடிய பயங்கரமான செய்தி. ஈழத்திலிருந்து என்னுடன் இந்தக் கப்பலில் புறப்பட்டு வந்த இளவரசர் அருள்மொழி வர்மர் சுழற்காற்று அடித்த சமயம் கடலில் குதித்து விட்டார். அவருடைய கதி என்ன ஆயிற்று என்று தெரியவில்லை. ஒருவேளை இங்கே வந்து ஒதுங்கினாரோ என்று பார்ப்பதற்கு வந்தேன்!" என்றான் பார்த்திபேந்திரன்.

அவன் கூறி முடிப்பதற்குள் "ஆகா! என்ன சொன்னாய்?'' என்று பழுவேட்டரையர் அலறினார். சுழற்காற்றினால் வேருடன் பறிக்கப்பட்ட நெடுமரத்தைப் போல் தரையில் வீழ்ந்தார்.

அவரைத் தாங்கி எடுப்பதற்காகப் பார்த்திபேந்திரன் பாய்ந்து சென்றான். நந்தினி குறுக்கே நின்று அவன் நீட்டிய கையைப் பற்றி அகற்றினாள். பழுவேட்டரையரின் அருகில் தான் உட்கார்ந்து அவருடைய தலையைத் தன் மடியின் மீது எடுத்து வைத்துக் கொண்டாள். "தண்ணீர்! தண்ணீர்!" என்று கத்தினாள்.

கூடாரத்திலிருந்து சேடிப் பெண் தண்ணீர் எடுத்துக்கொண்டு வந்தாள். இன்னும் சில

வீரர்களும் கலங்கரை விளக்கக் காவலரும் அவர் குடும்பத்தாரும் ஓடி வந்தார்கள். நந்தினி மிக்க கம்பீரத்துடன் அவர்களை யெல்லாம் அப்பால் நிற்கும்படி ஏவினாள். பழுவேட்டரையரின் முகத்தில் தண்ணீர் தெளித்தாள். "நாதா! நாதா! என்று கொஞ்சும் குரலில் அழைத்தாள். சில நிமிஷங்களுக்கெல்லாம் கிழவரின் கண்கள் திறந்தன. உடனே நினைவும் வந்தது. சட்டென்று எழுந்து உட்கார்ந்தார்.

"நந்தினி! சற்று முன் என் காதில் விழுந்தது உண்மையா? இந்தப் பல்லவன் என்ன சொன்னான்? பொன்னியின் செல்வனைக் கடல் கொண்டு விட்டதாகச் சொன்னான்



அல்லவா? அந்த வீரகுமாரன் சின்னஞ்சிறு குழந்தையாயிருந்தபோது இந்தக் கைகளால் அவனைத் தூக்கித் தோளில் வைத்துக் கொண்டு மகிழ்ந்தேன். இதே கைகளினால் தான் அவனைச் சிறைப் பிடித்துக் கொண்டு வரும்படியான கட்டளையில் முத்திரை வைத்தேன். ஐயோ! சோழ நாடு என்னைப் பற்றி என்ன நினைக்கும்?" என்று பழுவேட்டரையர் தலையில் அடித்துக்கொண்டார். வயிரம் பாய்ந்த அந்த வீரக் கிழவர் அவ்விதம் மனம் கலங்கிப் புலம்பியதை அதுவரையில் நந்தினி பார்த்ததில்லை; யாருமே கண்டதில்லை.

"நாதா! பதறாதீர்கள்! இவர் இன்னும் செய்தி முழுதும் சொல்லவில்லையே! முழுதும் கேட்டுவிட்டு மேலே செய்ய வேண்டியதைப் பற்றி யோசிப்பது நலம் அல்லவா?" என்றாள் நந்தினி.

"ஆமாம்; நீ சொல்வது சரிதான். பார்த்திபேந்திரா! சீக்கிரம் சொல்! பொன்னியின் செல்வர் கடலில் முழுகி இறந்து விட்டார் என்று சொன்னாய் அல்லவா? அது உண்மையா? அல்லது ஏதோ துர்நோக்கத்துடன் கற்பனை செய்து சொல்கிறாயா? பசித்திருக்கும் புலியுடன் விளையாடாதே! ஜாக்கிரதை!" என்று அக்கிழவர் கண்களில் கனல் எழும்படி நோக்கிக் கர்ஜித்தார்.

"ஐயா! மன்னிக்க வேண்டும்! இளவரசர் இறந்து விட்டார் என்று நான் சொல்லவில்லை. அவ்வளவு பயங்கரமான நஷ்டம் இத்தமிழகத்துக்கு ஏற்பட்டிருக்கும் என்று என்னாலும் நம்ப முடியவில்லை. சுழற்காற்று உக்கிர நிலையை அடைந்திருந்த போது அவர் என் கப்பலிலிருந்து கடலில் குதித்தார் என்றுதான் சொன்னேன். கடவுள் அருளால் ஒருவேளை பிழைத்திருக்கலாம். இந்தக் கடற்கரையிலே வந்து ஒதுங்கியிருக்கலாம். அந்த ஆசையுடனே தான் பார்ப்பதற்கு இங்கே வந்தேன்..."

"சுழற்காற்று அடித்தபோது கடலில் குதித்தாரா! எதற்காக? ஏன் குதித்தார்? உன்னுடைய கப்பலில் அவர் ஏன் ஏறினார்? அவர் குதித்தபோது நீ என்ன செய்து கொண்டிருந்தாய்?" என்று பழுவூர் அரசர் பரபரப்புடன் கேட்டார்.

நந்தினி குறுக்கிட்டு, "ஐயா! இவர் இலங்கைக்கு எதற்குப் போனார் என்பதிலிருந்து விவரமாகச் சொல்லட்டும்!" என்றாள்.

"ஆமாம்; உள்ளது உள்ளபடியே சொல்லு! உண்மையைச் சொல்லாவிட்டால் நீ உயிருடன் தப்ப முடியாது! உன்னை..." என்று பழுவேட்டரையர் பற்களை நறநறவென்று கடித்தார்.

"அரசே! உண்மையைத் தவிர வேறு எதுவும் சொல்லி எனக்குப் பழக்கம் இல்லை. நான் பொய் சொல்ல நினைத்தாலும் என் நாக்குச் சொல்லாது. கேளுங்கள்! தாங்களும் கடம்பூர்ச் சம்புவரையரும் மற்றும் பலரும் சோழ குலத்துக்கு விரோதமாகச் சதி செய்கிறீர்கள் என்று காஞ்சிக்குச் செய்தி எட்டியது."

"பொய்! பொய்! முற்றிலும் பொய்!"

"செய்தி பொய்யாயிருக்கட்டும். அதுவே நான் வேண்டுவது. காஞ்சிக்கு எட்டிய செய்தியையே நான் கூறினேன். அதன்பேரில் திருக்கோவலூர் மலையமானும் ஆதித்த கரிகாலரும் என்னை ஈழத்துக்கு அனுப்பினார்கள். அருள்மொழிவர்மரைக் கையோடு அழைத்து வரும்படி அனுப்பினார்கள்..."

இவ்வாறு ஆரம்பித்துப் பார்த்திபேந்திரன் தான் இலங்கை சேர்ந்தது முதல் நடந்ததையெல்லாம் தான் அறிந்தவரையில் விவரமாகக் கூறினான்.

கதை முடிந்ததும் பழுவேட்டரையர், "கடவுளே! சோழ நாட்டுக்குப் பெருங்கேடு வந்துவிட்டது! இந்தப் பாவியினால்தான் வந்தது! இளவரசரைச் சிறைப்படுத்திக் கொண்டு வரும்படி நான் அல்லவோ கட்டளை போட்டேன்? நான் அல்லவோ மரக்கலங்களை அனுப்பினேன்?" என்று கதறினார்.

"அரசே! தங்கள் குற்றம் ஒன்றும் இல்லை. தாங்கள் கட்டளை பிறப்பித்திரா விட்டாலும் இந்த மனிதருடைய கப்பலில் இளவரசர் ஏறிக் காஞ்சிக்குப் பயணமாயிருப்பார் அல்லவா? வீணாக நொந்து கொள்ள வேண்டாம். நம்முடைய செயல்களுக்கு மேலே விதியின் செயல் ஒன்று இருக்கிறது. மேலும்..."

நந்தினி இவ்விடத்தில் உரத்துப் பேசுவதைச் சட்டென்று நிறுத்திப் பழுவேட்டரையரின் காதோடு ஏதோ சொன்னாள்.

பழுவேட்டரையரின் முகம் சிறிது



மலர்ச்சி அடைந்தது. "ஆமாம்; ஆமாம்! அது எனக்குத் தோன்றாமல் போயிற்று!" என்றார்.

பிறகு பார்த்திபேந்திரனைப் பார்த்து, "பல்லவா! உன் கப்பலுக்குப் போய் நான் சோதித்துவிட்டு வரப் போகிறேன். அது வரை நீ இங்கேயே இருக்க வேண்டும். தப்பிச் செல்ல முயல வேண்டாம். ஓட முயற்சி செய்தால் உடனே வேல் எறிந்து கொல்லும்படி என் வீரர்களுக்குக் கட்டளையிட்டு விட்டுப் போகப் போகிறேன். ஜாக்கிரதை! முதுகில் காயத்துடன் சாகாதே! உன் பரம்பரை வீரப் பரம்பரை!" என்றார்.

"வந்தனம், ஐயா! தப்பித்து ஓடும் எண்ணமே எனக்குக் கிடையாது. அத்தகைய எண்ணமிருந்தால் உங்கள் வீரர்கள் யாராலும் தடுக்க முடியாது. முதுகிலே காயப் படும் உத்தேசமும் எனக்கு இல்லை!" என்றான் பல்லவன்.

"அரசே! இவரைப் பற்றித் தாங்கள் கவலைப்பட வேண்டாம். நானே பார்த்துக் கொள்கிறேன். தப்பியோடப் பார்த்தால் இதோ இந்தக் கத்தி உடனே இவர் மார்பில் பாயும்! நீங்கள் நிம்மதியாகப் போய்க் கப்பலைச் சோதித்து விட்டு வாருங்கள். மாலுமிகளையும் விசாரியுங்கள். இவர் கூறியதெல்லாம் உண்மைதானா என்று" - இவ்விதம் நந்தினி கூறிக்கொண்டே இடுப்பிலிருந்து ஒரு சிறிய கத்தியை எடுத்தாள்.

"ராணி! உனக்கு ஏன் இந்தப் பொறுப்பு? நீ கூடாரத்துக்குள் போயிரு! அல்லது தியாகவிடங்கரின் வீட்டில்

போய் இரு. இவனை நம் வீரர்களே கவனித்துக் கொள்வார்கள். அல்லது இவனையும் நான் என்னோடு கப்பலுக்கு அழைத்துப் போகிறேன்..."

''நான் வரவில்லை, ஐயா! நான் தங்களுடன் வந்தால் தங்களுக்கு மறுபடியும் சந்தேகமாகத்தானிருக்கும். மாலுமிகள் எனக்காகச் சாட்சி சொல்லி விட்டதாய் நினைப்பீர்கள். நான் இவ்விடத்தை விட்டு நகர மாட்டேன். தாங்கள் கவலையின்றிப் போய் வாருங்கள்!"

"நாதா! தாங்கள் கப்பலிலிருந்து திரும்பி வரும்வரையில் நானும் இங்கேயே தான் இருக்கப் போகிறேன். இங்கிருந்தபடி தங்களைப் பார்த்துக்கொண்டே இருப்பேன்!'' என்றாள் நந்தினி.

பிறகு பழுவேட்டரையரின் காதோடு "இவன் இங்கே ஏதேனும் துப்பறிய வந்திருக்கிறானோ, என்னமோ, யார் கண்டது? மேலும் இளவரசரைப் பற்றிய செய்தி தாங்கள் திரும்பி வரும்வரையில் யாருக்கும் தெரியக்கூடாது" என்றாள்.

பழுவேட்டரையர் தலையை அசைத்து விட்டுப் படகில் ஏறினார். படகு மரக்கலத்தை நோக்கிச் சென்றது.

படகு சிறிது தூரம் போகும் வரையில் நந்தினி படகையே பார்த்துக் கொண்டிருந்தாள். அதே சமயத்தில் பார்த்திபேந்திரன் கண் கொட்டாமல்



தன் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்ததை அவள் உணர்ந்தாள். சட்டென்று அவன் பக்கம் திரும்பினாள். பார்த்திபேந்திரன் வெட்கித் தலைகுனிவான் என்று எதிர்பார்த்தாள். ஆனால் தேன் மலரைப் பார்த்துவிட்ட வண்டு அப்பால் திரும்புமா?

நந்தினி கூரிய சிறிய கத்தியை எடுத்து மறுபடி காட்டி, "ஜாக்கிரதை! தப்பி ஓடப் பார்க்க வேண்டாம்!" என்றாள்.

"தேவி! கத்தியைக் காட்டிப் பயமுறுத்துவானேன்? தப்பியாவது? ஓடவாவது? வலையில் அகப்பட்ட மீன் எவ்விதம் தப்பி ஓடும்? தாங்கள் விரித்த வலையில் அகப்பட்டு..."

"என்ன, ஐயா, சொல்கிறீர்? என்னை வலைஞர் குலப்பெண் என்று சொல்கிறீரா? இது பழுவூர் அரசர் காதில் விழுந்தால்..."

"அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. தேவி! ஆனால் மீன் பிடிக்கும் வலையை நான் குறிப்பிடவும் இல்லை. தங்களுடைய சேல் விழிகள் விரிக்கும் மோக வலையைச் சொல்கிறேன்..."

"சீச்சி! என்ன தைரியம் உமக்கு? வலைஞர் குலப்பெண் என்றாலும் பாதகமில்லை. ஆடவர்களுக்கு மோக வலை விரிக்கும் கணிகை என்றா என்னைச் சொல்லுகிறீர்?"

"மன்னிக்க வேண்டும்! அப்படிப்பட்ட அபராதத்தையும் நான் செய்யவில்லை. தாங்கள் வேண்டும் என்று வலை விரிக்க வேண்டுமா, என்ன? சிலந்திப் பூச்சி வலை நெய்வது ஈக்களைப் பிடிப்பதற்காகவா? அது, தான் வசிப்பதற்காக வலை பின்னுகிறது. ஈக்கள் தாமாகப் போய் அவ் வலையில் விழுகின்றன..."

"என்னைச் சிலந்திப் பூச்சி என்றா சொல்கிறீர்? அவ்வளவு, பயங்கரமாக இருக்கிறேனா நான்?"

"தவறு! தவறு! நான் தீபத்தைச் சொல்லியிருக்க வேண்டும். தீபம் எரிவது விட்டில் பூச்சிகளுக்காக அல்ல. தீபம் எரிந்து தன்னைச் சுற்றிலும் ஒளிவீசி ஜோதி மயமாகச் செய்கிறது. அசட்டு விட்டில் பூச்சிகள் அதைக் கனி என்று நினைத்துக்கொண்டு சென்று விழுந்து மாய்கின்றன..."

"ஒரு சிறிய காற்று குப் என்று அடித்தால் தீபம் அணைந்து விடுகிறது. வாயினால் ஊதிக்கூட அணைத்து விடலாம். தீபத்தின் சக்தி அவ்வளவுதான்!"

"தீபம் அணைந்து விடும்; ஆனால் பூரண சந்திரனை யார் அணைக்க முடியும்? பூரண சந்திரன் சமுத்திர ராஜனுக்காக உதயமாகவில்லை. இயற்கை நியதியின்படி சந்திரன் உதயமாகிறது. அதன் குளிர்ந்த நிலா ஒளியை வானமும் பூமியும் மகிழும்படி பரப்புகிறது. ஆனால் பேதைக் கடலைப் பாருங்கள்! பூரண சந்திரனைக் கண்டு கடல் எதற்காக அப்படிக் கொந்தளிக்க வேண்டும்? எட்டாத பழத்துக்கு ஏன் கொட்டாவி விட்டுத் தவிக்க வேண்டும்?"

"பல்லவ குல மன்னர்களின் கவிதா ரசனையைப் பற்றியும் கற்பனைத் திறனைப் பற்றியும் ரொம்பவும் கேள்விப்பட்டிருக்கிறேன். அவையெல்லாம் உண்மையென்பதாக இப்போதுதான் உணர்கிறேன்."

"புராணங்களிலும் காவியங்களிலும் நான் படித்ததையும் கேட்டதையும் நேற்று வரை நம்பவில்லை; இன்றைக்குத்தான் எனக்கு நம்பிக்கை பிறக்கிறது."

"எதைப் பற்றிச் சொல்கிறீர்?"

"பெண் உருவங் கொண்டவர்கள் சிலர் வானத்தையும் பூமியையும் தங்கள் காலடியில் போட்டுக் கொள்ளும் சக்தி பெற்றவர்கள் என்று கேட்டிருக்கிறேன். பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்த அசுரர்கள் அமுதபானம் செய்ய வேண்டிய சமயத்தில் மோகினியினால் ஏமாந்து போனார்கள். சுந்தோபசுந்தர்கள் ஒரு பெண் நிமித்தமாக அடித்துக்கொண்டு செத்தார்கள். மேனகையினால் விசுவாமித்திரர் தவம் கெட்டது. கோவலன் மாதவியின் மோக வலையில் விழுந்து கிடந்தான். தசரதர் கைகேசிக்காக இராமனைக் காட்டுக்கு அனுப்பினார். எகிப்து நாட்டு ராணியின் காரணமாக மகத்தான ரோம சாம்ராஜ்யம் அழியத் தொடங்கியது..."

"போதும், ஐயா! போதும்! இந்த உதாரணங்களையெல்லாம் எதற்காகச் சொல்கிறீர்?"

"தெரியவில்லையா, தேவி! யாருக்கு உதாரணமாகச் சொல்கிறேன் என்று தெரியவில்லையா?"

"எனக்கு உதாரணமாகச் சொல்கிறதா

யிருந்தால், அதைப் போல் பெரிய தவறு நீர் வேறு செய்ய முடியாது."

"தவறு ஒன்றுமில்லை. அவர்களுடைய சக்தியைக் காட்டிலும் தங்கள் சக்தி குறைந்தது அன்று."

"உம்முடைய வாய் மொழியே உமக்கு விரோத மாயிருக்கிறது."

"எப்படி, தேவி!"

"பழுவூர் அரசரை நான் வேண்டுமென்றுதான் கப்பலுக்கு அனுப்பினேன். உம்முடன் ஒரு விஷயத்தைப் பற்றிக் கேட்பதற்காக."

"தங்கள் நோக்கத்தைத் தெரிந்து கொண்டுதான் நானும் அவருடன் போகாமல் இங்கேயே தங்கினேன்."

"வீர பாண்டியனை ஒரு பெண் காப்பாற்ற முயன்றாள் என்றும் ஆதித்த கரிகாலர் அதைப் பொருட்படுத்தவில்லை யென்றும் நீர் சொன்னீர் அல்லவா?"

"ஆம், சொன்னேன்."

"காப்பாற்ற முயன்ற பேதைப் பெண் யார் என்று தெரியுமா?"

"இப்போது பழுவூர் அரண்மனையின் ஜோதியாக விளங்கும் இளைய ராணி நந்தினி தேவிதான்."

"நீர் சற்று முன்



வர்ணித்தபடி எனக்கு அவ்வளவு சக்தி இருந்திருந்தால் நான் காப்பாற்ற விரும்பிய ஒரு மனிதரின் உயிரைக் காப்பாற்றியிருக்க மாட்டேனா? அது ஏன் என்னால் முடியாமற் போயிற்று?"

"இரத்த வெறி கொண்டிருந்த ஆதித்த கரிகாலர் அச்சமயம் தங்கள் விருப்பத்தை நிறைவேற்றி வைக்கவில்லைதான். ஆனால் அதற்குப் பிறகு மூன்று வருஷமாக அவர் எத்தகைய சித்திரவதை அனுபவித்து வரு கிறார் என்பதை நான் அறிவேன்."

"உமக்கு எப்படித் தெரியும், ஐயா! உம்மிடம் சொன்னாரா?"

"மூன்று வருஷமாய் மனத்திலேயே வைத்துக்கொண்டு கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். அவருடைய உள்ளத்தை ஏதோ ஒரு துன்பம் அரித்துக் கொண்டிருக்கிறது என்பதை மட்டும் அறிந்திருந்தேன். பத்து நாளைக்கு முன்பு, நான் ஈழத்துக்குப் புறப்பட்டதற்கு முதல் நாள்தான் – மனத்தைத் திறந்து என்னிடம் சொன்னார். அது முதல்..."

"அதுமுதல் என்ன?"

"பழுவூர் இளையராணியைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை என் மனத்திலும் குடிகொண்டு விட்டது."

"ஆதித்த கரிகாலரின் நிலையில் நீர் இருந்திருந்தால் நான் கேட்டுக் கொண்டதற்காக வீர பாண்டியரை உயிரோடு விட்டிருப்பீர் என்று சொன்னது நினைவிருக்கிறதா?"

"நன்றாக நினைவிருக்கிறது."

"அது உண்மைதானா?"

"சத்தியம் தேவி! தாங்கள் சோதித்துப் பார்க்கலாம்."

"ஐயா! என் மனத்தில் ஒரு சந்தேகம் இருக்கிறது. அதைச் சொல்லட்டுமா?"

"தங்கள் தங்கக் குரலில் எதைச் சொன்னாலும் என் செவிகள் இன்பம் அடையும்; உள்ளம் பூரிக்கும்."

"நீர் என்னைச் சோதிப்பதற்காகவே இப்படிப் பேசுகிறீர் என்று சந்தேகிக்கிறேன். நான் விரிக்கும் மோக வலையைப் பற்றிப் பேசி நீர் எனக்கு வலை விரிக்கப் பார்க்கிறீர். என்னுடைய அந்தரங்கத்தை அறிந்து கொள்ள முயல்கிறீர்."

பார்த்திபேந்திரன் திடுக்கிட்டுப் போனான். ஆரம்பத்தில் அவன் பேச ஆரம்பித்தபோது அந்த எண்ணத்தோடுதான் ஆரம்பித்தான். பிறகு அதை மறந்தே விட்டான். கபடமாக ஆரம்பித்த பேச்சு அவனை மோகக் கடலில் உண்மையாகவே தள்ளி விட்டது. முதலில் அப்படி எண்ணியது குறித்து அவன் வெட்கப்பட்டான். அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், "தேவி! அவ்விதம் தங்களைச் சோதித்து ஒற்றன் வேலை செய்ய நான் பிரயத்தனப்படும் பட்சத்தில் என் தலையில் இடி விழட்டும்!" என்றான்.

"ஐயோ! அப்படிச் சொல்லாதீர்!" என்று நந்தினி அலறினாள்.

"ஏன், தேவி! ஏன்?"

"உங்கள் பெரிய இளவரசரிடமிருந்து வந்தவன் இன்னொருவன் – அவன் பெயர் என்ன..."

"வந்தியத்தேவனா?"

"ஆம். அவன்தான்! என்னிடம் மிகத் தந்திரமாக ஒற்று அறிந்து போக முயன்றான். தாங்கள் சொல்வதைப் பார்த்தால் அவன் தலையில் இடி விழுந்தே விட்டது போலிருக்கிறதே!"

"துரதிர்ஷ்டவசமாக அவன் தலையில் இடி விழவில்லையே! அவன் நின்ற கப்பலில் அல்லவா விழுந்தது! அதனால் அவனுக்கு வந்த ஆபத்து சின்ன இளவரசரையும் அல்லவா பிடித்து விட்டது?"

"பாவம்! பழையாறை இளையபிராட்டியை நினைத்தால் எனக்குப் பரிதாபமாயிருக்கிறது. அவள் இந்த உலகில் மிகவும் பிரியம் வைத்திருந்த இருவர் ஏக காலத்தில் மாண்டு போனார்கள்! என்ன துரதிர்ஷ்டம்!"

"தேவி! இரண்டு பேர்கள் யார்?"

"நீர் சொன்ன இரண்டு பேருந்தான்! இளையபிராட்டிக்குத் தம்பியின் மீது தனி வாஞ்சை உண்டு அல்லவா?"

"அது உலகம் அறிந்தது. அவளுடைய பிரியத்துக்குப் பாத்திரமான இன்னொருவர்...?"

"ஏன்? உங்கள் பெரிய இளவரசர் அனுப்பிய தூதன்தான்."

"வந்தியத்தேவனையா சொல்கிறீர்கள்?"

"அவனைத்தான்!"

"சீ ச் சீ! சோழ சாம்ராஜ்யத்தையே ஆட்டுவிக்கும் சக்தி வாய்ந்த பழையாறை இளைய பிராட்டி அற்பனும், தற்பெருமைக்காரனும், அதிகப்பிரசங்கியுமான அந்த வாலிபன் மீது..."

"ஆம்; அந்த வாலிபன் மீது மோகம் கொண்டாள். அதனாலேதான் அவனைப்

பழுவேட்டரையரின் தண்டனையிலிருந்து தப்புவிப்பதற்காக ஓலை கொடுத்து இலங்கைக்கு அனுப்பினாள். பாவம்! இந்தக் கிழவர் இளவரசரின் துர்க்கதிக்குத் தாம் காரணம் என்று துடியாய்த் துடிக்கிறார். உண்மையில் அதற்கு இளையபிராட்டிதான் காரணம். அவள் மட்டும் ஓலை கொடுத்து அனுப்பாதிருந்தால்..."

"உண்மை, உண்மை! இந்த விபரீதம் எல்லாம் ஏற்பட்டிராது..."

"என் கணவர் கப்பலிலிருந்து திரும்பி வந்ததும் இந்த உண்மையை அவருக்கு நீர் எடுத்துச் சொல்ல வேண்டும். சொன்னால், என்னுடைய நன்றிக்குப் பாத்திரம் ஆவீர்!"

"அம்மணி! தங்களுடைய நன்றிக்குப் பாத்திரம் ஆக இது ஒன்றுதானா வழி? வேறு எனக்குத் தாங்கள் இடக்கூடிய பணிகள் இல்லையா?"

"ஐயா! ஒரு பேதைப் பெண்ணின் நன்றிக்குப் பாத்திரமாக எத்தனையோ நூறு வழிகள் உண்டு."

"அவற்றில் இன்னும் இரண்டொன்றைச் சொல்லுங்கள். ஆதித்த கரிகாலருக்கு அப்படிப்பட்ட சந்தர்ப்பம் ஒன்று கிடைத்தது. அதை அவர் கைசோர விட்டு விட்டார். வீட்டு விட்டு அப்புறம் இரவு பகலாகத் துடிதுடிக்கிறார். நான் அத்தகைய தவறைச் செய்ய மாட்டேன்!"

"இது சத்தியமா, ஐயா? ஒரு பெண்ணின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக நீங்கள் எது சொன்னாலும் செய்வீர்களா?"

"எந்தப் பெண் என்பதைப் பொறுத்தது. தேவி! நேற்று வரைக்கும் நான் பார்த்திருக்கும் எந்தப் பெண்ணின் விருப்பத்துக்காகவும் எதுவும் செய்திருக்க மாட்டேன்; சொன்னால் சிரித்திருப்பேன். இன்று அப்படியல்ல, தாங்கள் சொல்லிப் பாருங்கள். எனக்கு நூறு உயிர்கள் இருந்தால் அவ்வளவையும் தங்களுடைய விருப்பத்தை நிறைவேற்றுவதற்கு அர்ப்பணம் செய்வேன். ஆயிரம் சாம்ராஜ்யங்கள் என் வசம் இருந்தால் அவ்வளவையும் தங்கள் விருப்பத்திற்காகத் தியாகம் செய்வேன். இகத்தையும் பரத்தையும் என்றென்றைக்கும் இழக்கும்படி சொன்னால் அதற்கும் சித்தமாயிருப்பேன். கொடிய பகைவர்களை மன்னிக்கச் சொன்னால் மன்னிப்பேன். அத்தியந்த நண்பர்களின் தலையைக் கொண்டு வந்து தங்கள் காலடியில் போடச் சொன்னால், போட்டு விட்டு மறுகாரியம் பார்ப்பேன்..!"

இவ்விதம் பார்த்திபேந்திரன் வெறி கொண்டவனைப் போல் கூறியபோது அவனுடைய உடம்பு தலையிலிருந்து கால் வரையில் நடுநடுங்கியது; அவனுடைய வாயிலிருந்து வந்த சொற்கள் குழறின; உதடுகள் துடித்தன; பற்கள் கடித்தன; ரோமங்கள் குத்திட்டு நின்றன; மூச்சு விடும் சப்தம் கொல்லன் உலைச் சப்தத்தைப் போலக் கேட்டது.

பார்த்திபேந்திரனுடைய இந்த மாறுதல் நேயர்களுக்கு வியப்பை அளிக்கும். ஏன்! அவனிடமே "நீ இப்படி ஆவாய்!" என்று முதல்நாள் யாராவது சொல்லியிருந்தால், அவன் நம்பியிருக்க மாட்டான். பிற்காலத்தில் நினைத்துப் பார்த்தால் அவனுக்கேகூட வியப்பளிக்கக் கூடிய காரியந்தான்.

ஆனால் இது பார்த்திபேந்திரனைப் பற்றிய அதிசயம் அல்ல; மனித இயற்கை பற்றிய இரகசியம்.

எத்தனையோ மேதாவிகள் காலமெல்லாம் ஆராய்ச்சி செய்த பின்னரும் மனித உடம்பின் அமைப்பு இரகசியத்தை நம்மால் முழுதும் அறிந்து கொள்ள முடியவில்லை. மனித இதயத்தின் அமைப்பு இரகசியத்தை எவ்வாறு அறிந்து கொள்ள முடியும்?

வாழ்நாளெல்லாம் பழிபாவங்களில் முழுகிக் கிடந்தவர்கள் திடீரென்று ஒருநாள் வைராக்கிய சீலர்களாகிறார்கள்; பக்தி பரவசமடைந்து ஆடிப் பாடுகிறார்கள்; இறைவன் கருணைக்குப் பாத்திரமாகிறார்கள்; மனித சமூகத்துக்கு ஒப்பற்ற தொண்டுகளும் புரிகிறார்கள்.

இதற்கு மாறாக, நெடுங்காலமாய்த் தூய்மையான களங்கமற்ற வாழ்க்கை நடத்தியவர்கள் திடீரென்று ஒருநாள் வழுக்கி விழுகிறார்கள்; அப்படி விழும்போது அதல பாதாளத்திலேயே விழுந்து விடுகிறார்கள்.

பார்த்திபேந்திரனுடைய ஆவேச மொழிகளைக் கேட்டு வந்த நந்தினி, "போதும், ஐயா, போதும்! நிறுத்துங்கள்! அவ்வளவு பயங்கரமான காரியம் எதையும் செய்யும்படி தங்களை ஒருநாளும் நான் வற்புறுத்தப் போவதில்லை. தங்களுக்கும் எனக்கும் உகந்த சந்தோஷமான காரியத்தைத்தான் சொல்லப் போகிறேன்" என்றாள்.

(தொடரும்)



**வி**சாலமான நெற்றியில் புனிதமான திருமண் இலங்க நம் அட்டைப்படத்தில் இவ்வாரம் காட்சி தருகிற ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரியார் அவர்களை எனக்குப் பல காலமாகத் தெரியும். ஆனால் அவரிடம் அதிகமாக நெருங்குவதில்லை. அப்படி நெருங்கினாலும் சட்டைப் பையில் பணம் கொஞ்சமும் வைத்துக் கொள்வதில்லை. பணம் வைத்துக் கொண்டு அவரை நெருங்கினால், ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவர் இல்லத்துக்காக அது அவரிடம் போய்விடும் என்பது நிச்சயம். ஆகையால் ஜாக்கிரதையாகத் தூரத்திலிருந்தே கும்பிடு போட்டுவிட்டுப் போய் விடுவேன்.

இந்த வழக்கத்துக்கு மாறாக, நாலு வருஷங்களுக்கு முன்னால் ஒரு நாள் ஏதோ ஒரு முக்கியமான விழா வைபவத்தின்போது ஸ்ரீ ராமானுஜாச்சாரியாரின் அருகில் உட்காரும்படி நேரிட்டு விட்டது. நான் அப்போது மிகவும் உற்சாகமாக இருந்த சமயம். ஏனெனில், ராஜாஜி சிறிது காலத்துக்கு முன்புதான் கவர்னர் ஜெனரல் ஆகியிருந்தார். எனக்குப் பெருமை பிய்த்துக்கொண்டு போயிற்று. ஸ்ரீ ராமானுஜாச்சாரியார் அவர்களிடம் நானே வலியப் பேச்சுக் கொடுத்தேன். "நம் ராஜாஜி கவர்னர் ஜெனரல் ஆகியிருக்கிறாரே? தெரியும் அல்லவா?" என்றேன்.

"எல்லாம் தெரியும்; அதனால் என்ன பயன்?" என்ற பதிலைக் கேட்டதும் திடுக்கிட்டுப் போனேன்.

"அது என்ன அப்படிச் சொன்னீர்கள்? நம் தமிழ் நாட்டவர் ஒருவர் கவர்னர் ஜெனரல் பதவிக்கு வந்தால், அது நமக்குப் பெருமை இல்லையா?" என்றேன்.

"பெருமையாவது? மண்ணாங்கட்டியாவது? இராமகிருஷ்ண மாணவர் இல்லத்துக்கு இன்னும் அவர் நன்கொடை அனுப்பவில்லையே! என்னத்திற்காகப் பெருமைப்படுவது!" என்றார் ஸ்ரீ ராமானுஜாச்சாரியார்.

"ராஜாஜியிடமா நன்கொடை எதிர்பார்க்கிறீர்கள்?" என்றேன்.

"எதிர்பார்ப்பதில் என்ன தவறு? அவர்தான் இப்போது நிறையச் சம்பளம் வாங்குகிறாரே?"

"ஐயா! ஆயிரம் பதினாயிரக்கணக்கில் வக்கீல் தொழில் செய்து சம்பாதிக்கக் கூடி

யவர், தேசத்துக்காக அத்தொழிலை விட்டு இருபத்தைந்து வருஷங்கள் வருமானம் ஒன்றுமே இல்லாமல் இருந்தாரே! இப்போது சில மாதங்களாகத்தானே சம்பளம் வாங்குகிறார்?"

''வருமானம் இல்லாதிருந்தபோது அவரை யார் கேட்டார்கள்? இப்போது சம்பளம் வாங்குகிறபோது கொடுக்கிறது தானே? சொந்தமாய்க் கொடுக்காவிட்டாலும் கவர்னர் ஜெனரல் தர்மம் கொடுப்பதற்கென்று ஏற்பட்ட நிதியிருக்கிறதே, அதிலிருந்து கொடுப்பதுதானே! அப்படிக் கொடுத்தால்தான் ராஜாஜி கவர்னர் ஜெனரல் ஆனதுபற்றி நான் பெருமையடைவேன்! இல்லாவிட்டால் மாட்டேன்" என்றார்.

சில தினங்களுக்குப் பிறகு மறுபடியும் ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரியார் அவர்களைச் சந்தித்தபோது, ''எப்படியும் உங்கள் ராஜாஜி பெரிய மனுஷர்தான். இராமகிருஷ்ணா ஹோமுக்கு இரண்டாயிரம் ரூபாய் அனுப்பியிருக்கிறார்!" என்றார்.

நான் மானஸீகமாக ஸ்ரீ ராமானுஜாச்சாரியார் அவர்களை மூன்று தடவை பிரதட்சணம் செய்து நமஸ்கரித்து, ''தங்களையே குருநாதனாகக் கொண்டேன். ஏகலைவனைப்போல் தங்களிடம் பொதுக் காரியங்களுக்குப் பணம் வசூலிக்கும் வித்தையைத் தூர இருந்து கற்றுக் கொள்வேன். என்றைக்காவது ஒரு நாள் தங்களிடமே ஒரு பத்து ரூபாயாவது வசூலித்து விட்டேனானால், அன்றைக்குத்தான் வித்தை பூரணமானதாகக் கருதுவேன்'' என்று மனதிற்குள் சொல்லிக் கொண்டேன்.

# பிறவிப்பயன் பெற்றவர்

"ஒன்றே செய்யவும் வேண்டும்; ஒன்றும் நன்றே செய்யவும் வேண்டும்" என்று கபிலர் அகவல் கூறுகிறது. உத்தமமான ஒரு கைங்கரியத்தை வாழ்க்கை இலட்சியமாக எடுத்துக்கொண்டு, அதற்கே தம் வாணாளை முழுக்க முழுக்க அர்ப்பணம் செய்தவருக்கு உதாரணம் வேண்டுமானால் ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரியார் அவர்களைப் பார்த்துக் கொள்ளலாம்.

சுவாமி விவேகானந்தரால் ஆரம்பித்து வைக்கப்பட்ட ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் என்னும் சமய-சமூக ஊழியச் சங்கத்தார் சென்னையில் நெடுங்காலமாகச் சிறந்த கல்வித் தொண்டு செய்து வருகிறார்கள். அந்தத் தொண்டிற்கு ஸ்ரீ இராமானுஜாச்சாரியார் தமது அறிவாற்றலையும், ஆயுட்காலத்தையும் அர்ப்பணம் செய்யத் தீர்மானித்தார். பின்னர், அப்பால் இப்பால் திரும்பிப் பார்க்கவில்லை. முக்கியமாக ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவர் இல்லம் என்னும் அநாதைப் பிள்ளைகளின் விடுதிக்குத் தம்மைச் சமர்ப்பித்து அந்த ஸ்தாபனத்தை இந்தியாவிலேயே ஓர் இலட்சிய ஸ்தாபனமாக நடத்தி வருகிறார்.

ஸ்ரீ ராமகிருஷ்ண ஹோம் என்று வழங்கப்படும் இந்த விடுதியை 1905ம் வருஷத்தில் ஏழு மாணவர்களுடன் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் நேர்சீடர்களில் ஒருவரான சுவாமி ராமகிருஷ்ணானந்தர் ஆரம்பித்து வைத்தார். அன்று முதல் இல்லம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்திருக்கிறது. பண்டித மாளவியா, மகாத்மா காந்தி முதலிய பெரியார்கள் இல்லத்துக்கு விஜயம் செய்திருக்கிறார்கள். அன்றுமுதல், இன்றுவரையில் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த சந்நியாசிகள்தான் இல்லத்தின் நிர்வாகப் பொறுப்பை ஏற்று

**அமரர் கல்கி**

நடத்தி வருகிறார்கள்.

ஆனால் இல்லம் நடைபெறுவதற்கு வேண்டிய பணம் வசூலிக்கும் பொறுப்பு மட்டும் ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரியார் அவர்களுடையது. ஏறக்குறைய முப்பது ஆண்டுகளாக அவர் மேற்படி ஸ்தாபனத்தின் காரியதரிசி பதவி வகித்து வருகிறார்.

அந்தப் பொறுப்பை அவர் நிறம்பட வகிப்பதினாலேயே ஏழு அநாதைச் சிறுவர்களுடன் ஆரம்பமான இல்லத்தில் இன்று 280 மாணவர்கள் தங்கி வருகிறார்கள். முதல் வருஷமாகிய 1905ம் ஆண்டில் வரவு ரூபாய், 1,19,000; செலவு ரூபாய் 1,69,751.

இல்லம் ஆரம்பமானதிலிருந்து இன்று வரை 47 ஆண்டுகளில் மொத்தம் ரூ. 33, 82,546 வசூலித்துச் செலவிடப்பட்டிருக்கிறது.

இந்தப் பிரம்மாண்டமான தொகையில், மிகப் பெரும் பகுதியை வசூலித்தவர் ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரியார் அவர்கள் தான். நிரந்தர நிதியில் சேரக் கூடிய பெரிய நன்கொடைகளையும் அவர் வசூலிக்கிறார்; வருஷாந்திர செலவுக்காகத் தவணை நன்கொடைகளையும் வசூலிக்கிறார்!

**ஸ்ரீ** சி. ராமானுஜாச்சாரியார் சென்னை சர்க்கார் காரியாலயத்தில் (ஸெக்ரடேரியட்டில்) பெரிய உத்தியோகத்தில் இருந்தார். அச்சமயம் ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவர் இல்லத்துக்குப் பணம் சம்பாதிப்பதற்காகவே ஒரு நாடக சபையை ஏற்படுத்தினார். அச் சபையில் நடிகர்கள் பெரும்பாலும் ஸெக்ரடேரியட் உத்தியோகஸ்தர்கள். ஆகையால் 'ஸெக்ரடேரியட் பார்ட்டி' என்று அந்த நாடக சபைக்குப் பெயர் ஏற்பட்டது.

1917-ம் வருஷத்தில் மேற்படி நாடக சபை ஆரம்பமானது முதல் 1945-ம் வருஷம் வரையில் மொத்தம் 227 நாடகங்கள் அவர்கள் நடத்தினார்கள். வசூலான தொகை அவ்வளவையும் ஸ்ரீ ராமகிருஷ்ண இல்லத்துக்கே கொடுத்தார்கள். அதை ஒரு நிரந்தர நிதியாக ஏற்படுத்தி விட்டபடியால், இன்று அதிலிருந்து நிரந்தர வட்டி வருமானம் வந்து கொண்டிருக்கிறது. (1951-ல் ரூ. 15, 805-8-0) வட்டி மூலம் கிடைத்தது.) வட்டி உள்பட இதுவரை நிதியில் சேர்ந்துள்ள தொகை ரூ. 5,46, 255.

ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரியார் உத்தியோகத்திலிருந்து விலகிய பிறகு, பொதுத் தொண்டிலும் நாடகக் கலையிலும் ஆர்வம் கொண்ட சில இளைஞர்கள் ஒன்று சேர்ந்து ஸ்ரீ ராமானுஜாச்சாரியார் அவர்களின் தலைமையில் **ஸ்ரீ ராமகிருஷ்ண கிருபா அமெச்சூர்ஸ்** என்ற பெயருடன் ஒரு நாடக சபையை அமைத்தார்கள். அச் சபையார் இது வரையில் ஐம்பத்தொரு நாடகங்கள் நடத்தி இல்லத்துக்கு ரூ.1,40,000 அளித்திருக்கிறார்கள்.

கிருபா அமெச்சூர்ஸ் நாடகங்களுக்கு டிக்கட் வாங்குகிறவர்கள் ஏதோ நல்ல காரியத்துக்குப் பணம் கொடுக்கிறோம் என்று எண்ணி மட்டும் வாங்குவதில்லை. "சிறந்த நாடகம் பார்க்கலாம்" என்ற ஆர்வத்துடனேயே வாங்குகிறார்கள்.

தமிழ்நாட்டில் தற்போதுள்ள அமெச்சூர் நாடக சபைகளில் ஸ்ரீ ராமகிருஷ்ண கிருபா அமெச்சூர்ஸ் தலை சிறந்து விளங்குகிறது.

ஸ்ரீ ராமானுஜாச்சாரியார் நாடகக் கலையில் மிகத் தேர்ந்தவர். தாமே வேடம் பூண்டு அபாரமாக நடித்துக் கொண்டிருந்தார். இப்போது நடிப்பதில்லை. ஆனால் அவருடைய பொதுத்தொண்டின் ஆர்வத்தையும் நாடகக் கலைத்திறனையும் பிதிரார்ஜிதமாகப் பெற்றிருக்கும் டாக்டர் ராகவாச்சாரியார் (ராயபுரம் ஆஸ்பத்திரித் தலைவர்), ஸ்ரீ வரதராஜன் ஆகிய அவருடைய இரு புதல்வர்களும் கிருபா அமெச்சூர்ஸ் நாடக சபையில் முக்கிய நடிகர்கள் ஆவர்.

**ஸ்ரீ** ராமகிருஷ்ணா மிஷன் ஸ்தாபனத்தின் கல்வித் தொண்டு பல வகைப்பட்டது. அவற்றில் மாணவர் இல்லம் மிக முக்கியமானது. இதில் தாய் தந்தையற்ற ஏழை அநாதைப் பிள்ளைகளே பெரும்பாலும் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். ஆனால் இவர்கள் படிப்பில் கூடிகையான புத்திசாலிப் பிள்ளைகளாயிருக்க வேண்டும். சென்னையில் யுத்த பீதி ஏற்பட்ட சமயத்தில் மாணவர் இல்லத்தின் ஹைஸ்கூல் பகுதி செங்கற்பட்டு ஜில்லா கிராமம் ஒன்றுக்கு மாற்றப்பட்டது; தற்

போது ஆத்தூர் என்னும் கிராமத்தில் நடந்து வருகிறது. மாணவர் இல்லத்தைச் சேர்ந்த மோட்டார் இயந்திர நுட்ப சாஸ் திரக் கலாசாலை மட்டும் சென்னையில் நடைபெறுகிறது.

மயிலாப்பூரில் சில பிரமுகர்கள் "விவே கானந்த கலாசாலை" என்ற பெயருடன் புதிய கலாசாலை ஒன்று ஆரம்பித்து, அதை ஸ்ரீ ராமகிருஷ்ணா மிஷன் நிர்வாகத் தில் நடத்துவதென்று முன் வந்தபோது, ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவர் இல்லக் கட்ட டத்தை மேற்படி கலாசாலைக்கு அளிப்பதென்று தீர்மானிக்கப்பட்டது.

"விவேகானந்தா கலாசாலை" தோன் றும்போதே புகழுடன் தோன்றியது. 1945-ல் 322 மாணவர்களுடன் ஆரம்பிக் கப்பட்டது. இன்று 1259 மாணவர்கள் படிக்கிறார்கள். மேலும் மாணவர்கள் சேருவதற்கு ஆர்வத்துடன் வருகிறார்கள். இடமின்மையால் சேர்த்துக் கொள்ள முடியாமல் நிர்வாகிகள் திணறுகிறார்கள்.

இந்தக் கலாசாலை ஸ்தாபனத்துக்கு யுனிவர்ஸிடி நிபந்தனைப்படி எடுத்த எடுப்பில் ரூ. 5 லட்சம் தேவையாயிருந் தது. அதற்கும் ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரி யாரின் 'ஆய் வந்த' கையையே நம்பி, அவ ரையே பொக்கிஷதாரராக நியமித்தார் கள். இரண்டு வாரத்தில் ஐந்து லட்சம் வசூலாகி விட்டது! கலாசாலை ஆரம் பமான பிறகு மேலும் ஐந்து லட்சம் ரூபாய் வசூலித்து லெபரேட்டரி கட்டடம் முதலியவை கட்டியிருக்கிறார்கள்.

"இந்த மகத்தான சாதனைக்குக் காரண புருஷர் அட்வகேட் ஸ்ரீ எம். சுப்பராயர் தான்" என்கிறார் ஸ்ரீ சி. ராமானுஜாச் சாரியார்.

"இல்லவே இல்லை; ஸ்ரீ சி. ராமானு ஜாச்சாரியார்தான்" என்கிறார் ஸ்ரீ எம். சுப்பராயர்.

இருவரும் ஒருவருடைய படத்தை இன் னொருவருடைய அறையில் மாட்டி வைத் துக் கொண்டிருக்கிறார்கள். நன்கொடை வசூலிக்கப் புறப்படும் போது ஒருவர் படத்தை ஒருவர் பார்த்து மனதைத் தைரி யப் படுத்திக் கொண்டு புறப்படுவார்கள் போலும்!

ஸ்ரீ ராமானுஜாச்சாரியார் அவர் களுக்கு இப்போது 77 பிராயம் ஆகிறது. ஆகவே இளமைப் பிராயந்தான். உடல் சிறிது தளர்ச்சியுற்றாலும், உள்ளத்தின் வலிவு அபாரமாயிருக்கிறது.

ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரியார் பரம பாகவதர். கர்நாடக சங்கீதத்தில் அபார மான அபிமானமும் தேர்ச்சியும் உள்ள வர். பிரபல வித்வான்களுக்குத் தெரியாத அபூர்வ தியாகராஜ கீர்த்தனங்கள் சில வற்றை அவர் அறிவார். சம்பிரதாய முறை வழுவாமல் பக்திப் பரவசராக மெய்மறந்து ஸ்ரீ தியாகராஜ கீர்த்தனங்களைப் பாடுவார்.

ஸ்ரீ இராமானுஜாச்சாரியார் நீடூழி காலம் இப்புவியில் வாழ்ந்து நூற்றுக் கணக்கான அநாதைப் பிள்ளைகளுக்குத் தாயும் தந்தையுமாயிருந்து காப்பாற்றிக் கல்வித் தொண்டு புரிய அருளுமாறு ஸ்ரீ ராமபிரானைப் பிரார்த்திக் கிறேன்.

அவர் நடத்தி வரும் அரும் பெரும் கல்விப் பணிக்குப் பணம் படைத்தவர் களும் பெரிய மனம் படைத்தவர்களும் பூரண உதவி செய்ய வேண்டும் என்றும் வேண்டிக் கொள்கிறேன். ○

**(கல்கி, ஆகஸ்ட் 17, 1952)**

# மடங்களின் மதப் பிரசாரம் எங்கே நடப்பது நல்லது?

நமது புராதன மடாலயங்களின் தலைவர்கள் சிறிது காலமாக விழிப் படைந்திருக்கிறார்கள். உலகத்தோடு ஒட்டி ஒழுகவும் காலத்துக்கேற்ற பணிகளைச் செய்யவும் முன் வரு கிறார்கள். சிறந்த தமிழ் நூல்களை நல்ல முறையில் வெளியிடுகிறார்கள். தமிழ் மணம் கமழும் பெயர்களுடனே சமய மகாநாடுகளைக் கூட்டிச் சமயப் பிர சாரம் தீவிரமாகச் செய்து வரு

கிறார்கள். - இவையெல்லாம் பாராட்டக் கூடிய காரியங்கள்தான்.

சென்னை மாநகரில் சமீபத்தில் பல தினங்கள் தொடர்ந்தாற்போல் சமயப் பிரசாரக் கூட்டங்கள் நடந்தன. தர்மபுர மடாலயத்தின் ஆதீனத்தின் கீழ் அவை நடைபெற்றன. செந்தமிழ்ப் புலவர்களும் பிரமுகர்களும் அக்கூட்டங்களில் கலந்து கொண்டனர். தமிழ் மொழியிலுள்ள அருமையான சமயப் பாடல்களில் பொதிந்திருக்கும் கருத்துக்களை எடுத்துரைத்தார்கள்.

சென்னை போன்ற நகரங்களில் இத்தகைய சமயப் பிரசாரக் கூட்டங்களை நடத்துவது மடாலயங்களின் திருப்பணியைப் பத்திரிகைகளின் மூலம் பிரசித்தியடையச் செய்வதற்குச் சாதனமாகும். இதுவும் அவசியமானதுதான். ஆனால் மொத்தத்தில் பலன் குறைவு என்றே சொல்ல வேண்டும். தெரிந்தவர்களுக்குத் தெரிந்த விஷயங்களைத் திரும்பத் திரும்பக் கூறுவதற்கே இக் கூட்டங்கள் பெரிதும் பயன்பட்டன.

சமயப் பிரசாரக் கூட்டங்கள் நல்ல பலன் அளிப்பதற்கு அவற்றை எங்கே கூட்ட வேண்டும்? கிராமங்களில் கூட்ட வேண்டும். முக்கியமாக, மடாலயங்களின் ஆதீனத்தின் கீழ் உள்ள கிராமங்களில் கூட்ட வேண்டும்.

தர்மபுரம்-திருவாவடுதுறை முதலிய மடாலயங்களின் ஆதிக்கத்தின் கீழ் அநேக கிராமங்கள் இருக்கின்றன. பல்லாயிரக் கணக்கான ஏக்கரா விஸ்திரணமுள்ள நிலம் இருக்கிறது. இந்த நிலங்களில் சாகுபடி செய்யும் உழவர் குடும்பத்தினர் ஆயிரக் கணக்கில் இருக்கிறார்கள்.

இவர்களிடையே முக்கியமாக சமயப் பிரசாரம் செய்யப்பட வேண்டும்.

மடாலயங்களின் ஆதிக்கத்தில் வேலை செய்யும் பல்லாயிரக்கணக்கான உழவர்களிடையே 'கம்யூனிஸ்ட்' பிரசாரமும் நாஸ்திகப் பிரசாரமும் நடைபெற விட்டுவிட்டுச் சென்னை மாநகரில் வந்து சமயப் பிரசாரம் செய்வது அவ்வளவு சிலாக்கியமென்று சொல்ல முடியாது.

மடாலயங்களின் ஆதிக்கத்திலுள்ள கிராமங்களில் சமயப் பிரசாரம் செய்வதற்கேற்ற சூழ்நிலை இப்போது இல்லை.

அதற்குக் காரணம் உழவுத் தொழிலாளரிடையே தங்கள் உரிமைகள் சம்பந்தமாக ஏற்பட்டிருக்கும் அதிருப்திதான்.

மடாலயங்களுக்கும் அவற்றுக்குச் சொந்தமான நிலங்களில் பயிரிடுவோருக்கும் நடுவில் குத்தகைதாரர்கள் சிலர் ஏற்பட்டிருக்கிறார்கள்.

குத்தகைதாரர்களினால் உழவர்களின் அதிருப்தி வளர்ந்து வருகிறது.

குத்தகை எடுத்தவர்கள் முடிந்த வரையில் தங்களுடைய லாபத்தைப் பெருக்கிக் கொள்ளப் பார்ப்பது இயல்புதான். அவர்களைக் குற்றம் சொல்வதிலும் ஒன்றும் பயன் இல்லை.

ஆனால் நிலங்களில் பாடுபட்டு உழைக்கிறவர்கள், தங்கள் உழைப்பின் பலனை நடுவில் உள்ளவர்கள் கொண்டு போகிறார்களே என்று ஆத்திரப்படுவதும் இயல்பே அல்லவா?

நிலங்களில் உழுது பயிரிடுகிறவர்களுக்கு நியாயமான உரிமைகள் வழங்குவதில் தனிப்பட்ட நிலச் சொந்தக்காரர்களைக் காட்டிலும் மடாதிபதிகள் முதன்மையாக நிற்க வேண்டியது அவசியம்.

அப்படி அவர்கள் முன்னால் நின்று உழவர்களுடைய நியாயமான கோரிக்கைகளைப் பூர்த்தி செய்தால், அவர்களுடைய சமயப் பிரசாரத் தொண்டும் அந்தக் கிராமங்களில் வெற்றி அடையும். அதுவே இந்த நாளில் மடாதிபதிகள் செய்ய வேண்டிய சமயப் பிரசாரமும் ஆகும்.

(கல்கி, ஆகஸ்ட் 3, 1952

# நடக்குமென்பார், நடக்கும்!

**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*



உங்க லைஃப் பார்ட்னர் உடல் நலம், மன நலத்துல ரொம்ப அக்கறை காட்ட வேண்டிய நேரம் இது. ஜுரம் மாதிரியான உடல் நலக் குறைவோ, மனச் சோர்வு, விரக்தி மாதிரியான பாதிப்போ அவங்களுக்கு ஏற்படலாம். இந்த வாரம் உங்களுக்குக் கனவுத் தொல்லை இருக்கும். கைக்காசு ஏகமா கரையும். செலவு இந்த வகையா வரும்னே சொல்ல முடியாது. ஆனா, பண நெருக்கடி இருக்காது. யாரையும் பகைச்சிக்காம அரவணைச்சிட்டுப் போறது - ஆபீஸ்ல பிரச்னை வராம இருக்க வழி செய்யும்.

**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*



வேலையில்லாம அலைஞ்சிட்டிருக்கறவங்களுக்கு உருப்படியான ஒரு பாதை தென்படும். முக்கியமான பணி ஏதாவது தொடங்கியிருந்தீங்கன்னா, அது நல்லபடியா நடந்து முடியும். வீட்டுல இருக்கக் கூடிய சின்ன பிரச்னைகளைப் பெரிசு படுத்தாதீங்க. பெற்றோர் உடல் நலத்துல அக்கறை காட்ட வேண்டிய நேரம் இது. அரசியல்வாதிகளுக்கு நல்ல செல்வாக்கு, வியாபாரிங்களுக்குக் கணிசமான லாபம், விஞ்ஞானிகளுக்குப் பாராட்டு, புகழ் எல்லாம் உண்டுன்னாலும் கலைத் துறையினருக்குப் போட்டியாளர்களால சிறு சங்கடங்கள் வரலாம். பணப் பிரச்னை இருக்காது. சிலருக்கு உத்யோக மாறுதல்கள் ஏற்படலாம்.

**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*



ரொம்ப அலைச்சல் இருக்கும். இதனால இந்த வாரம் முழுக்க எரிச்சலும் கோபமும் பொங்கி வரும். வீட்டுல சம்சாரத்தையோ/ புருஷனையோ கண்டபடி திட்டறதுக்கு நிறைய சான்ஸ் வரும். ஆனா, அடக்கியே ஆகணும். வாயை மூடிட்டிருக்கறதுதான் இந்த வாரம் உங்களைக் காப்பாத்தக் கூடிய ஒரே விஷயம். கூடப் பிறந்தவங்களால சில நல்ல காரியங்கள் நடக்கும். பண உதவி கூடக் கிடைக்கும். ஆனா வெளி ஆளுங்க கிட்ட கடன் மட்டும் வாங்கிடாதீங்க. ஷேர், ரேஸ், லாட்டரி பக்கம் தலை வெச்சிப் படுக்காதீங்க. ஒரு நீண்ட தூரப் பயணம் செய்ய வேண்டி வரலாம். பர்ஸ் பத்திரம்.

**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*



கிரகங்கள் ரொம்ப சாதகமா இருக்கு. உங்க நீண்டகாலத் திட்டங்களை நிறைவேற்ற இது சரியான சமயம். எதிர்பார்த்த உதவிகள் கரெக்டா வந்து சேரும். கூட்டுத் தொழில் செய்யறவங்களுக்கு மட்டும் பார்ட்னரால ஏதாவது பிரச்னை வரலாம். அரசியல்வாதிகளுக்கு இது வரை இருந்து வந்த சங்கடங்கள் விலகி, புகழ் உயரும். பெண்களுக்கு? கேட்கவே வேண்டாம். தொட்டதெல்லாம் வெற்றிதான் போங்க! ஆனா, பசங்க படிப்புல ரொம்ப கவனம் செலுத்த வேண்டிய நேரம் இது.

**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*



மனசுல துணிச்சலும் செயல்ல வேகமும் இருக்கற உங்களுக்கு என்னங்க கவலை? தொட்டதெல்லாம் வெற்றிதான். இந்த வாரம் பலருக்குப் புதிய நண்பர்கள் அறிமுகம் கிடைக்கும். சிலர் வெளிநாடு போறதுக்கான வாய்ப்பு கூடிவரும். உத்யோக ரீதில பதவி உயர்வு கூட வரலாம். பெண்களுக்கு நகைகள் வாங்க வாய்ப்பு கூடி வரும். கல்யாணமாகாதவங்களுக்கும் நல்ல சேதி வரப் போகுது. ஒரு மகான் தரிசனம் அநேகமா வெள்ளிக்கிழமை கிடைக்கலாம். பொதுச் சேவைல ஆர்வம் உள்ளவங்களுக்கு வாகான வாய்ப்புகள் ஏற்பட்டு, அதனால புகழும் கூடும். வியாபாரிகள், கல்வியாளர்கள், எழுத்தாளர்கள் எல்லாருக்குமே நல்லது நடக்கப் போற வாரம்தான். ஆனா பூச்சிக்கடியால சிலருக்கு அலர்ஜி மாதிரி ஏதாவது வரலாம்.

**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*



அப்பப்ப சிறுசிறு சலனங்கள் இருந்துட்டே இருக்கும். கிளம்பும்போது வீட்டைப் பூட்டினோமா? முக்கியமான ஃபைலை ஆபீஸ்ல பத்திரமா வெச்சோமான்னு மறந்து போய்த் தடுமாறுவீங்க. இந்த வாரம் நீங்க செய்யற ஒவ்வொரு முக்கியமான வேலையையும் 'முடிச்சாச்சு'ன்னு ஒரு பேப்பர்ல எழுதி வைச்சுக்கறது நல்லது. ஆன்மீகத் துறைல இருக்கறவங்களுக்கு இந்த வாரம் வெளியூர்ப் பயணங்களுக்கான வாய்ப்பு நிறைய வரும். தண்ணி ஒத்துக்காம சிலருக்கு ஜலதோஷத் தொல்லை

வரலாம். வீட்டுல ஏதோ நல்ல காரியம் நடக்கப் போவுதுல்ல? பணத்தை வீணா செலவழிக்காம சேர்த்து வைக்கிறது நல்லது. இந்த வாரம் உங்களுக்கு திடீர் அதிர்ஷ்டம் ஏதாவது அடிக்கும். பெற்றோர் மனசு புண்படாம நடந்துக்க வேண்டியது ரொம்ப அவசியம்.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

உங்க பிள்ளைங்க உடல் நலத்துல அக்கறை செலுத்த வேண்டிய நேரம். நீங்க கூட அடிக்கடி வெளியில அலையறதோ, நீண்ட தூரப் பிரயாணம் செய்யறதோ வேண்டாம். ஆபீஸ்ல சில சில்லுண்டிப் பிரச்னைகள் வரலாம். அதிகாரிகளைப் பகைச்சுக்காதீங்க. கோர்ட் விவகாரங்கள் ஏதும் இருந்ததுன்னா சுலபமா தீர்ந்துடும். மத்தபடி பணப் பிரச்னை இருக்காது; தொழில் வளர்ச்சில குறை இருக்காது. எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்களுக்கும் புகழ் கூடி வரும். சட்டத்துறை, காவல் துறை அதிகாரிகளுக்குப் பணிச் சுமை அதிகமா இருக்கும்னாலும் எதிலும் வெற்றி உறுதி.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

எந்தப் பிரச்னையும் இல்லாத சுகவாசி சார் நீங்க. வீட்டுல இருக்கறவங்க உங்க மேல அபரிமிதமான அன்பு வெச்சிருப்பாங்க. நீங்க ஒரு எழுத்தாளராவோ, பேச்சாளராவோ இருந்தீங்கன்னா, இந்த வாரம் நீங்க ரொம்ப சந்தோஷப்படறாப்பல ஒரு நல்ல தகவல் வரப் போறது உறுதி. இளைஞர்களுக்குத் திருமண யோகம் கூடி வருது. வராத பழைய பாக்கிகளும் வந்து சேரும். பெண்களுக்குக் கோயில் கோயிலா சுத்தர நேரம் இது. கொடுக்கல் வாங்கல்ல மட்டும் உஷாரா இருங்க. புதிய நபர்களோடு பழகும் போது எச்சரிக்கை அவசியம்.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

ரெண்டுல கேது. எட்டுல ராகு. கொஞ்சம் சிரம தசைதான். எதையும் நாலு தடவை தீர ஆலோசிச்சிட்டு இறங்கறது நல்லது. வீட்டுப் பெரியவங்க கிட்ட கன்ஸல்ட் பண்ணாம எந்தப் புது முயற்சிகளையும் தொடங்காதீங்க. வெளியூர் பயணங்களைக் கூடிய வரை தவிர்க்கறது நல்லது. கொழுப்பு அதிகமான உணவை சாப்பிடாதீங்க. சிலருக்குத் தலை சுத்தல், வாந்தி மாதிரியான உபத்திரவங்கள் வரலாம். உங்க பிள்ளைகளால சில நெருக்கடிகள் வரலாம். ஆத்திரத்துல கண்டபடி பேசிடாதீங்க. பல்லைக் கடிச்சிட்டுத் தள்ள வேண்டிய வாரம் இது.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

தொழில் ரீதில சில சிக்கல்கள் வரத்தான் செய்யும். ஆனா சாமர்த்தியமா செயல்பட்டீங்கன்னா, எதையும் சமாளிச்சிடலாம். உங்க வளர்ச்சில அக்கறை கொண்டவர்களை அடிக்கடி சந்திச்சு கெய்டன்ஸ் வாங்கிக்கறது நல்லது. பண விஷயத்துல எச்சரிக்கையா இருங்க. விளையாட்டுத் துறையினருக்குப் பரிசுகள், புகழ் சேரும் வாரம் இது. பெண்களுக்கு முதுகு வலி மாதிரி பிரச்னைகள் வரலாம். இரவுப் பயணம் குறிப்பா பஸ் பயணம் தவிர்க்கறது ரொம்ப நல்லது.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

பராக்கிரமசாலிங்க நீங்க. அபாரமான தெய்வ பக்திதான் உங்க பலம்! வீட்டுலயும் சரி; ஆபீஸ்லேயும் சரி - நீங்க வெச்சதுதான் இப்ப சட்டமா இருக்கும். இந்த வாரம் உங்க நீண்ட நாள் கனவு ஒண்ணு நனவாகும். வீட்டுல ஏதோ விசேஷம் வரப் போகுதில்லையா? கொஞ்சம் பணம் சேர்த்து வெச்சுக்கங்க. உங்க எதிரிகள் எப்ப உங்களை மட்டம் தட்டலாம்னு காத்துட்டு இருக்காங்க. அதனால லூஸ் டாக்ஸ் விடறது, யாரைப் பத்தியும் கமெண்ட் அடிக்கறது வீண் வம்புகள்ல கலந்துக்கறது - இதெல்லாம் வேணாம்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

கேது மட்டும்தான் உங்களுக்கு அனுகூலமா இருக்கு. அதனால ரொம்ப எச்சரிக்கையா இருங்க. வீண் வம்புகள்ல மாட்டிக்காம, புது முயற்சிகள் எதையும் இப்ப தொடங்காம இருக்கறது நல்லது. பண இழப்புக்கான வாய்ப்பு இருக்கு. ராத்திரில சிலரைத் தெரு நாய் துரத்தி காபரா கிளப்பும். விஷக்கடி அபாயமும் இருக்கு. பழைய குப்பைகளைக் கிளறாம இருக்கறது நல்லது. வீட்டுல வாழ்க்கைத் துணையோட அனுசரிச்சி நடந்துக்கங்க. சண்டைகள், ஊடல் லெவல்லேருந்து மோதல் லெவலுக்குப் போக சான்ஸ் இருக்கு. குறிப்பா, இந்த ஒரு வாரத்தைத் தள்ளறது ஒரு மாசத்தைத் தள்றதுக்குச் சமம்.

**கும்ப ராசிக்காரரான எழுத்தாளர் விக்கிரமனின் நீண்ட நாள் கனவு நனவாகப் போகுதாம்!**



## மார்ச் 24 முதல் 30 வரை

**3**

அதனிடையே சரஸ்வதி தேவியைப் பற்றி ஒரு கதை கேள்விப்பட்டேன். தேவியின் முதலாவது காதல் நாடகம்.

முதலாவதோ இரண்டாவதோ மூன்றாவதோ. அதெல்லாம் எனக்குத் தெரியாது. நான் கேள்விப்பட்டதில் முதலாவது. என்னைப் பார்க்க ஒரு கனவான் இங்கே வந்தார். வந்து என்னைத் தன் வீட்டிற்கு வரும்படி அழைத்தார்.

சும்மா டீ குடித்துவிட்டு வம்பளக்கத்தான்.

அவருடைய மனைவி எனக்காக டீ தயார் செய்கிறார் என்றும், அந்தத் திருமதி என் பரம ரசிகையென்றும், இரண்டு குழந்தைகளையும் தன்னையும் கஷ்டப்படுத்தி விடாதீர்கள் என்றும் பிறவும் அவர் சொல்லி, சிரித்துக் கொண்டே நாங்கள் அங்கே போனோம்.

நாயர்கள்தான். அந்த மனைவிக்கும்

# ஒரு காதல் ஜோடி



கணவருக்கும் இலக்கியத்தோடு பற்று உண்டு. 'நான் உங்கள் மனைவியைத் தட்டிக் கொண்டு போவேன்!' நாங்கள் வெடித்துச் சிரித்துக் கொண்டு போகும்போது அடுத்த வீட்டிலிருந்து சரஸ்வதி தேவி இறங்கி வந்தாள்.

எந்த பீடிகையுமின்றி என்னை மடக்கிக் கேட்டாள்.

"மற்ற புஸ்தகங்க எல்லாம் அச்சடிச்சாச்சா? நான் உடனே மதராஸ் போறேன். கான்வொகேஷன்."

புத்தகங்களை பிரஸ்ஸில் கொடுக்காததற்குத் தேவிதான் காரணம் என்று தேவிக்குத் தெரியுமா? கதைகளை ஒழுங்கு படுத்த எடுக்கும் போதெல்லாம் தேவியின் உருவம்தான் கண்முன்னே.

நான் சொன்னேன்.

"பிரஸ்ஸுக்குக் கொடுக்கலே. மதராஸிலேயிருந்து திரும்பி வர்றப்போ ஒருவேளை ஒழுங்கு பண்ணிடுவேன்."

"அப்ப ஒருவேளை இங்கேருந்து கௌம்பிடுவீங்க?"

"அதில்லே. நீங்க திரும்பி வர்றப்ப நான் இங்க இருப்பேன். எப்பப் போறீங்க?"



"ரெண்டு நாள்ல."

"சரி... எனது நல்வாழ்த்துக்கள்."

நாங்கள் நடந்தோம். அவருடைய வீட்டை அடைந்தோம். அவர் மனைவி என் வழுக்கைத் தலையைப் பற்றிச் சொல்லிச் சற்று சிரித்தாள். நாங்கள் டீ குடிக்க முனைந்தபோது அந்தப் பகுதி மனிதர் ஒருவர் வந்தார்.

அவர் ஒரு வேலையில்லாத இளைஞர். எங்களுக்குள் ஏற்கெனவே பரிச்சயம். டீ குடித்து முடிந்து ஏதேதோ தமாஷாகப் பேசிக் கொண்டிருக்கும்போது என் நண்பரின் மனைவி கேட்டாள்.

"ஏன் கல்யாணம் பண்ணிக்கலே?"

நான் சொன்னேன்.

"பெண்ணும் ஆணுமா ஒரு ஆயிரம் பேருக்கு மேலே இப்படிக் கேட்டிருக் காங்க. ஏன் கல்யாணம் பண்ணிக்கலே?"

"ஒங்களுக்குப் பெண்களோட விரோதமா என்ன?" அவர் மனைவியின் கேள்வி. நான் சொன்னேன்.

"ஐயோ... ஒரு விரோதமும் இல்லே."

"முன்னாடி எப்பவாவது உங்களைப் பெண்கள் மோசம் பண்ணியிருக்காங்களா?"

"இல்லே."

"பின்னே ஏன் கல்யாணம் பண்ணிக்கலே?"

"ஒரு பொம்பளையோட இருபத்தி நாலு மணி நேரம் ஒண்ணாக் கழிக்கறது கஷ்டம். அவளோட சபலங்களும் தட்டாமாலைப் பேச்சும் எனக்குச் சகிக்காது."

"அப்படி வரட்டும்" நண்பரின் மனைவி சொன்னாள்.

"ஈஸ்வரா, எனக்கு அப்பவே தெரியாமப் போச்சே! தெரிஞ்சிருந்தா உங்களுக்குக் குடுத்த டீயிலே விஷம் கலக்கி இருப்பேனே."

நான் சொன்னேன்.

"நான் அம்மணி மொகத்தைப் பார்த்து சந்தோஷமாக் குடிச்சிருப்பேனே!"

"என் சிநேகிதா!" நண்பர் சொன்னார், "நான் எப்படிப்பட்ட ரத்த சாட்சின்னு பாரு. அஞ்சு வருஷமா நிரந்தரமா இவளோட தட்டாமாலைப் பேச்சைக் கேட்டுட்டே ஜீவிக்கிறேன். நான் இதெல்லாம் சகிச்சுக்கிட்டிருக்கேன். நீங்க இவ்வளவு நல்ல மனுஷர்னு எனக்குத் தெரியலியே."

"அப்படின்னா கூடவே போயிடுங்க" என்றாள் அவர் மனைவி.

அந்தப் பகுதி இளைஞனும் என் கட்சியில் சேர்ந்து பேசினான். நண்பரின் மனைவி எங்களைக் கொல்லுகிற ஆத்திரத்தோடு பார்த்தாள்.

"பெண்கள் கெட்டவர்கள்! இருந்தாலும் மோப்பம் பிடிச்சு மோப்பம் பிடிச்சு பின்னாலேயே போவீங்க."

**வைக்கம் முகம்மது பஷீர்**

தமிழில்:
**வையவன்**

பெண்களுடைய சபலங்களைப் பற்றி அவர்கள் இருவரும் மிகவும் உற்சாகமாகப் பேசினார்கள். நான் நண்பரிடம் கேட்டேன்.

"அந்தக் கண்ணாடிக்காரி இருக்காளே?"

"ஓ சரஸ்வதி தேவி! அவங்களைப் பத்தி ஒரு கதை இவங்களுக்குத் தெரியும். இவங்க ஒண்ணாப் படிச்சவங்க. இவங்களோட ஒரு சிநேகிதரும் அவளும் காதலர்கள். அந்த ஆசாமி இப்போ மெட்ராஸ்லே இருக்கார். நீங்க சொல்ல வந்தது?"

பிறகு அதைச் சொல்வதில் சுவாரஸ்யம் போய் விட்டது. என் மனம் புகையத் தொடங்கிற்று.

'மதராஸ்... கான்வொகேஷன்...'

இருந்தாலும் நான் அதைச் சொன்னேன்.



''அந்த டைரக்டரோட படத்துல 10-வது ரசம்தான் நிறைய இருக்கும்.''

''நவரசம்னு கேள்விப்பட்டிருக்கேன்; அது என்ன 10-வது ரசம்?''

''விரசம்தான்!''

– சீர்காழி வி. ரேவதி

ஒரு முகமாற்றமும் காட்டாமல் சிரித்த படியே. தேவிக்கு நான் எழுதித் தந்த சொற்பொழிவு. தேவிக்கு வாசித்துக் காட்டத் தொடங்கியபோது வேலைக்காரன் கொண்டு வந்த ப்ளவுஸ் துணியைப் பார்க்கப் போனது. அந்தச் சம்பவங்களைப் பற்றித்தான்.

"சரஸ்வதி தேவி வெள்ளை ஆடையே உடுத்தறதுன்னு ஒரு சபதம் செஞ்சுக்கிட்டதுண்டு." கொஞ்சம் கழிந்து மற்றவர் பேசத் தொடங்கினார். "நான் சொல்றது ரகசியமா இருக்கட்டும். ஒங்களுக்குள்ளே பரிச்சயம் உண்டுன்னு எனக்குத் தெரியும். சரஸ்வதி தேவிகிட்டயும் கேட்கக் கூடாது. நான் சொன்னேன்னும் சொல்லக் கூடாது."

"இல்லே." நான் உட்கார்ந்து புழுங்கினேன். இரண்டு காதுகளிலும் 'ஹோர்' என்று முழக்கம் போல் விழுந்தது. அவர் சொன்னதை அப்படியே நான் காதில் வாங்கவில்லை. மனம் பதறிவிட்டது.

என்ன காரணம்?

நான் சரஸ்வதி தேவியை நேசிக்கிறேனா?

தேவியைப் பற்றிக் கேட்டதும் மிகவும் பொறாமை தோன்றியது.

தேவி மிகவும் அழகியல்லவா... படிக்கிற காலத்தில் அப்பு என்று ஒரு மாணவனோடு நேசம் கொண்டாள். அவன் பெரிய அழகனல்ல. கறுத்த ஆள். பெரிய 'ஃபுட்பால்–ப்ளேயர்'. அவர்கள் காதல் மிகவும் லட்சிய பூர்வமாக இருந்தது. வெள்ளை உடையே அணிவது என்று இருவரும் முடிவு செய்தனர். அநேக காதல் கடிதங்கள் கை மாறின.

தினந்தோறும் அப்பு தேவி வீட்டிற்குப் போவான். தேவியின் சகோதரர்கள் எதிர்த்தனர். பிறகு யாரும் இல்லாத சமயத்தில் போவான். ஒருநாள் உச்சிவேளையில் தேவியின் சகோதரன் வீட்டிற்குள் போனபோது தேவி அப்புவின் மடியில் இருப்பதைப் பார்த்தனர்.

தேவியின் அண்ணன் பேனாக் கத்தியால் அப்புவைக் குத்த ஓடினான். தேவி குறுக்கே ஓடி வந்து விழுந்தாள்.

"என்னைக் குத்து! நான் சொல்லித்தான் அப்பு வந்தது."

அண்ணன் குத்தினான். குத்து விழுந்தது தேவியின், கைத்தண்டில். அதெல்லாம் நடந்து. பின் அப்பு ஊரை விட்டே போய் விட்டான்.

மதராஸில் நிலையூன்றினான். இருவருடைய கடிதங்களும் முறை வைத்தவாறு வந்து போய்க் கொண்டிருந்தன. அது தவிர அப்புவுக்குத் தெரிந்த கல்லூரி மாணவி ஒருத்திக்கும் தேவி கடிதங்களை எழுதிக் கொண்டிருந்தாள்.

தேவிக்கும் தனக்கும் உள்ள காதல் உறவைப் பற்றி அப்பு அந்த இளம் பெண்ணிடம் சொல்ல வேண்டி வந்தது. உன்னதமான காதல் உறவு. அச்சமயம் அந்தப் பெண் தேவி தனக்கு எழுதிய ஒரு கடிதத்தை அப்புவிற்குக் காட்டினாள்.

தேவியைக் கல்லூரியில் உள்ள ஒரு லெக்சரர் நேசிக்கிறார்! தீவிரக் காதல். தேவி வண்ண ஆடைகளை உடுக்கத் தொடங்கி விட்டாள்.

"உங்களுடைய உன்னதமான காதலுறவு?"

அந்தப் பெண் பரிகசித்தாள்.

அப்ப போய் ஒரு வர்ண ஸூட் தைத்துக் கொண்டான்; அதுவோ இல்லை அப்புவின் கழுத்தில் தேவி போட்ட மாலையோடு இருக்கும் போட்டோவைத் திருப்பி அனுப்பினான் என்றோ ஏதோ என் நண்பரின் அண்டை வீட்டு இளைஞன் சொன்னான்.

அவனும் அப்புவும் ஆத்ம சிநேகிதர்கள். எல்லாக் கடிதங்களையும் அவன் பார்த்திருக்கிறான். இதை எல்லாம் என்னால் சீராகக் கிரகிக்க முடியவில்லை.

அப்பு உடல் நலமின்றி ஆஸ்பத்திரியில் படுத்திருந்தான் (அங்கா அல்லது அந்த கல்லூரித் தோழி வீட்டிலா?) எப்படியானாலும் சிகிச்சை செய்ய வந்த நர்ஸைத் திருமணம் செய்து கொண்டான்! முடிவில் இளைஞன் சொன்னான்.

"இந்தச் செய்தி கேட்டு தேவி அன்று மயங்கி விழுந்தாள். உடல் நலம் கெட்டு பல நாள் படுக்கை. இப்ப, இப்பதான் ஒடம்பு ஒரு மாதிரி பச்ச பிடிக்கத் தொடங்கியிருக்கு. இப்பதான் பட்டு ஸாரிகளும் மற்றதும் உடுக்கத் தொடங்கி இருக்கா. இதெல்லாம் அந்தப் பொண்ணு கிட்டே சொல்லக் கூடாது. சொல்லிடுவீங்களா?"



தேவியைத் தேற்றவேண்டுமென்று எனக்குத் தோன்றியது. இருதயத்தோடு இருதயமாக இறுகத் தழுவிக் கொண்டு "துயரின் இனிமையுள்ள மோகன காவியமே! நான் உன்னை நேசிக்கிறேன்" என்று ஆயிரம் முறை சரஸ்வதீ தேவியின் காதுகளில் மந்திரம் போல் ஓதத் தோன்றியது.

தேவியின் ஒவ்வொரு மயிர்க்காலிலும் முத்தமிடத் தோன்றியது. ஆனால் எதையும் நான் வெளியே காட்டிக் கொள்ளவில்லை. மானசிகக் குழப்பங்களில் சிக்கிக் கொள்ளக் கூடாது என்று ஏற்கெனவே நான் உறுதி பூண்டிருந்தேன். இருந்தாலும் தேவியின் தோற்றமும் பாவமும் காணும்போது என் இதயம் வேதனைகொள்ளும். இப்படி வெந்து புழுங்கினேன்.

மதராஸுக்குப் போகப் பயணப்பட்டு நான் குடியிருந்த வீட்டுக்கு வருவதைக் கண்டேன். ஒரு கறுப்புப் பட்டுப் புடவையும் வெள்ளை பிளவுஸும் உடுத்தி வந்தாள். பார்த்ததுமே நான் உள்ளறைக்குப் போய் விட்டேன்.

என்னிடம் விடைபெறவே வந்திருக்கிறாள் என்று எனக்கு நன்றாகத் தெரியும்.

விடைபெறாமலேயே தேவி மதராஸுக்குப் போனாள். இரண்டு வாரங்களில் திரும்பி வருவாள் என்றும் எனக்குத் தெரியும். வரும்போது நான் இங்கே இருக்கக் கூடாது. இந்தக் காதலை சிதைத்துவிட வேண்டும்! எப்படி!

சரஸ்வதி தேவியின் அசட்டுத் தனங்களைப் பற்றி, சபலங்களைப் பற்றி நினைத்தேன். தான் ஒரு அழகி என்று சதா நினைக்கிற பெண் அவள். பெரிய பேச்சாளி என்ற நினைப்பும் உண்டு. சொந்தமாய் ஒன்றும் சிந்திப்பதில்லை. பழைய பஞ்சாங்க நம்பிக்கைகளே இதயம் நிறைய. அதில்

## உழைப்பை நிறுத்தினால் ஆபத்து!

அமெரிக்க கோடீசுவரர் இராக்பெல்லர், வயதான நிலையிலும் உழைத்துக் கொண்டே இருந்தார். ஒரு சமயம் விமானத்தில் சென்றார். அப்போது பக்கத்தில் இருந்த ஓர் இளைஞன் "கோடிக் கணக்கில் வருமானம் வரும்போது பேசாமல் ஓய்வு எடுக்கலாமே!" என்று கேட்டான்.

அதற்கு இராக்பெல்லர், "நாம் பயணம் செய்து கொண்டிருக்கும் விமானத்தை விமானி ஒரு நிலையான உயரத்தில் பறக்க வைத்திருக்கிறார். வீணாக எதற்கு எஞ்சினை இயக்க வேண்டும் என்று எஞ்சினை நிறுத்தினால் என்ன ஆகும்?" என்று கேட்டார்.

"விபத்து ஏற்படும்!" என்றான் இளைஞன்.

"வாழ்க்கைப் பயணமும் அப்படித்தான். உழைத்துக் கொண்டே இருக்க வேண்டும். உழைப்பு நின்றால் ஆபத்து. உழைப்பானது வருமானத்தை மட்டுமே தருவதாக நினைக்கக் கூடாது. உடல் ஆரோக்கியத்திற்கும் மன மகிழ்ச்சிக்கும் கூட அது உதவுகிறது" என்று கூறினார் இராக்பெல்லர்.

– பாலு

காயங்கள் உண்டு. உடம்பிலே சுத்தமாய் சதையே இல்லை. தளர்ந்த மார்பு.

ஆக மொத்தம் ஆடையழகு, பவுடர் அழகு, கண்ணாடி அழகு. தலைமுடியை இறுகக் கட்டி பின்னால் அப்பம் போல வைத்து நடக்கும்போது சாய்ந்த கழுத்தும் முன்னோக்கிய வளைசலும்–ஆக இளமையாகக் காட்டிக் கொள்ளும் ஒரு பாவனை.

மற்றொன்று. தேவி வெள்ளை நிறம்! சகோதரர்களும் தங்கையும் கறுப்பு. அம்மா லேசான வெளுப்பு. அப்பா இருண்ட நிறம். தேவிக்கு எப்படி வெள்ளை நிறம் வந்தது?

தேவியை மறக்க என்ன செய்தும் முடியவில்லை. எப்பொழுதும் சிந்தனை. அடுத்த வாரம் மதராஸிலிருந்து வருவாள். அப்போது என்னைக் காணக் கூடாது.



"அடிப்படையில் நீயும் நானும் மனிதர்கள் தானே! மனுஷனுக்கு மனுஷன் வறட்டுக் கௌரவம் என்ன வேண்டிக் கிடக்கு?"

"உங்க முற்போக்கு சிந்தனையைப் பாராட்டறேன். அதுக்காக பியூனான என்னிடம் அடிக்கடி நீங்க கடன் கேட்டா நல்லாலீங்க!"

— உ. ராஜாஜி

நான் அந்த வீட்டைக் காலி செய்தேன்.

தேவியின் சகோதரர்களுக்கும் தங்கைக்கும் கொடுத்திருந்த புத்தகங்களை திரும்ப வாங்கிக் கொண்டேன். தேவி வாசித்து முடிப்பதற்கு முன்பே அப்புறம் பெட்டி, படுக்கை, மேஜை, நாற்காலிகளோடு புத்தகங்களையும் எடுத்துக் கொண்டு வேறோர் இடத்திற்குப் போனேன்.

அங்கே அடுத்துள்ள பெண்களின் மீது கவனம் செலுத்த முயன்றேன். ஆனால் ப்லிக்கவில்லை. கவனம் செல்லவில்லை. அதற்கிடையில் வேறொரு நிகழ்ச்சி.

தேவிக்குத் தெரிந்தவன் ஒருவன் முற்போக்கு எழுத்தாளர்களை எதிர்த்து ஒரு கட்டுரை வெளியிட்டான். தேவி என்னிடம் சொன்ன சிறுபிள்ளைத்தனமான கருத்துக்கள் அதில் இருந்தன.

அந்த நபரையும் தேவியையும் இணைத்து நான் சில ஊகங்கள் செய்தேன். பலமாய் ஊகித்தேன். கடினமாக ஊகித்தேன். தேவியின் அண்ணனைச் சந்தித்த போது அவர் என்னிடம் கேட்டார்.

"அந்தக் கட்டுரையைப் பாத்தீங்களா, ஒங்களுக்கெல்லாம் அதிலே சரியான அடி!"

"அது சரஸ்வதி தேவிதானே எழுதியது? நல்லா இருக்கு. மதராஸ்லருந்து வந்துட்டாங்களா?"

வந்து விட்டாள்.

தேவி என் இதயத்திற்குள்ளும் வந்தாள். நான் அறியாமல் வந்து படியேறி அமர்ந்தது போல். சதா சிந்தனை. தீவிரமான சிந்தனை. என்னைப் பற்றி தேவியின் தீவிரமான சிந்தனையின் அலைகள்.

என்ன கதை இது!

தேவி எதற்காக என்னைப் பற்றிச் சிந்திக்க வேண்டும்? வேண்டாம். எனக்கு அவளை வெறுக்க வேண்டும். மறக்க வேண்டும்.

அப்படி, அதற்கிடையே நான் ஒரு நாள் சாலையோரம் நிற்கும்போது தேவி வருவதை தூரத்தில் இருந்தே, தேவி என்னையும் நான் அவளையும் பார்த்தோம். நெருங்கி வந்து புன்னகையோடு போய்வந்ததைச் சொல்வாள்! கூடாது. நான் சட்டென்று வீட்டுக்குள் போய்விட்டேன். தேவி அப்படியே போகட்டும். என்னை எதற்கு நெருங்கிவர வேண்டும்?

தேவியை இனி தினந்தோறும் பார்க்க வேண்டி வரும் என்று நான் மீண்டும் இடம் மாறினேன். அங்கே போன ஐந்தாவது நாள் தேவியின் முதலாவது கடிதம் வந்தது. கொண்டு வந்தது அவள் சொந்தத் தம்பி.

நான் உறையைப் பிரித்தேன். தீர்க்கமான ஒரு கடிதம்.

"பிரியமுள்ள நண்பரே!

தங்கள் மீதுள்ள மதிப்பினால் மட்டுமே நான் இதை எழுதுகிறேன். நாம் சந்தித்தோம். கடலிலே கப்பல்களைப் போல. ஒரு மணி நேர இனிய உரையாடலுக்குப் பின் நாம் பிரிகிறோம்.

எதற்கு தப்பபிப்பிராயங்களின் மேகங்களைப் படர வேண்டும்?

என்னை நம்புங்கள். அந்தக் கட்டுரைக்கும் எனக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை. தங்களுடன் எனக்குள்ள அளவு நட்பு, அதை எழுதிய நபரோடு எனக்கு இல்லை.

# நெஞ்சம் மறப்பதில்லை !

ஒரே ஒரு நாள் வெளியூருக்குச் செல்வதானாலும் பயணத்தை முன்கூட்டியே திட்டமிடுகிறோம். செயல்படுத்துகிறோம். ஆனால் நம்மில் எத்தனைபேர் வாழ்க்கைப் பயணத்தைத் திட்டமிட்டு நடத்துகிறோம்? அப்படி செயல் படுத்துபவர்கள் அனைவருமே முத்திரை மனிதர்கள். அவர்கள் சாதனையை நெஞ்சம் மறப்பதில்லை.

சித்திரைத் திருவிழா
ஸ்ரீராம் சிட்ஸ்
மார்ச் 14 - ஏப்ரல் 14

எளிய முறையில் சீட்டுத் திட்டங்களில் சேமித்து, உயர்ந்த வருமானமும் வளமான எதிர்காலமும் பெற்று வாழ்க்கையில் உயர்ந்தவர்கள் பல இலட்சம் பேர்.

அதற்கு அவர்கள் தேர்ந்தெடுத்த வழி ஆண்டு வர்த்தகம் ரூ.1,300 கோடி, 300 கிளைகள், 4,000 ஊழியர்கள், 25,000 முகவர்கள் என்று பரந்து வளர்ந்துள்ள ஸ்ரீராம் சிட்ஸ்.



திருமணம், வீடு கட்டுதல், கல்வி, மருத்துவச் செலவு என தேவைகள் தோன்றிய போதெல்லாம் ஏற்கெனவே சேமித்த தொகையைப் பயன்படுத்தி வெற்றி கண்டவர்கள் இவர்கள்.

இந்த சாதனை மனிதர்களின் உண்மைச் சம்பவங்களை தொகுத்து புத்தக வடிவில் ஸ்ரீராம் சிட்ஸ் உங்களுக்காக இலவசமாக வழங்குகிறது.

இப்புத்தகத்தில் காணப்படும் சம்பவங்கள் உங்கள் வாழ்வில் அரிய மாற்றத்தை உண்டாக்கும் பெரிய உந்து சக்தியாக விளங்கும். உங்களுக்கு மட்டுமல்ல, உங்கள் குழந்தைகளுக்கும் உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் ஊக்கம் தரும் அற்புத சக்திமானாக அவை அமையக்கூடும்.




**ஸ்ரீராம் சிட்ஸ்**

ஸ்ரீராம் சிட்ஸ் தமிழ்நாடு லிமிடெட்,
சுப்ரமணியன் பில்டிங், 1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.
போன் : 8520700, 8520797, 8522651 Visit us at : www.shriram.com

இக்கூப்பனை ஸ்ரீராம் சிட்ஸ் கிளையில் கொடுத்து இலவசப் புத்தகங்களைப் பெற்றிடுங்கள்.

WORDCRAFTS/SCI/MU/1

கல்கி/1



"நீங்க கதாநாயகியா நடிச்ச படம் நாலுநாள்கூட ஓடலையே!"

"அதுக்காக உங்க டி.வி. சீரியலில் பாட்டி வேடத்தில் நடிக்கக் கூப்பிட்டுடறதா?!"



**"என்னங்க இது, 'நல்ல காலம் பொறக்குது. விட்டுக்கார ஐயாவுக்கு சாகித்ய அகாதமி பரிசு வருது'னு குடு குடுப்பைக்காரன் சொல்லிட்டா, அதுக்காக உங்களுக்கு இருக்கிற ஒரே ஒரு நல்ல வேஷ்டி சட்டையையும் அவனுக்குத் தானம் செய்துடணுமா?"**

**– உ. ராஜாஜி**



"இதப்பாருங்கம்மா... எக்கச்சக்கமா வரதட்சணை கேட்கறீங்க. செய்யறோம்... அதுக்கும்மேலே பொண்ணு உங்க கூட சண்டை போட்டு, அவ தோத்துப் போனாத்தான் இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதிப்பேன்னு நீங்க சொல்றது கொஞ்சம் கூட நல்லாயில்லே...!"

– ஸ்ரீதர்

இதை நம்ப வேண்டும்.

அந்த நபர் எனக்கு வெறும் பரிச்சய மானவர் மட்டுமே. நான் பி.எஸ்ஸி பாஸான உடனே அடுத்துள்ள ஒரு பள்ளியில் கொஞ்ச காலம் வேலை செய்தேன். அந்த மனிதர் அந்தப் பள்ளியல் ஓர் ஆசிரியராய் இருந்தவர். அவ்வளவுதான்.

அந்தக் கட்டுரையில் உள்ள சில கருத்துக்களோடு எனக்கு இசைவு இருப்பினும் அதனோடும் அந்தக் கட்டுரையோடும் எனக்கு எந்தத் தொடர்பும் இல்லை.

முற்போக்கு இலக்கியவாதிகளுடைய கருத்துக்களோடு இசைந்து போவது எனக்கு சாத்தியமில்லை. வாழ்க்கையின் வெறுக்கத் தக்க அரங்கங்களை மட்டுமே அவர்கள் காண்கிறார்கள். அழுகிய நாறிய அம்சங் களை எதற்குச் சித்திரிக்க வேண்டும்?

இலக்கியத்தின் லட்சியம் மனிதனை நல்வழி ஞானமுள்ளவன் ஆக்கித் தீர்ப்பதே என்று நான் நம்புகிறேன்."

தொடர்ந்து, சரஸ்வதி தேவிக்கு இருபத் திரண்டரை வயது என்றும், துக்கமயமான பல அனுபவங்கள் உண்டு என்றும், அது போல எல்லோருக்கும் உண்டாகி இருக்கும் என்றும் இலக்கியத்தில் அதையெல்லாம் பிரதிபலிப்பது சரியல்ல என்றும் இலக்கியம் மனசிற்கு உல்லாசம் கொடுக்க வேண்டும் என்றும்... இப்படி மற்றும் மற்றும்...

பிறகு விமர்சனங்கள். "கடிதத்தை வாசித்துவிட்டுத் திருப்பிக் கொடுத்து அனுப்பவும்." இறுதியாக இப்படி முடித் திருந்தாள்.

"எனக்குத் தங்களைப் பிடிக்கிறது. நாம் ஒருவரை ஒருவர் இனி பார்க்க இயலாது போகலாம். தாங்கள் கடிதத்தைப் படித்து விட்டு என்னோடு தர்க்கிக்க வந்து விடாதீர் கள். என்னுடைய அப்பா என்னைக் கொன்றே விடுவார். பிரியமான நண்பரே, என்னை மன்னியுங்கள். என்னைத் தவறாகப் புரிந்து கொள்ளாதீர்கள். தங்களை ஈசுவரன் காப்பாற்றட்டும்.

நல்லன்புடன்
சரஸ்வதி தேவி

சரஸ்வதி தேவியின் முதல் கடிதம். தொடர்ந்து நிகழ்ந்த சம்பவங்கள். அதற்கான முன்னுரைதான் இதுவரை சொன்னது.

(தொடரும்)

# வட்டமேஜை:

## மீள்வது கடினம்!

✉ வட்ட மேஜையை, வழக்கமான மேஜையாக இல்லாமல் வித்தியாசப்படுத்தி வியக்க வைத்து விட்டீர்கள்.

பொன்மலை, ஆர். பிரகாஷ்.

✉ கடனிலேயே மூழ்கிக் கொண்டிருக்கும் இந்தியப் பொருளாதாரத்திற்கு எந்த நிதி அமைச்சரும் மாயாஜால பட்ஜெட் போட்டு மீள்வது கடினம்தான். இருந்தாலும், பற்றாக்குறை அளவைக் குறைத்துக்காட்ட சிறுசேமிப்பு (கடன்) தொகையைக் கணக்கில் காட்டாமல் விடுவது 'பம்மாத்து வேலை'தான் என்பதைத் தெரிய வைத்ததற்கு நன்றி.

விசித்திரராஜபுரம், ஆடுதுறை கோ. ராமதாஸன்.

✉ வட்டமேஜைப் பிரிவில் வாசகர் கடிதங்களை, வழக்கம் போல் பிரசுரிக்காமல், சேர்ந்தாற்போல் பிரசுரித்திருந்ததால், வாசகர்கள் பெயரையும் சரியாகத் தெரிந்து கொள்ள முடியவில்லை. அவர்கள் என்ன எழுதி இருக்கிறார்கள் என்பதையும் இலகுவாக உணர முடியவில்லை. இப் புதுப் பழக்கம் வேண்டாமே இனி?

விழுப்புரம், வை. வெங்கடேசன்.

✉ மாணவர்களுக்கான தேர்வுக் குறிப்புகள் கண்டேன். ஒரு திருத்தத்தைத் தங்கள் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். '8 வினாக்களில் 5 வினாக்கட்கு விடையளிக்கவும்' என்றால், மாணவர் 5 வினாக்களுக்கு மட்டுமே விடையளிக்க வேண்டும். மிகையான விடைகள் அடிக்கப்படும். முன்னர், விடைகளில் மிகச் சிறந்தவை (The best five) என்றிருந்தமுறை 'முதல் 5 (The first five) என்று மாற்றப்பட்டு பல ஆண்டுகளாகி விட்டன. திருத்துபவரது கருணைக்கே இடமில்லை!

சென்னை-93, டாக்டர் எஸ்.எஸ். இராஜகோபாலன்

✉ 'கார்த்திகை தீபம்' கண்டேன். வந்த குருமகா சந்நிதானம், தருமபுரம் மூப்பனார், எம்.எஸ். உதயமூர்த்தி, சா. கந்தசாமி – இவர்களோடு எங்களையும் கல்கி அவர்கள் அவதரித்த புத்தமங்கலத்திற்கு அழைத்துச் சென்று உபசரித்த திருப்தி கிடைத்தது! நன்றி.

உடுமலை, எஸ். பொன்னுசாமி.

✉ அமரர் கல்கிக்கு அஞ்சல் துறையின் அஞ்சலி படித்தேன். பத்மவாசன் கை வண்ணத்தில் டிசைன் சூப்பர்!

சித்தேரி, ஞா. வானதி.

★ தேர்வு நேரத்தில் ஜி.எஸ்.எஸ் வழங்கிய 'மாணவர்களுக்கான யோசனைகள் என்னைப் போன்ற மாணவர்களுக்குப் பெருதவியாக இருந்தது.

பூனாம்பாளையம், ஆர்.பி. ஜெயச்சந்திரன்.

✉ பா. ராகவனின் 'பொத்தி வைத்த பூந்தோட்டம்' ஓர் அருமையான உளவியல் வார்ப்பு. கு. அழகிரிசாமியின் மரபை வளர்க்கும் எழுத்து இது! பாராட்டத்தானே வேண்டும்?

நெல்லை-6, தி.க. சிவசங்கரன்.

✉ ஆறு இல்லாத இடத்தில் அணை கட்டுவதுபோல ஆள் இல்லாத இடத்தில் நீதிமன்றம் அமைப்பது எப்படிச் சரியாகும்? உதகை நீதிமன்றம் காகா தோப்புக்கு இடம் மாறுவது அது போன்றதுதான்!

திருவாரூர், ஆரூர் அரக.

✉ தன்னம்பிக்கை என்பது தலைக்கனமல்ல. தன்மான உணர்வு என்பது அடங்காமை அல்ல. தொழில் பற்று என்பது கொண்ட கொள்கையில் சமரசம் செய்து கொண்டு முன்னேறுவதல்ல என்பதை என் போன்ற இன்றைய இளைஞர்களுக்கு சசிரேகாவின் ஜெயித்த கதை உணர்த்தியது.

திருவண்ணாமலை, இ.க. பாலசுப்பிரமணியன்.

# அருவி

மலையெனும் மாது
மலர்க்குழல் கோதி
தலையினில் எடுத்த
தண்ணீர் வகிடு!

குன்றெனும் கோதை
கூந்தலில் சூடி
கண்படத் தாவி
கால்தொடும் பூச்சரம்!

கிரியெனும் ஆதி
கிழவனின் மார்பில்
தரைதொட ஆடி
தவழ்ந்திடும் தாடி!

கோடெனக் கூறும்
குவலயப் பாரி
தேடருந் தோளில்
திகழ்ந்திடும் துண்டு!

மேரெனும் ஆலின்
மீதினில் இருந்து
வேரென இறங்கும்
விரிநீர் விழுது!

பாறைக்கு நடக்கும்
பாலபி ஷேகம்!
கோரிக்கை இல்லா
குடமுழுக் காட்டு!

பர்வதம் என்னும்
பானையில் பொங்கி
வருணனின் கொடையாய்
வழிகிற பொங்கல்!

— தளவை இளங்குமரன்

# பெயர்களை சொல்லுங்கள்
# பரிசுகளை வெல்லுங்கள் !

எந்த மாளிகையும் ஒரே நாளில் எழுந்து விடுவதில்லை. ஒவ்வொரு செங்கல்லாக அடுக்கப்பட்டு உருவானவை தான் அனைத்தும். சாதனைகளும் அதுபோல்தான். அயராது உழைத்த பின்னரே எவரும் வெற்றிக்கனியை சுவைக்க முடியும்.

சித்திரைத் திருவிழா

ஸ்ரீராம் சிட்ஸ்

மார்ச் 14 - ஏப்ரல் 14

நீங்களும் ஓர் சாதனையாளர்தான். ஆச்சரியமாக இருக்கிறதா? ஆனால், அதுதான் உண்மை. தேவைகள், எதிர்பாரா செலவினங்கள், பணநெருக்கடிகள் இவற்றை இன்முகத்துடன் எதிர் கொண்டு வெற்றி கண்ட சாதனை உங்களுடையது. அதற்கு நீங்கள் தேர்ந்தெடுத்த சாதனம் ஸ்ரீராம் சிட்ஸ்.



இந்த சித்திரை சீட்டுத் திருவிழா உங்களை போன்ற சாதனையாளர்களை கௌரவிக்கும் விழா. எதையும் தாங்கும் இதயங்களை போற்றிப் புகழும் நல்விழா.

நமது சாதனைகளை நினைவு கூர்ந்து மகிழும் இந்த இனிய நேரம் தான், சாதனையாளர்களை நினைத்துப் பார்க்கவும் புதிய எதிர் காலத்திற்கு திட்டமிடவும் வேண்டிய நல்ல தருணம்.

கீழே உள்ள கூப்பனுடன் அருகில் உள்ள ஸ்ரீராம் சிட்ஸின் கிளைகளுக்கு வாருங்கள். சாதனையாளர்களை அடையாளம் காணும் "பெயர்களை சொல்லுங்கள் பரிசுகளை வெல்லுங்கள்" போட்டிக்கான படிவத்தைப் பெறுங்கள். சரியான பதில்களைக் கண்டு பிடியுங்கள். ஒவ்வொரு கிளைக்கும் பட்டுப் புடவை முதல் ஸ்ரீபெட் ஜார் வரை கண்கவர் பரிசுகள்!

வானமே எல்லை

ஸ்ரீராம் சிட்ஸ்

ஸ்ரீராம் சிட்ஸ் தமிழ்நாடு லிமிடெட்,

சுப்ரமணியன் பில்டிங், 1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.

போன் : 8520700, 8520797, 8522651 Visit us at : www.shriram.com

இக்கூப்பனை ஸ்ரீராம் சிட்ஸ் கிளையில் கொடுத்து போட்டிக்கான படிவத்தைப் பெறுங்கள்.

WORDCRAFTS/SCI/MO/1

● சுமாலி, மேலப்பாலையூர்.

*? கிரிமினல்களுடன் கைகோப்பவர்களுக்கு எங்கள் கட்சியில் இடமில்லை என்று சோனியா கூறியுள்ளாரே?*

! நாமா கிரிமினல்களுடன் கைகோத்துக் கொண்டிருக்கிறோம்? கிரிமினல்கள்தானே நம்முடன் கைகோத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று அவருடைய கட்சிக்காரர்கள் பலர் எண்ணி சமாதானமடைவார்கள்.

● கே. ஆர். வெங்கடேஷ், சீர்காழி.

*? ராணுவப் பணியில் உயிர்நீத்த இரு வீரர்களின் மனைவிகள் கிதாஞ்சலி சௌத்ரி, கிதாஞ்சலி கொப்ராலா ஆகியோர் ராணுவத்தில் அதிகாரிகளாகப் பயிற்சி பெற்று பொறுப்பேற்க இருப்பது பெருமைக்குரிய விஷயம்தானே?*

! கணவனைப் போரில் பலிகொடுத்த தமிழச்சி, மறுபடியும் மகனைத்தான் அனுப்பி வைத்தாள். ஆனால் இன்றைக்குக் கணவருக்குப் பதில் தாங்களே போர்க்களத்துக்கு வருகிறோம் என்று சொல்லும் பெண்களைப் பற்றி என்ன சொல்வது. அவர்கள் வீரத்துக்கு நமது வணக்கங்கள்.

● பெ. பொன்ராஜபாண்டி.

*? அத்வானி தீவிரவாதிகளுக்குத் துணைபோகிறார் என்று ஜெயலலிதா குற்றம்சாட்டுகிறாரே...?*

! உண்மை. ஜெயலலிதாவே அவரது தோழமைக் கட்சித் தலைவியல்லவா!

● ஓரம்பூர் ராமையா, பாண்டிச்சேரி.

*? டி.கே. பட்டம்மாள் அவர்களின் 'எப்படிப் பாடினரோ' பாட்டைக் கேட்டு அப்படியே உருகிப் போயிருக்கிறீர்களா...?*

! அந்தப் பாட்டு மட்டுமல்ல; அவர் பாடிய எத்தனையோ பாடல்களைக் கேட்டு உருகியிருக்கிறேன்... நான் உருகியது கிடக்கட்டும். நீங்கள் உருகிய உருகலில் தராசை 'அரசு' ஆக்கி விட்டீரே!

● டி.ஏ.சி. பிரகாஷ், திருச்செங்கோடு.

*? ஆசிய டெஸ்ட் சாம்பியன்ஷிப் போட்டியில் பாகிஸ்தான் இலங்கைக்குச் சாதகமாகப் பந்து வீசி விட்டுக் கொடுத்தது சரிதானா...?*

! இந்தியா இறுதிப் போட்டிக்குள் நுழையாதிருக்க ஸ்ரீலங்கா தன் பாயின்டுகளை அதிகரித்துக் கொள்ள பாகிஸ்தான் உதவியது என்பது எல்லோருக்கும் புரிகிறது. ஆனால் நிரூபிப்பது எப்படி...? எனவே இந்த பாயின்ட் முறையில் அடிப்படைக் கோளாறு உள்ளது. அதைச் செப்பனிட வேண்டும்.

● மரங்கள் நேசன், மதுரை.

*? சமீபத்திய அதிர்ச்சி...?*

! தோட்டத்தில் நடந்தது!

● கே. சுதர்ஷன், தூத்துக்குடி.

*? வெள்ளிக் கிழமை காலையில் ஒலிபரப்பாகும் 'சாந்தி அஞ்சலி' என்ற நிகழ்ச்சிக்கும் விளம்பரதாரர் தேடியிருக்கும் அகில இந்திய வானொலி நிலையம் பற்றி...?*

! வசதியுள்ள யாருமே பெருமையுடன் ஸ்பான்ஸர் செய்ய வேண்டிய நிகழ்ச்சியல்லவா!

● கே. வி. ராமன், சென்னை – 73.

*? சமீபத்தில் காலமான யெஹூதி மெனுஹினின் வயலின் இசையைக் கேட்ட ஐன்ஸ்டீன் 'இறைவனின் இருப்பிடத்தை உணர்ந்தேன்' என்று சொன்னாராம். நீங்கள் யெஹூதி மெனுஹினின் இசையைக் கேட்டிருந்தால் உங்கள் அனுபவத்தை எப்படி விவரிப்பீர்கள்?*

! அதைக் கேட்கும் பாக்கியம் எனக்கு இல்லை. அப்படியே ஏற்பட்டாலும் ஐன்ஸ்டீன் சொன்னதற்கு மேலாக என்ன சொல்லிவிட முடியும்!

## அதிக சுதந்தரம்

● ஏ. சுகுமார், காட்டுக்கானூர்.

*? அதிக சுதந்தரத்துடன் இயங்கும் மத்திய அமைச்சர் யார்?*

! ஜெயலலிதா, மம்தா பானர்ஜி(!)



• தூய்மைப் பணி!



• ஆசையிருக்கு...!



• உண்மை உணர்ச்சி!



• தோழமையுடன்...



• துணை போகிறார்!

# உள்ள மத்திய அமைச்சர்?

● ஏ. ஜஸ்பர் காதர், விளாத்திகுளம்.

? 'அறியாத பெண் போட்ட கோலம்' என்று மத்திய பட்ஜெட்டை ப. சிதம்பரம் விமர்சித்திருப்பது குறித்து...?

! தவறு! அது ஒரு மாடர்ன் ஓவியம்! ஏதோ இருக்கிறது என்பது போல் பாவ்லா காட்டி, சின்னப் பிக்கர் செய்துவிட்டு ஒன்றுமில்லை என்பதை உணர வைப்பது.

● நி.சு. பாலசுப்ரமணியன், கீழ்நத்தம்.

? அணு ஆயுத பலத்தைக் கொண்டு பாரதம் (அண்டைநாடுகளிடம்) சட்டாம்பிள்ளை போல் செயல்படாது என பிரதமர் கூறியிருக்கிறாரே?

! அது மட்டுமல்ல... அணு ஆயுதங்கள் இருப்பதால் எந்த இரு நாடுகளுமே போர் தொடங்க பயப்படும். எனவே அணு ஆயுதங்களே போர்த் தடை சாதனங்கள் என்கிறார். இதைப் போன்ற தலைகீழ் அணுகுமுறை ரொம்ப அபாயமானது.



• ஜன்ஸனின் அறிவிப்பு!

● க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.

? சேதுசமுத்திரத் திட்டம் நிறைவேற்றப்படும் போது மதிமுக ஆட்சியில் இருக்கும் என்று வைகோ பேசியிருப்பது...?

! அப்படியானால் திட்டம் நிறைவேறப் போவதேயில்லையா...?

● சி. மரகதம், மதுரை - 16.

? பீஹாரில் மீண்டும் ராப்ரி தேவி ஆட்சிக்கு வந்திருப்பதால் உண்மையான ஜனநாயகம் மலர வாய்ப்புள்ளதா?

! ஜனநாயகத்துக்கும் வாய்ப்பில்லை; உண்மைக்கும் வாய்ப்பில்லை!

● சாத்தூர் சபாபதி, திருச்சி - 18.

? தம் கட்சி செயற்குழுவிலேயே மிகுந்த உணர்ச்சிவசப்படும் மூப்பனாரால் தமிழகத்தின் தலைமைப் பொறுப்பை செவ்வனே ஏற்று நடத்த முடியுமா?

! நேர்மை எப்போதும் காப்பாற்றப்பட வேண்டும் என்றுதானே உணர்ச்சிவசப்பட்டார்! நல்ல தலைவர் நேர்மையானவராகவும் திறமையாளர்களைத் தேடிப் பிடித்துப் பயன்படுத்திக் கொள்ளும் ஆற்றல் மிக்கவராகவும் விளங்கினால் சிறந்த ஆட்சியைத் தரலாம்.

● அஜார், சென்னை - 18.

? மாட்டின் இரத்தம்தானே பாலாக வருகிறது. அப்படியானால் பால் சைவமா? அசைவமா?

! விலங்குகளிடமிருந்து பெறப்படுவதால் பால், பால் பொருட்கள் உண்ணாதவர்கள் உண்டு. 'வேகன்' (Vegan) என்று இவர்களைக் குறிப்பிடுவார்கள்.

● ராஜி, கமுதி.

? பெண்கள் மேம்பாட்டுக்காக அதிமுக பாடுபட்டு வருவதாக ஜெயலலிதா சொல்கிறார். இது உண்மையா...?

! உண்மைதான். இரு பெண்களின் மேம்பாட்டுக்காக.

● மு. அப்துலஜீஸ், வாணூர்.

? 'ஹலோ' கட்டண உயர்வு பற்றி...?

! இப்போதைக்கு நிறுத்தி வைத்தாலும் பிறகு ஏறத்தான் செய்யும். இதற்கு ஒரே வழி டெலிபோனில் வெட்டி அரட்டை அடிக்காமல் இருப்பதுதான். இதைச் செய்தாலே பாதிக் கட்டணம் குறையும்.

● மகேஸ்வரமணி, சோழபுரம்.

? 'பணம், பதவி ஆசைக்குப் பணிய மாட்டேன். இது ஜெயலலிதாவுக்கும் தெரியும்' என்று தனி நீதிமன்ற நீதிபதி சம்பந்தம் பேசியிருக்கிறாரே?

! அர்த்தமுள்ள வாக்கியம். அவரைப் பேச வைத்த நிகழ்ச்சி என்னவாயிருக்கக்கூடும் என்று யோசித்தால் கவலையும் பயமும் ஒருங்கே ஏற்படுகின்றன.

❒ ரூ. 50 பரிசு பெறுபவர் :
சாத்தூர் சபாபதி.
C-69 பத்தாவது கிராஸ்,
தில்லை நகர், திருச்சி - 18.

"என் கிளாஸ்ல ராஜுவை எல்லாரும் கேலி பண்றாங்க...''

"ஏன்?"

''அவன் மட்டும் பெரிய ஷூஸ் போட்டுக்கிட்டு கோணலா நடக்கறான்...''

''பிரேயர் முடிஞ்சு' கிளாஸுக்கு வர்றப்போ எப்பவுமே அவன்தான் கடைசியா வருவான். அதனால எல்லாரும் அவனைக் கிண்டல் பண்ணுவாங்க...''

''அப்படிக் கிண்டல் பண்றது தப்பில்லையா?''

''ஆமாம். ஆனாக்கூட பண்ணுவாங்க. நான் பண்ணமாட்டேன். பாவம் ராஜு...''

''ஆமாம்! அவன் ரொம்பப் பாவம்...'' என்று சொல்லத் தோன்றினாலும் – கட்டுப் படுத்திக் கொள்ளுங்கள்.

ராஜுவுக்கோ வேறு வகையில் ஊனம்/குறைபாடு உள்ளவர்களுக்கோ, தேவை அனுதாபம் அல்ல; அங்கீகாரமும் கொஞ்சம் வேறுபட்ட உதவியும்தான், இதைப் புரிந்து கொள்ளும் பெற்றோர்தான் தங்கள் குழந்தைகளுக்கு விளக்கி உதவ முடியும்.

உடல், மன குறைபாடுகளுடன் கூடியவர்களை ஏற்பதற்குக் குழந்தைகளைப் பக்குவமாகத் தயார் செய்ய வேண்டியிருக்கிறது.

'சிலருக்கு மட்டும் ஏன் இந்தக் குறைபாடுகள் ஏற்படுகின்றன?' என்ற கேள்விக்குப் பதில் சொல்வது சவால்.

'இயற்கை அல்லது இறைவன் செயல்' என்று சொன்னால், எந்த அடிப்படையில் இயற்கை செயல்படுகிறது என்ற கேள்வியை குழந்தை நிச்சயமாக கேட்கும். உரையாடல் இப்படியும் அமையக்கூடும்:

''ஏன்மா ராஜுவுக்கு மட்டும் கால் அப்படியிருக்கு?''

''கடவுள் அப்படிக் கொடுத்துட்டார்... என்ன

# வேதனையான



செய்ய!''

''ஏன் கடவுள் ராஜுவுக்கு மட்டும் அப்படிக் கொடுத்தார்?''

– இது போன்ற பதில் சொல்ல முடியாத கேள்விகளுக்கு இடம் தராமல் உரையாடலை வழிபடுத்தலாம்.

''எல்லாருமே ஒரே மாதிரி இருக்கோமா? அண்ணாவுக்குக் கிளாஸ்ல பிளாக் போர்டை சரியா படிக்க கண்ணாடி போட்டுக்க வேண்டியிருக்கு. நீ பல்லுக்கு கிளிப்

போட்டுக்க வேண்டியிருக்கு... அந்த மாதிரி ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொரு விதமா உதவி தேவைப்படுது. சில பேருக்குக் கூடுதலா உதவி தேவைப்படுது. ராஜுவுக்கு சின்ன வயசுல போலியோன்னு ஒரு கடுமையான ஜுரம் வந்ததனாலே கால் அப்படி ஆயிடுத்து. பெரிய ஷூ போட்டுக்கிட்டா நடக்க கொஞ்சம் சௌகரியமாயிருக்கும்னு டாக்டர் தயார் பண்ணிக் கொடுத்திருக்காங்க.''

- சிறிதும் பெரிதுமான குறைபாடுகள் உடையவர்கள் நம்மிடையே உள்ளனர். அவர்களுடைய குறைகளைப் பாராட்டாமல், சுட்டிக் காட்டி அனுதாபப்படாமல், இயல்பாக அவர்களை ஏற்றுக் கொள்வதன் மூலம் நாமே குழந்தைகளுக்கு வழிகாட்ட முடியும்.

'உனக்கென்ன காது செவிடா?'; 'கண் தெரியுதாப் பாரு!'; 'ஊமைக் கோட்டான் போல இருக்கியே..' போன்ற வசவு வசனங்கள் மிக ஆபத்தானவை. உடல் ரீதியான குறைபாடுகளைக் குற்றமாகவே ஆக்கிக் காட்டுபவை. தினசரி உரையாடலில் இத்தகைய சொற்பிரயோகங்கள் தவிர்க்கப்பட வேண்டும்.

# உண்மைகள்!

விஜி

உடலில் ஏதேனும் குறையுடையவராயிருப்பினும் அந்த நபரிடம் வேறு பல பலங்கள் உண்டு என்பதை உணர்த்தலாம்.

"ராஜுவால வேகமா நடக்க முடியலைன்னாலும் எவ்வளவு வேகமா கணக்கு போடறான்! எப்பவும் கணக்குல அவன் நூத்துக்கு நூறு வாங்கறான் இல்லையா..." என்று நினைவூட்டலாம்.

வேறு விதமான குறைபாடுகள் உடையவர்கள் அவற்றையும் மீறி ஜெயித்த கதைகளை எடுத்துச் சொல்லலாம்.

ஊரறிய ஜெயித்தவர்கள் மட்டுமின்றி குடும்பத்திலும் நண்பர் வட்டாரத்திலும் உள்ள இத்தகைய நபர்களின் உண்மைக் கதைகளைச் சொல்லும்போது, ஊனமுற்றோர் மீது அனுதாபம் மறைந்து மரியாதை பிறக்கும். அவர்களைச் சுலபத்தில் அங்கீகரித்துத் தங்களுள் ஒருவராக ஏற்றுக் கொள்வார்கள் குழந்தைகள்.

அசாதியான குறைபாடுடையவர்களை முதன் முறையாகச் சந்திக்கும் சந்தர்ப்பம் வருமாயின், முன்கூட்டியே குழந்தைகளுக்கு விளக்கி, தயார் செய்து வைக்கலாம்.

''இன்னிக்கு அப்பாவோட நண்பர் வீட்டுக்குப் போறோம். அங்கே தீபக்னு ஒரு அண்ணா இருக்கான். அவன் ரொம்ப வித்தியாசமா நடந்துக்குவான்...''

"ஏன்? என்ன பண்ணுவான்...?"

"பார்க்க பெரிய பையனா இருந்தாலும் சின்ன குழந்தை மாதிரி பேசுவான் நடந்துக்குவான்."

"ஏன்?"

"அவனுக்கு மனவளர்ச்சி சரியான வேகத்துல அமையலை. அதனால் அப்படியிருக்கான்.. அவனைப் பார்த்தா உனக்கே புரியும்..."

"எங்கூட விளையாடுவானா?"

''மெதுவா கேட்டுப் பார்க்கலாம். விளையாடுவானா? பிடிக்குமா? எந்த விளையாட்டு தெரியும்? எல்லாம் கேட்கலாம்.''

இவ்வளவு தூரம் தயார்படுத்திய பிறகும் வித்தியாசமான நபர்களை முதன் முதலில் சந்திக்கும் குழந்தைகள் விழி விரித்து அதிர்ச்சியுடனோ ஆர்வத்துடனோ பார்ப்பதைத் தவிர்க்க முடியாது. குறையுள்ள நபரைப் பற்றி அவரெதிரிலேயே கேள்வி கேட்பதும் விமர்சிப்பதும் மட்டும் கூடாது என்று கட்டுப்பாடு விதிக்கலாம்.

"ஏதேனும் கேட்கணும்னு தோணினா வீட்டுக்குத் திரும்பிவந்தப்புறம் எங்கிட்டே தான் கேட்கணும்...'' என்று கண்டிப்புக் காட்டலாம்.

வீடு வந்து சேர்ந்ததும் மடை திறந்தது போல் கேள்விகள் வரும்!

மனம் கனத்துப் போனாலும், 'ஊனமும் குறைபாடுகளும் வேதனையான உண்மைகள்' என்பதைக் காட்டிலும் 'வெல்லக் கூடிய முட்டுக்கட்டைகள்' என்ற அணுகுமுறையை மேற்கொண்டே பதில் சொல்லுங்கள். ●

(அடுத்த வாரம் வரை....)

## சமீபத்தில் காலமான பிரபல வயலின் மேதை யெஹூதிமெனுஹின் பற்றி நினைவு கூர்கிறார் லால்குடி ஜெயராமன்:

எடின்பரோ இசை விழாவில் பங்கேற்க லண்டன் சென்றிருந்தேன். அப்போது தான் முதன் முறையாக அகில உலக வயலின் மேதை யெஹூதிமெனுஹின் அவர்களைச் சந்தித்தேன்.

என்னுடைய நிகழ்ச்சியின்போது, "நமக்குப் பரிச்சயமான இசைக் கருவியில் நமக்குப் பரிச்சயமில்லாத இசையை என் இந்தியக் கலை நண்பர் லால்குடி ஜெயராமன் வழங்குவார்'' என்று அவர் மேடையில் அறிவிப்புச் செய்தார். வயலினில் கர்நாடக இசை என்பது அப்போது அவர்களுக்குப் புதிது!

அவருடைய அழைப்பின் பேரில் லண்டனிலுள்ள அவருடைய வீட்டிற்குச் சென்றேன். அவருடைய இசை அறையில் என்னை அமர வைத்துத் தம் வயலினை என்னிடம் கொடுத்து வாசிக்கச் சொன்னார். சோபாவில் அமர்ந்தபடி நான் வாசிக்க, தரையில் அமர்ந்தபடி அவர் கேட்டு ரசித்தார். பிறகு என்னிடம் கர்நாடக இசை தொடர்பான பல விளக்கங்கள் கேட்டார்.

அவருடன் பேசிக் கொண்டிருக்கும் போதே, "உங்களிடம் இருப்பது போல ஒரு வயலினை எனக்கு வாங்கித் தர முடியுமா?"



• பம்பாய் சந்திப்பில் லால்குடி - மெனுஹின்

என்று கேட்டேன். உடனே அவர் அந்த அறையின் மூலையில் இருந்த டெலிபோனுக்குப் போனார். ஏதோ பேசினார், திரும்ப வந்தார்.

''உங்களுக்காகத்தான் இத் தாலிக்குத் தொலைபேசினேன். எனக்கு வயலின் செய்து தந்த கலைஞரிடம் உங்களுக்கும் ஒன்று செய்து தரச் சொன்னேன். ஒரு மாதமாகும், பரவாயில்லையா?'' என்றார் பளிச்சென்று.

அசந்து போனேன். இப்படி ஒரு அன்பா! கூடவே என் சந்தேகத்தையும் சொன் னேன். ''இந்தியாவுக்கு வயலினை இறக்குமதி செய்வதென்றால் ஏகப்பட்ட விதிமுறைகள் இருக்கின்றன.''

''அதைப் பற்றி நீங்கள் கவலைப்படாதீர் கள்'' என்றார் அவர்.

# அந்தக் கண்ணீரே பாராட்டு!

**நா**ன் சென்னைக்குத் திரும்பிய பிறகு, ஒரு மாதம் கழித்து ஏர்-இந்தியா அலுவலகத் திலிருந்து எனக்கு ஓர் அழைப்பு: ''உங்கள் பெயருக்கு ஒரு பார்சல் வந்திருக்கிறது; வந்து பெற்றுக் கொள்ளுங்கள்.''

போனால் வயலின்! மெனுஹின் அன் புடன் தம் அன்பளிப்பாக அனுப்பி வைத் திருந்தார்.

''இங்கு எப்படி எந்தப் பிரச்னையும் இல் லாமல் இந்த வயலின் அனுப்பப்படுகிறதே அதே போல் இந்தியாவிலும் எந்தப் பிரச்னை யுமில்லாமல் பெறப்பட வேண் டும்'' என்று அதிகாரிகளுக்கு அவர் குறிப்பு எழுதி வைத்திருந் தார்!

அந்த வயலினைத்தான் கடந்த முப்பத்தைந்து வருடங்களாக நான் பயன்படுத்தி வருகிறேன்!

**மெ**னுஹின் இந்தியாவுக்கு வந்தபோது பம்பாய் தாஜ் ஓட் டலில் தங்கியிருந்தார். அவரைக் காணச் சென்றபோது மறக்காமல் அவர் அன்பளிப்பாக அளித்த வயலினைக் கொண்டு போயிருந்தேன். ''அந்த வயலினா?'' என்று ஆர்வத்துடன் கேட்டார். ''வாசியுங் கள்'' என்றார்.

வாசித்தேன். கண்மூடி மெய் மறந்து கேட் டார். அவர் கண்களிலிருந்து தாரையாகப் பெருகி வழிந்த கண்ணீரே எனக்கான பாராட்டாக அமைந்தது!

பேட்டி : **பிரபுசங்கர்**



**தலைவி** : அவர் நம்ம கூட்டணி கட்சிலதானே இருக்கார்?

**தொண்டர்** : எப்படி கரெக்டா சொல்றீங்க?

**தலைவி** : அவரைப் பார்த்ததுமே அலட்சியமும் எரிச்சலும் வருதே...

— அம்பை தேவா

**''மாப்பிள்ளை என்னை உடனடி லாட்டரி மாதிரி நினைக்கிறாரு...''**

**''ஏன்? அப்படிச் சொல்றே?''**

**''சுத்தமா சுரண்டுறாரே!''**

— தஞ்சை தாமு



# இஞ்ச் இஞ்சாக உயர்ந்து...

ஜெயஸ்ரீ ராஜ்

சிரஞ்சீவிக்கு ஒரு "இஞ்ச்" உயர்ந்தது போலிருந்தது. தபாலை நீட்டிய ப்யூன் ராமலிங்கத்தை கட்டிப் பிடித்து முத்தமிட வேண்டுமென்ற உந்துதலை கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டான். சே! அந்தக் காலம் போல், கழுத்தில் நாலைந்து மாலைகளை மாட்டிக் கொண்டிருந்தாலாவது, ஒன்றை உருவி அவன் கையில் கொடுத்திருக்கலாம்!

தேசிய விருது என்றால் சும்மாவா? டில்லியில், பெரிய தலைவர் ஒருவரின் பெயரில் இயங்கும் இயக்கமொன்று, வருடா வருடம் வெவ்வேறு துறைகளிலிருக்கும் வல்லுனர்களை கௌரவித்தது. இம்முறை, 'வணிக ஏற்றுமதி'ப் பிரிவில், "சிரஞ்சீவி கார்ப்பொரேஷன்ஸ்" அதிபர், சிரஞ்சீவியை தேர்ந்தெடுத்திருந்தது. இவனது ஃபோட்டோ, இதர குறிப்புகள் முதலியவற்றைக் கேட்டிருந்தது.

"ப்ரெஸ்"ஸுக்கு இந்நிலையில் தகவல் தரவேண்டாமென்றும், இவனது ஒப்புதல் கடிதம் கண்டபின் ஏனைய விவரங்கள் தெரிவிக்கப்படுமென்றும் சிறு குறிப்பிருந்தது.

சிரஞ்சீவி பூரித்தான்! அதே தொழிற் பேட்டையில், நான்காண்டுகளாக விருதுகளை வாங்கிக் குவித்திருக்கும் ஜகதீஷுக்கு முன், "இதோ பார்... உனக்கொரு சவால்" என மார்தட்ட அயனான சந்தர்ப்பம்!

ஒவ்வொரு வருடமும் ஜகதீஷ் ஏதோ ஒரு அவார்டை வாங்க டெல்லி போய் வருவதும், பெரிய மந்திரிகளுடன் கைகுலுக்கி, பெரிய சைஸ் ஃபோட்டோ எடுத்து, அதை சுவர் அடைக்க மாட்டுவதும், தொழிற்சாலை தொடர்பான மெடீரியல் சப்ளையர்களைத் தூண்டி, செய்தித் தாள்களில் ஃபோட்டோவுடன் தினம் ஒரு வாழ்த்துச் செய்தி கொடுத்துக் கொள்வதும், நாலு பெரிய மனிதர்களை அழைத்து, தினம் ஒரு பார்ட்டி என்று கூத்தடிப்பதும், சிரஞ்சீவியால் சகிக்க முடியாத நிலையை எட்டியிருந்தன.

வீட்டில் சௌம்யா வேறு, "நீங்களும்தான் வீட்டையே மறந்துட்டு ஃபாக்டரியில் தவம் கிடக்கறீங்க. ஒரு அவார்டு உண்டா? ஜகதீஷைப் பாருங்க; அலட்டிக்காம அவார்டு வாங்கிடறாரு; நம்ம லல்லி மாமனார் கூட போன வருஷம் ஏதோ விருது வாங்கினாராம்; அவ பீத்தல் தாங்கலை..." என வாய் ஓயாமல் நொடிப்பது, மனசைக் கொதி நிலைக்குக் கொண்டு வந்திருந்தது.

இனி அப்படியில்லை! அவனும் ஹால் அடைக்க ஃபோட்டோக்கள் மாட்டலாம்; சொந்தச் செலவிலேயே வாழ்த்துக்கள் தெரிவிக்க அவனுக்கு நிறைய நண்பர்கள், உறவினர்கள் இருந்தனர்.

இனி தொழிற்சங்கக் கூட்டங்களில், ஜகதீஷை விட அதிகமாகக் கையைக் காலை ஆட்டி, மேஜையைக் குத்தி, உரத்த குரலில், ஸ்டைலிஷாகப் பேசலாம்; முக்கியமாக... சௌம்யாவின் வாயைக் கொஞ்சமாவது அடைக்கலாம்..

வீட்டுக்கு ஃபோன் பண்ணி, விஷயத்தை மசாலா கலந்து விவரித்தான். "ஹை... கங்கிராட்ஸ்..." சௌம்யா குழைந்தாள். திருமணமான புதிதில் சிரஞ்சீவி கேட்ட குரல்! "எங்கம்மா கிட்ட நான் சொல்லவா?"

"ஐயையோ... பிரஸ்ஸுக்கு தெரிவிக்க வேண்டாம்னு போட்டிருக்கே!" கிண்டலடித்தான் சிரஞ்சீவி. "எங்கண்ணாவுக்கு வேணும்னா சொல்லு." போறுமே... அசல் வாழ்ந்தா அம்பது நாள் பட்டினி கிடப்பா உங்க மன்னி..." தகராறு நீண்டதில், உறவினர்களுக்குத் தெரிவிப்பது ஒத்திவைக்கப்பட்டது.

விஷயம் அக்கம் பக்கத்து ஃபாக்டரிகளில் பரவி, தொலைபேசி, நிமிடத்துக்கொருமுறை 'கங்கிராட்ஸ்' சொன்னது; சிலர் நேரிலேயே கைகுலுக்கி, ஓசியில் காப்பி சாப்பிட்டார்கள்.



ஜகதீஷ் மட்டும் கண்டு கொள்ளவே யில்லை! "பொறாமை... பொச்சரிப்பு.." என மனசுக்குள் கறுவினான் சிரஞ்சீவி. அடுத்த சில தினங்கள் ஊணுறக்கமின்றி, பரிசுக் கனவுகளாய்க் கண்டு அவஸ்தைப் பட்டான்.

இந்நிலையில், பிரிதொரு கவர் தில்லி யிலிருந்து வந்தது. அதில் விழாத் தேதி, இடம், முதலியவற்றுடன் இவனுக்கு வாழ்த் தும் தெரிவிக்கப்பட்டிருந்தது. கூடவே, இவனைப் போன்ற தர்மவான்களை நம்பித் தான் அந்த இயக்கம் இயங்குகிறதென்றும், அதனால் 25,000க்கு ஒரு டி.டி. அனுப்பும் படியும் அன்புக் கட்டளை பிறப்பிக்கப்பட் டிருந்தது.

சிரஞ்சீவிக்குத் தலை சுற்றியது; இருபத் தைந்தாயிரமா...? கடைசியில் இதுவும் பணம் பறிக்கும் விளையாட்டுத்தானா? கோபத் துடன் டில்லி நம்பரை சுழற்றினான்.

"எதற்காகப் பதற்றப்படுகிறீர்கள்? உங் களை, 'முடிந்தால் உதவுங்கள்' என்றுதானே சொல்கிறோம்?" நிதானமாய் வந்தது பதில்.

"முடியாது என்றால் பரிசு கிடையாதா?"

"ஏன் தப்பாகப் புரிந்து கொள்கிறீர்கள்? எத்தனை பேர் டொனேஷன் கொடுத்திருக் கிறார்கள் தெரியுமா? அத்துடன் சுனில் ஹசன், ப்ரேம்தத், ரஞ்சனா தேவி, முக்தார் சிங், வாக தேவ் போன்றோருடன் ஒரே மேடையில் பரிசு வாங்குவது உங்களுக்கும் கௌரவமல்லவா?"

குறிப்பிடப்பட்டவை சினிமா, கிரிக்கெட், செஸ், சங்கீதம் என வெவ்வேறு துறைகளில் பிரபலமான பெயர்கள்.

"அவர்களும் டொனேஷன் கொடுத்திருக் கிறார்களா?"

"இல்லையில்லை; அவர்கள் பிரபலங்கள்; அவர்கள் வந்து போக, ஃபைவ் ஸ்டார்

> நம்பிக்கை வைத்தவனை ஏமாற்ற அதிக சாமர்த்தியம் வேண்டியதில்லை. தூங்குப வனைக் கொல்ல வீரம் எதற்கு?
>
> – யாரோ
>
> தகவல் : மலர்சூர்யா

ஓட்டலில் தங்க,எல்லா செலவையும் நாங்கள் தான் ஏற்க வேண்டும்; உங்களைப் போன் றோர் டொனேஷன் கொடுத்தால் இதை ஈடு செய்ய முடியும்..."

கேட்கக் கேட்க சிரஞ்சீவியின் பிளட் பிரஷர் உச்ச நிலையை எட்டியது. யார் யாருக்காகவோ இவன் தண்டமழ வேண் டுமா? "உங்களுக்குப் பரிசு கிடைத்தால், நீங்களும் பிரபலமாகலாம்;' தொழில் மந்திரி யிடமிருந்து பரிசு பெறுவது போல் மூன்று ஃபோட்டோ பிரதிகள் கிடைக்கும். உங்கள் பிசினஸில் நிறைய அனுகூலங்கள் கிடைக்க லாம்..."

இது இன்னும் கொடுமை. 'உனக்கு இந்த பரிசு இன்றியமையாதது; எப்படியாவது பெற்றுவிடு' என்ற நக்கல். "சுத்த அயோக் கியத்தனமாயிருக்கிறதே..."

"நீங்கள் அனாவசியமாக கோபப்படுகிறீர் கள்; நிதானமாகச் சிந்தியுங்கள்..." ஃபோன் துண்டிக்கப்பட்டது; இவன் ஆசைக் கோட் டைகளும்தான்!

**சௌ**ம்யா முதலில் நொறுங்கித்தான் போனாள். ஆனால் சுதாரித்துக் கொண்டு, "எல்லா இடத்துலயும் இப்படித்தான் ஏதான கோல்மால் நடக்கறதாயிருக்கும். இல்லாட்டா நம்ம லல்லி மாமனார் பலிஷுக்கு, யார் நேஷனல் அவார்டு குடுக்கப்போறா?" என் றாள் சமாதானமாய். "காரை எடுங்கோ... நேரா பாங்குக்கு கிளம்புங்கோ..." அவன் தெளிவாக சிந்தித்தான். அவளுக்கு 'பரிசு'தான் மூச்சு!

ஜகதீஷுக்கும் இப்படித்தான் பரிசு கிடைக்கிறதோ? அதனால்தான் வாழ்த்துத் தெரிவிக்கவே வெட்கப்பட்டிருப்பானோ?

தவிப்புடனேயே 'மாருதி'யைக் கிளம்பி னான் சிரஞ்சீவி. திருப்பத்தில் ராஜாராமன் எதிர்பட்டார். "வழியில... கோயில்ல ட்ராப் பண்ண முடியுமா?" என்றார். நிறுத்தி ஏற்றிக் கொண்டான்.

"நம்ம வேத ராமனுக்கு இன்னிக்கு கோயில்ல பொன்னாடை போர்த்தி கௌர விக்கறா..." ராஜாராமனின் ஆரம்பமே நல்ல சகுனமாகப் பட்டது. "என்ன விஷயம்" என் றான்.

"அவர் பெருக்கேத்த வேத விற்பன்னர்; வேதம் சொல்ற அழகை நாளெல்லாம் கேட் டிண்டிருக்கலாம்; 'கேஸட்' போட நிறைய பேர் இவரை அணுகியிருக்கா. வேதமெல் லாம் குருவழியா, வாய் மொழியாத்தான் கத்துக்கணும், கேஸட், ஆல்பமெல்லாம் கூடாதுன்னுட்டார்; ஃபாரீனர்ஸ் கூட முயற்சி பண்ணியிருக்கா. அந்த 'ஆஃபரை' எல்லாம் ஏத்துண்டிருந்தா, இன்னிக்கு உக் காந்த இடத்துல, மாசம் ஐயாயிரமாவது கிடைச்சிருக்கும். தங்கை வேற கல்யாணத் துக்கு நிக்கறா; ஹூம்... கேட்டா எதது எப் படிக் குடுக்கணும், எப்படிப் பெறணும்னு இருக்கோ அப்படித்தான் நடக்கணும்; அப்பத்தான் குடுக்கறவனுக்கும் மரியாதை, வாங்கிக்கிறவனுக்கும் மதிப்புன்னு பேசுவார். பணத்தை குடுத்து மனுஷாளையே வாங் கிடற இந்தக் காலத்துல இப்படி ஒரு மனு சன்..." கோயில் வந்துவிடவே ராஜாராமன் இறங்கி விட்டார். ஆனால் சிரஞ்சீவியின் தொண்டைக்குள் ஊசியைச் செருகி விட்டாரே!

போகிற போக்கில் "ஊர் உலகம் ஒருத் தனை மதிக்கணும்னா முதல்ல அவன் தன் னைத் தானே மதிக்கக் கத்துக்கணும். அவன் செய்யிற தொழிலை மதிக்கணும்; நேர் மையா, மனசாட்சிக்கு விரோதமில்லாம நடத் துண்டா, மதிப்பும் மரியாதையும் பணமும் புகழும் தானா நம்மைத் தேடி ஓடி வரும்னு வார்... அவர் விஷயத்துல அப்பிடியே அது பலிச்சுடுத்து..." என்று ஒரு போடு போட்டு விட்டல்லவா இறங்கினார்?

டொனேஷனைக் கொடுத்து, பரிசையும் வாங்கியபின் தன் மதிப்பில் தானே உயர்ந்து நிற்க முடியுமா என்று ஒரு நிமிடம் எண்ணிப் பார்த்தான் சிரஞ்சீவி.

முதலில் சௌம்யா... அவ்வப்போது தனி மையில் குத்திக் காட்டுவாள். அப்புறம் ஜகதீஷ்... அவனைப் போலவே இவனும் நெளிந்து, குறுக வேண்டும். திறமை அடிப் படையில் யாருக்காவது பரிசு கிடைத்தால் கூட, சந்தேகக் கண்ணோடு பார்க்கத் தோன் றும்... தேவைதானா? சட்! காரைத் திருப்பி வீட்டுக்குச் சென்றான்.

கண்ணாடியில் பார்த்தபோது... அட... இரண்டு 'இஞ்ச்' உயர்ந்திருப்பது போல் தெரி கிறதே!

# GOKULAM

*The monthly magazine for children*

A SUMMER VACATION

EXAM FEVER!

FACT OR FICTION?




E
LD
AIN

THE STRAY CUB

EXPERIENCE

VIEWPOINT

PUZZLES

APRIL 1999

Rs. 6/-


47, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai -600 097

# கோமாவில் எம்.ஐ.சி!

'ப்ரெயின்டெட்' ஆன பின்னும், சில சமயம் இதயம் மட்டும் துடித்துக் கொண்டிருக்குமே... கிட்டத்தட்ட அந்த நிலையிலிருக்கிறது மும்பையின் மேயர்-இன்-கவுன்சில் சிஸ்டம்! ஓரேயடியாக 'குளோஸ்' என்றும் அறிவிக்க முடியவில்லை; உயிர்ப்பிக்கவும் வழியில்லை; இதை நிராகரித்து விட்டால், இதே எம்.ஐ.சி. முறையைக் கையாண்டு, நாக்பூரில், பி.ஜே.பி காரர்களின் அதிகாரத்தில், ஓரளவு உருப்படியாக இயங்கி வரும் நாக்பூர் கார்ப்பொரேஷனையும் கலைக்க வேண்டி வரும்; ஏற்கெனவே காஷ்மீரும் இந்தியாவும் போல இருக்கும் பி.ஜே.பி. சிவசேனை உறவை அப்புறம் 'பஸ்' என்ன, 'ரயிலே' விட்டாலும் இணைக்க முடியாமல் போய் விடலாம் என்ற பயத்தில், ராணே பல்டி அடித்து விட்டார். எம்.ஐ.சி. முறை நீட்டிக்கப்படும்: ஆனால் மேயர் நந்து சதம் நீக்கப்படுவார் என அறிவித்திருக்கிறார். தோலை வைத்துக் கொண்டு பழத்தை எறிந்த கதைதான்!

## பட்ட காலிலேயே...

இப்போதுதான் முதல்வர் பதவி பறிக்கப்பட்டு, ஜோஷி முன்னாள் முதல்வரானார்; அதற்குள் அசெம்ப்ளி சீட்டும் பறி போய்விட்டதே! எல்லாம் உறவுக்குக் கை கொடுத்ததால் வந்த வினை! மாப்பிள்ளை கிரீஷ் வியாஸ் சம்பந்தப்பட்ட நில ஊழல் வழக்கில், ஜோஷி அதிகார துஷ்பிரயோகம் செய்ததாக, மும்பை உயர்நீதி மன்றம் தீர்ப்பளித்திருக்கிறது. உடனே அதற்கு தார்மீகப் பொறுப்பேற்று தமது 'தாதர்' சீட்டை தியாகித்துவிட்டார். முன்பொருமுறை ஏப்ரல் 1994ல், தேர்தல் பிரசாரத்தின் போது மதச் சார்பான உணர்வுகளைக் கிளறிவிட்ட பாபத்திற்கு, இதே தாதர் சீட்டை ராஜினாமா செய்தார். ஆனால் அடுத்த வருடமே மார்ச் 1995ல் முதல்வராகப் பதவி ஏற்றார். இப்போதும் அப்படி ஏதாவது அற்புதங்களை எதிர்பார்க்கிறாரோ? அரசனை நம்பி புருஷனையும் கைவிட்ட கதையாக ஆகாதிருந்தால் சரி!


• ரவிஷங்கர் : சப்பென்று முடித்து விட்டார்!

## என்று தணியும்....?

மும்பை வெயிலிலிருந்து தப்பிக்க நினைத்து, ஒரிஸ்ஸாவுக்குப் போய் காளஹண்டியில் மாட்டிக் கொண்ட கதையாகிவிட்டதே +2 மாணவர்கள் நிலைமை? சம்பள உயர்வு கோரி, ஜூனியர் காலேஜ் ஆசிரியர்கள் முதலில் 'ஸ்டிரைக்' என்று இழுத்தடித்தார்கள்; தாக்கரே தலையிட்ட பின், உன்பாடு என்பாடு என்று பரீட்சைகள் ஒரு மாதிரியாகத் துவங்கின. இப்போது சம்பள உயர்வு கிடையாது என ராணே பயமுறுத்தவும், மறுபடியும் 'கோ-ஸ்லோ'வில் இறங்கினர் – நாள் ஒன்றுக்கு 20க்கு பதில் 5 பேப்பர்களையே திருத்தினர்; மார்ச் 15க்கு மேல் அதுவும்

பண்டிட் ஜஸ்ராஜ், பாரத் ரத்னா விருது பெற ரவிஷங்கர் சில எம்.பிக்களின் தயவை நாடியதாகக் குற்றம் சாட்டியிருக்கிறாரே... அந்த விஷயம்தான்! இவரைக் காட்டிலும் தகுதியானவர்கள் எவ்வளவோ பேர் இருக்கையில், இவருக்கு விருது கிடைத்ததற்குக் காரணம், சில எம்.பி.க்களின் ஆதரவு தானென்றும், பண்டிட் ஜஸ்ராஜ் சர்ச்சையைத் துவங்க, எல்லோரும் ஆசையோடு, பண்டிட் ரவிஷங்கர் ஏதாவது பதிலடி கொடுப்பார் என்று வாய்பிளந்து கிடக்க, ஹூஷும்... 'நோ கமெண்ட்ஸ்' என சப்பென்று முடித்து விட்டாரே! ஜுகல்பந்திக்குச் சென்றுவிட்டு, தனியாவர்த்தனத்தைக் கேட்ட கதையாகி விட்டது!



• ரானே : பல்டியடித்து விட்டார்

## மூச்சடைக்க வைத்த மூணு ரூபாய்

குஸ்திக்கு ஆயத்தமாகிக் கொண்டிருக்கும்போது, எதிரி பயில்வான் சரணடைந்த கதையாக... இதென்ன... கனத்த பர்ஸுடனும் சின்னப் பையுடனும் கறிகாய் மார்க்கெட்டுக்கு வழக்கம் போல் சென்றால்.. காரட் கிலோ 5 ரூபாய்; தக்காளி கிலோ 3 ரூபாய்; முட்டை கோஸ் 5 ரூபாய்க்கு மூன்று (பெரியசைஸ்); திராட்சை கிலோ பத்து ரூபாய் என... நாம் தலைசுற்றி விழப் போன சமயத்தில், காலிஃப்ளவர் கிலோ 25 ரூபாய் என நல்லவேளையாக, நமக்கு ஹார்ட் அட்டாக் வராமல் காப்பாற்றியது. இல்லாவிட்டால், தேர்தல் வந்து விட்டது என சத்தியம் செய்யப் பலர் தயாராகவே ஆகிவிட்டார்களே...

**டெவில் பீஸ்** : என்ன இந்த வார மு.ம.வில் ஒவ்வொன்றிலும் ஒரு 'கதை' இருக்கிறதே? ஓஹோ... ராம நவமி வருகிறதென்று எங்கே பார்த்தாலும் 'ஹரிகதை' விளம்பரங்களாக இருக்கிறதா? அந்த 'இன்ஃப்ளுயன்ஸ்' போலும்.

— ஜெயஸ்ரீ ராஜ்

கிடையாது என அச்சுறுத்தினர். இப்போது என்னவோ, மாணவர்கள் எதிர்காலத்தை மனத்தில் வைத்து மனமிரங்கப் போவதாகச் சொல்கிறார்கள். ஆனால் அரசு மீது இருக்கும் கோபத்தை பேப்பர் கரெக்‌ஷனில் காட்டப் போகிறார்களே என்று மாணவர்களுக்கு உள்ளூர உதறல்... சாதாரண மாணவர்களை விட்டு விடுங்கள்; ஒரு கொலைக் குற்றத்தில் ஆயுள் தண்டனை அனுபவித்துக் கொண்டே, கையில் விலங்குடன், நாலு போலீஸ் புடைசூழ, பரீட்சை எழுத வரும் ஹரீஷ் ஜகாஸியா போன்ற மாணவர்களை நினைத்துப் பாருங்கள். இந்த விஷயம் தெரிந்து, மறுபடியும் அவன் ரத்தம் சூடாகி விட்டால்?

## ஏமாற்றலாமா?

சே! இப்படி ஏமாற்றி விட்டாரே ரவிஷங்கர்? ஷண்முகானந்தாவில் நடந்த கான்சர்ட்டை எல்லாம் சொல்லவில்லை; அனுஷ்காவும் அவரும் யாரையும் அந்த விஷயத்தில் ஏமாற்றவில்லை; ஆனால்

பெரிய பஸ்-ஸ்டாண்டில் பஸ் நின்றதும் அநேகமாக எல்லோருமே இறங்கினர். சதாசிவமும் எழுந்து, சூட்கேஸை எடுத்துக் கொண்டு, "வாம்மா" என்றார், மகாலெட்சுமியைப் பார்த்து. "பஸ் டெப்போ வரை போகும்னா அங்க இறங்கிக்கலாம் மாமா. நடந்து போயிறலாம் அங்கிருந்து" என்றாள் மகா.

அந்த பஸ் நல்லவேளையாக டெப்போ வரை போகும் என்று கண்டக்டர் சொன்னார். பெரியார் டெப்போவிலிருந்து தாமரை நகர் வெகு பக்கம் தான். ஐந்திலிருந்து பத்து நிமிஷங்களில் வீட்டுக்குப் போய் விடலாம். சூட்கேஸ் இருக்கிறது. தூக்கிக் கொண்டு நடப்பது சிரமம்தான் என்றாலும், மனத்தின் பாரத்திற்கு முன் அது தூசு.

சதாசிவம் திரும்பவும் உட்கார்ந்தார். காற்று அவர் முகத்தை ஸ்பரிசித்துப் போனது. அதை உள்வாங்கிக் கொண்ட உணர்வு எதுவுமில்லை. மகாவின் முகம் வெளிறியிருந்தது. மற்ற நேரங்களில் காற்று, இது போன்ற பயணங்களில் மகாவின் ஸ்நேகிதி. காற்றோடு கைகுலுக்கி, காற்றால் முகம் துடைத்து, காற்றைப் பிரிந்து, விடை கொடுத்து- இன்று காற்று வீசும் ஸ்மரணை கூட இல்லை.

டெப்போவில் இறங்க, இவர்கள் மட்டுமே இருந்தனர். ஓட்டுனர் முகத்தில் வேலை முடிந்த திருப்தி தெரிந்தது. அவரது இன்றைய பயணம் இத்துடன் சரி. முடிந்தது. மகா பெருமூச்சு விட்டுக் கொண்டாள். அவளது பயணம் குறித்த கேள்விக்குறிகள் எஞ்சி நிற்கின்றன. இருவரும் எதுவுமே பேசாமல் நடந்தார்கள். மௌனம் ஓர் ஆயுதத்தைப் போலக் கூர்முனைகளோடு சித்திரவதை செய்தது.

"நா சாயங்காலமா கிளம்பிறணும் மகா" என்றார் சதாசிவம் சாலையைப் பார்த்தபடி.

"சரி மாமா."

"நீ தைரியமாயிருக்கணும். இங்கிருந்தா மெல்ல ஆறுதல் கிடைக்கும். அங்க ஒவ்வொரு இடமும் செல்வாவை ஞாபகப் படுத்தும் மகா. இங்க நீ இருக்கறதும் நல்லது தான்."

"...."

"எப்படி நாங்க அங்க அவனில்லாத நிஜத்தோட அவனிருந்த இடங்கள்ல இருப்போம்னு தெரியல. கடவுள் மேல் வச்ச நம்பிக்கை கூட சரிஞ்சிருமோனு பயம் வருது. ஆனாலும், அந்தக் கடவுள் உன்னைத் தேத்தணும்னு..."

மேலே பேச முடியாமல் சதாசிவம் முகத்தைத் திருப்பிக் கொண்டார். வீடு சமீபித்திருந்தது. மலைகள் பூமிக்குள் சரிந்து கிடந்தன. திருவண்ணாமலைக்கு அழகே இந்த சரியும் மலையும், கார்த்திகை தீபமும் தான். கார்த்திகை தீபம் சமயம், பத்து நாட்களுக்கு மேல் விடுமுறை கிடைக்கும். ஊரிலிருந்து சொந்தக்காரர்கள் வந்து, வீடு சத்திரம் போல நிறைந்திருக்கும். பெயர் தெரியாத அத்தைகளும் மாமாக்களும் பெரியப்பாக்களுமாய், வீட்டில் ஜோதி தெரியும். கம்மர்கட்டும், பொரிகடலை கலந்த அரிசிப் பொரியுமாய்த் தின்று தின்று வயிறு ஏந்திக் கொள்ளும். சாப்பாடே இல்லாமல் ஊர் சுற்றலாம்.

# கறுப்பு வெள்ளைக் கனவுகள் 1

இனி அப்படி முடியுமா என் கிற ஏக்கம் மெல்லிசாய் எழுந்தது. கட்டுப்பாடான, சாஸ்திர சம்பிரதாயங்களைப் பெரிதும் மதிக்கும் குடும்பம்.

செல்வா கடைசியாய் போனமுறை இங்கு வந்த போதும் கார்த்திகை



# தமயந்தி

சொன்னபோது மயிலிறகு கொண்டு காற்றை வீசிய சிலிர்ப்பு ஏற்பட்டது.

**வீ**டு வந்திருந்தது. அம்மா 'கேட்' திறக்கும் சத்தம் கேட்டு எட்டிப் பார்த்தவள், அழுதாள். மகா எதுவும் செய்ய இயலாது நின்றாள். கண்கள் கலங்கின. சிரிப்பும் மகிழ்ச்சியுமாய் அம்மா அவளை எத்தனையோ முறை வரவேற்றிருக்கிறாள். இப்படி அழுததில்லை. குணாதிசயங்களை மாற்றக் கூடிய, நிகழ்வுகளை ஸ்தம்பிக்கச் செய்கிற வாழ்க்கையின் கோர விளையாட்டுக்கு யாரெல்லாம் பலி ஆகிறார்கள்?

''வாங்க'' என்றாள் மாமாவைப் பார்த்து.

''சம்பந்திக்கு எப்படியிருக்கு?''

''இருக்கார். காய்ச்சல் ஏறும்போது ஜன்னி கண்டிருந்து. உடம்பு நோவை விட மனசு நோவு அதிகமிருக்கறச்சே, என்ன மருந்து கேக்கும்?''

எல்லோரும் அமைதியாயிருந்தார்கள். இறுக்கம் கழுவிவிட்ட திநுசில் எல்லோருக்கும் நடுவில் வழுக்கிக் கொண்டு ஓடியது. அப்பா எழுந்து வந்தது, சதாசிவம் கைகளைப் பிடித்துக் கொண்டு விம்மியழுதார். அம்மா, திரும்பவும் சத்தமில்லாது வாய்ப் பொத்தி அழுதாள்.

''என்ன செய்றது சம்பந்தி? இப்படி இவளை... கொண்டு வந்து விடுவேன்னு நினைச்சேனா?''

''காப்பி சாப்பிடுங்க, பயணமெல்லாம் சௌகரியமா இருந்துச்சா?''

பாட்டி இப்படித்தான். சூழலின் இறுக்கத்தை இளக வைக்க ஏதாவது சொல்வாள். பேச்சை மாற்றுவாள். வெறுமனே சிரிப்பாள்.

சமயம்தான். ரமணர் ஆசிரம மயிலுடன் ரொம்ப நேரம் உட்கார்ந்திருந்தான். காவாற ஊர் எல்லை தாண்டி, அவன் படித்த அரசுக் கல்லூரி தாண்டி நடந்தார்கள். அவ்வப்போது ஜட்கா வண்டிகள் மட்டும் கடந்து போயின. செல்வா அவற்றை ஆச்சர்யத்துடன் பார்த்தான்.

''என்னேப்பா உங்க ஊர். கம்ப்யூட்டர்ல ட்ரெயின் ஓடுதானு பாக்கற காலத்துல ஜட்கா வண்டி ஓடிட்டிருக்கு.''

மகாலெட்சுமி வெறுமனே சிரித்தாள். வேறு யாராவது திருவண்ணாமலையைப் பற்றி சொல்லியிருந்தால், பூகம்பமே வெடித்திருக்கும். செல்வா அவளை நோகடிக்கச் சொல்லியிருக்க மாட்டான் என்கிற நம்பிக்கையே சிரிக்க வைத்தது.

''உன் சிரிப்பு தான் ரொம்ப அழகு மகா. உங்க ஊர் ஜோதி மாதிரி!'' செல்வா

உணர்வுகளால் அடித்துச் செல்ல முடியாத அளவுக்கு, பாட்டி கல்லோ என்று கூட சமயங்களில் தோன்றியதுண்டு.

"பதினெட்டு வயசுல உன் வாழ்க்கை முடிஞ்சிட்டுதுனு கதவை சாத்திட்டாங்க. மனசும் சாத்திருச்சு மகா. இந்தியா சுதந்திரம் வாங்கின புதுசு அது. காலராவுக்கு மருந்து கிடையாது. ரெண்டே நாள்ல உன் தாத்தாவை வாரிட்டுப் போயிருச்சுடி பொண்ணே. உங்கப்பா ரெண்டு வயசுல. அப்பா அம்மாக்கப்புறம், அண்ணா வீட்ல ஒண்டிட்டேன். எனக்கேதுடி மகா வீடு? புழக்கடைதான். எங்க அண்ணிக்கு நல்ல வேலக்காரி கிடைச்சிட்டானு சந்தோஷம். நானும் உழைச்சேன். நாலு மணிக்கு எந்திரிச்சு சாணி தெளிக்கறதுல ஆரம்பிச்சு, ராத்திரி நடுசாமத்துல சமையலறை மெழுகற வரை செய்தேன். கடன் பொண்ணே அது. எங்கண்ணன் எம்பையனைப் படிக்க வச்சானே."

ராத்திரி நேரங்களில் நிலாச்சோறு என்று புளிக்காத தயிரோடு மாவடு சேர்த்து வட்டமாய் உட்கார்ந்திருக்கும் குழந்தைகள் கையில் வட்ட நிலா போல உருண்டை உருட்டிப் போட்டுச் சொல்வாள். பதினாறு பதினேழு வயதில்தான் பாட்டியின் மனசு புரிந்தது. முதல் கவிதை பத்திரிகையில் பிரசுரமானபோது, "நல்லது மகா! நிறைய எழுது. பாரதி மாதிரி வரணும்" என்று உச்சி முகர்ந்தாள். மகிழம்பூ வாசத்தை முகர்ந்து பார்த்தப்போது, மகா கேட்டாள்.

"நீ பூ வச்சிக்கறதில்லையே பாட்டி? ஏன்?"

பாட்டி ஒன்றும் சொல்லவில்லை. கன்னத்தில் தட்டி, வெறுமனே சிரித்தாள். பளிச்சென்ற வெள்ளையில், கழுத்தை ஒட்டின வட்ட வடிவ ரவிக்கையும், சுற்றின சுருக்கு வைத்துக் கட்டாத வெள்ளை நாட்டுப்புற சேலையில் பாட்டி தும்பைப் பூ மாதிரி இருப்பாள். வண்ணங்களில் மினிரக் கூடியவள் பாட்டி.

பாட்டிக்கு சூழ்நிலைகளைக் கையாளத் தெரியும். அந்த வாகவைத்தில் நிபுணி அவள். சதாசிவம் மாமாவின் கையில் தம்ளரைக் கொடுத்தாள்.

"சாப்பிடுங்க. மெட்ராஸ்ல வேலை சுலபமா முடிஞ்சுதா?"

"முடிஞ்ச மாதிரி தான். பீஸ்ைப் வந்துடும். மகா பேர்ல பேங்கில் போட்டுடலாம்."

"........."

"நான் சாயந்தரமா கிளம்புறேன். பாபநாசம் பஸ்ஸ பிடிச்சா காலைல திருநெல்வேலி போயிறலாம். அவளும் தனியாருப்பா..."

பாட்டி மகாவின் தோள்களில் கை வைத்து அழுத்தினாள். மூச்சு முட்டுகிற நேரம், காற்றின் வாசம் பட்ட உணர்வு மகாவுக்குள் ஏற்பட்டது.

மதியம் சாப்பாட்டுக்குப் பின், தெரிந்தவர்கள் துக்கம் விசாரிக்க வந்தார்கள். வந்து உட்கார்ந்ததுமே, "கேள்விப்பட்டோம். எப்படி ஆச்சு?" என்றார்கள். மகாவினுள் ஆயாசம் எழுந்தது. திருநெல்வேலியிலேயே நூறு முறைக்கு மேல் ஒப்பித்த மரண நிகழ்வு. கிட்டத்தட்ட மனனம் செய்த நிலைக்கு வந்தாகி விட்டது. ஏற்கெனவே ரணமான பகுதியை "முறை" என்கிற பெயரில் குத்திக் குத்தி மேலும் குருதிப்புனலாக்குவது ஆயாசம் தருகிறது.

அம்மா இவள் சார்பில் மரணத்தையும், அது நிகழ்ந்த விதத்தையும், அதன் பிறகான மகாவின் வாழ்க்கை பற்றியும் சொன்னார்கள். அவர்கள் அதில் திருப்தியடைந்தது போலத் தெரிந்தது. விடைபெற்றுக் கொண்டார்கள். மகாலெட்சுமி பின்கட்டுக்குப் போய்த் துவைகல்லின் மீது உட்கார்ந்தாள். வெயில் பட்டு மலை பளபளத்தது. மலையின் மீது கூடாரங்கள் ஏராளமிருந்தன. நிழல் தரும் மரங்கள் சாய்வாய் நின்றிருந்தன.

**"அவர் தூங்கறப்ப எல்லாரும் கூடி நின்னு மலர் தூவறாங்களே.... ஏன்?"**

**"அவர் கனவுல 'படையப்பா' டிரெய்லர் வருதாம்!"**

**— அம்பை தேவா**



"எங்க ஊர் தாமிரபரணி அழகுக்கு வருமா மகா உங்க மலை? பரணி இடை நெளித்து, சுருக்கி, விரித்து நாட்டியமாடுகிற பெண். சர்வ ஊற்று இல்லையா?"

"புதர்மண்டிக் கிடக்கிறது இல்லையா இப்போ?"

"அது அவள் பெற்றெடுத்தக் குழந்தை மகா. உங்க மலை எதைப் பெற்றெடுக்கும்? இன்னொரு மலையையா?"

ஏனோ நெஞ்சடைத்தது. கண்களை இறுக மூடிக் கொண்டாள். மெட்ராஸ் ஆபீசு களில் திருமதி மகாலெட்சுமி செல்வகுமார் என்று கையெழுத்திட்ட படிவங்கள் நினைவுக்கு வந்தன.

"மகா... படுக்கிறயா கொஞ்ச நேரம்?"

பாட்டியின் கைகள் தலைக்குள் நுழைந்து கேசத்தைக் கோதி விட்டன.

"மகா... ஒண்ணு தெரிஞ்சிக்கணும் நீ. இது முடிவில்ல. எதுவுமே முடிவில்லனு தீர்மானிச்சிக்கிட்டாத்தான் ஆரம்பம்னு ஒண்ணு இருக்க முடியும் இல்லையா? முப்பது, நாப்பது வருஷங்களுக்கு முன்னால கணவனை இழந்தவ நான். வாழ்க்கை இரகணம் பிடிச்சாப்ல ஆயிடுச்சு. எனக்கு சுத்தியிருந்த கதவுகள் எல்லாமே மூடிருச்சு. ஜன்னல்களும் இல்லை. உனக்கு ஜன்னல் சாத்தினா, திறக்க கதவு இருக்கு. கதவு மூடினா, ஜன்னல் இருக்கு."

என்னமோ மனசுக்கு ஒத்தடமிட்ட மாதிரி பாட்டி பேசினாள்.

சாயந்தர பஸ்ஸுக்கு சதாசிவத்தை ஏற்றி விட அப்பா போனார். கிளம்பும் முன் சதாசிவம், "இத்தோட நம்ம உறவு முடிஞ்சிதுனோ முறிஞ்சிதுனோ இல்ல சம்பந்தி. அம்மா மகா, அடிக்கடி நீ வரணும். அது உன் வீடு, சரியா?" என்றார் தழுதழுத்தக் குரலில்.

கொஞ்சநேரத்தில் அம்மாவும் பௌர்ணமியாதலால், மலைசுற்றி வருகிறேன் என்று கிளம்பினாள். பாட்டி முன் கதவைச் சாத்திவிட்டு வந்தாள். காற்றில் இருவாட்சிப் பூக்களின் வாசமிருந்தது. ஆயிரங்கால் சடைபின்னி, வரிவரியாய்ப் பாட்டி வைத்து விட்ட பூக்கள். மகாலெஷ்மி எழுந்து போய் பூக்களை முகர்ந்து பார்த்தாள்.

"கட்டித் தரட்டா மகா?"

"பாட்டி..."

"ஏன்? வச்சிக்கறதுல என்ன? வச்சிக்கிட்டா நீ உம்புருஷனை மறந்திருவியா? இல்லையே. இல்லைனா, பூ வச்சிக்கறதும், பொட்டு வச்சிக்கறதும் கல்யாணம் பண்ணிட்டப் பிறகு உனக்குக் கிடைத்தவையா? வெளி அடையாளங்கள்ல மனசை வெளிப்படுத்தணும்னா அது முட்டாள்தனம் மகா. நான் அனுபவிச்சிருக்கேன். அப்போ உப்பு, காரம், புளி கூட அதிகமா சாப்பாட்டுல சேத்துக்க விட மாட்டாங்க. அதனாலயே காரமுள்ள, புளி ஊத்தின உணவு பத்தின ஏக்கம் எனக்கு இருந்திருக்கு."

பாட்டியின் கைகள் தன்னிச்சையாய் பூப்பறித்தன. சேலையின் தலைப்பைத் தொட்டில் போலாக்கி, பூக்களை அதில் சேகரித்தன.

"நீ முடங்கிறக் கூடாது மகா. வளரணும். மேல படிக்கறியா?"

"பாட்டி... அப்பா..."

"நான் சொல்றேன்."

பூக்களைக் கட்டி, மகாலெட்சுமியின் தலையில் வைத்தாள். வாசல் கதவு திறந்திருந்தது. தலையினுள் பூவைச் செருகின தருணம், அப்பா உள்ளே நுழைந்தார். பாட்டியின் செயலால் திடுக்கிட்டு, உடல் ஆடியது அவருக்கே.

"அம்மா. என்ன இது? புத்தி பிசகிருச்சா உனக்கு? நாலு பேர் பார்த்தா என்ன சொல்லுவாங்க?"

உத்தரத்தில் கட்டின கூட்டுக்கு வந்த பறவை, அப்பாவின் குரலில் ஒடுங்கி, மீண்டும் ஜன்னல் வழியே வெளியில் பறந்தது.

(தொடரும்)



"மொய் நோட்ல 'ராமசாமி - ஐம்பது ரூபாய் ஐம்பது பைசா'ன்னு இருக்கே, ஏன்?"

"கவர் வாங்கின செலவு ஐம்பது பைசா சேர்த்துக்கிட்டாராம்!"

- கே. சதீஷ்குமார்

**சா**வித்திரிக்கு ஒரு கணம் மூச்சே நின்றுவிடும் போல் இருந்தது. இத்தனை குரூர மான கட்டளையை எப்படி ராமநாதனால் துளியும் கருணை இன்றி, தன் மீது வீச முடிந்தது?

ஆரம்பத்திலிருந்தே தான் கொஞ்சம்கூட விட்டுக் கொடுக்காமல், எல்லா சந்தர்ப்பங்களிலும் தன் உரி மையை நிலைநாட்டிக் கொண்டிருந்திருக்க வேண்டுமோ என்று தோன்றிற்று.

''என்ன நிற்கிறே? சொன்னது காதுல விழலே?'' என்று சீறுவது போல் சொன்னான் ராமநாதன். ''வாங்கின துணியை உன் சிநேகிதியிடமே திருப்பிக் கொடுத்துவிட்டு ரூபாயை வாங்கிக் கொண்டு வா!''

கீழே இரண்டாவது தளத்தில் உள்ள ஃப்ளாட்டில் போய், ரோகிணியிடம் துணி யைத்திரும்பக் கொடுத்துப் பணத்தைத் திருப்பிக் கேட்க எப்படி முடியும் என்று தவித்துப் போய், நின்றுகொண்டே இருந் தாள் சாவித்திரி.

ராமநாதன் டைனிங் டேபிள் அருகே போய், மஞ்சள் நிறத்தில் பூப்போட்ட மூன்று மீட்டர் துணியை வெடுக்கென்று எடுத்து, அவள் மீது வீசினான்.

குழந்தை ரஞ்சனியின் பிறந்த நாளுக்காக வாங்கிய துணி அது. கீழ் ஃப்ளாட்டில் ரோகிணி எப்போதும் இது மாதிரி துணிமணிகளை பெங்களூர், பம்பாய், அக மதாபாத் என்று எங்கிருந் தாவது கொண்டு வந்து கொண்டே இருப்பாள். விற்றுக் கொண்டும் இருப்பாள். ''சௌகரி யப்பட்டபோது பணத் தைக் கொடுத்தாப் போதும். அவசரம் ஒண்ணும் இல்லே'' என்பாள். ஒரு தடவைகூட சபலப்பட்டு சாவித்திரி அவற்றில் ஒன்றைக் கூட வாங்கியதில்லை. அவளுக்குத் தெரியும்., நாராயணன் இதற்கெல்லாம் தனக்கு அனுமதி அளிக்க மாட்டான் என்று.



இந்தத் தடவைதான் துணியின் அழகில் மயங்கிப் போய், ரஞ்சனிக்கு ஒரு புதிய ஃப்ராக் தைத்து, அவள்

பிறந்த நாளுக்குக் கொடுத்து விடலாம் என்று நினைத்துக் கொண்டு வாங்கினாள்.

அவள் செய்த ஒரே குற்றம், அவள் ராம நாதனின் அனுமதியைப் பெறவில்லை.

ரஞ்சனி ட்யூஷனுக்குப் போயிருந்தாள். இல்லாவிட்டால் அவளிடமாவது துணியைக் கொண்டு போய் ரோகிணியிடம் கொடுத்துவிட்டு வரச் சொல்லலாம்.

எத்தனை அவமானம்!

"நீயும் சம்பாதிக்கிறாயே சாவித்திரி? உன் பெண்ணுக்கு நீ ஆசைப்பட்ட துணி வாங்கக் கூட உனக்குச் சுதந்தரம் இல்லையா?" என்று அப்பட்டமாக ரோகிணி கேட்டு விட்டால் என்ன பதில் சொல்லுவது?

"கொண்டுபோய்க் கொடுத்துவிட்டு வா. வந்தப்புறம் கதவைத் திறக்கிறேன்!" என்று அவளைத் தள்ளிக் கதவைச் சாத்தினான் ராமநாதன்.

கோத்ரெஜ் லாக் லொடக்கென்று பூட்டிக் கொண்ட சத்தம் கேட்டது.

நல்ல வேளையாக எதிர் ஃப்ளாட்டில் யாரும் கதவைத் திறந்து வைத்துக் கொண்டு பார்த்துக் கொண்டிருக்கவில்லை. அப்படி இருந்தால் அவமானம் பிடுங்கித் தின்றிருக்கும்.

வீட்டுச் செலவு என்று எதையும் சாவித்திரி செய்ததில்லை. ஆபீசுக்குப் போய்விட்டு வர பஸ் சார்ஜ் ஒன்றரை ப்ளஸ் ஒன்றரை-மூன்று ரூபாய். எப்போதோ நினைவு இல்லாமல் கொடுத்த, கிழியாத ஐந்து ரூபாய் நோட்டு ஒன்று. இதில் மூன்று ரூபாய் தினசரி பஸ் சார்ஜுக்குப் போக, ஒரே தடுப்பு உள்ள அவளது சின்ன பர்ஸில் அந்த ஐந்து ரூபாய் மட்டும் எப்போதும் மடித்து வைத்தது போல அப்படியே இருக்கும். என்றைக்காவது ஞாபகம் வந்து, 'எங்கே அந்த ஐந்து ரூபாய்?' என்று கேட்டு வைத்தால் என்ன செய்வது என்ற பயத்திலேயே, அதை எதற்கும் உபயோகிக்காமலே இருந்தாள்...

எல்லாப் பணச் செலவும் ராமநாதன் மூலமாகத்தான் நடந்தாக வேண்டும். கல்யாணம் ஆன புதிதில் பூக்காரிக்கு இரண்டு நாள் பணத்தை அவள் எண்ணிக் கொடுத்த போது, "நாளை லேருந்து பூக்காரியை வர வேண்டாம்னு சொல்லிடு!" என்றான் ராமநாதன். அதை அவன் சர்வ சாதாரணமாக, சலனமே இல்லாமல் சொன்னபோது அவளைக் காலோடு தலையாகத் தரையில் தூக்கி அறைந்த மாதிரி இருந்தது.

"ஏன், நான் பூகூட வாங்கக் கூடாதா?" என்றாள் நம்பக்கூட முடியாமல். ஆனால் அவள் குரலில் பயம்தான் அதிகம் தொனித்தது.

"ஒரு தடவைதான் சொல்லுவேன்!" என்றான் ராமநாதன், கடுமையான குரலில்.

எத்தனை குரூரம்!

திருமணமாகி இரண்டு தினங்களே ஆகியிருந்த மனைவியிடம் எந்த ஒரு கணவனும் இப்படி ஒரு கண்டிப்பைத் தெரிவித்திருக்க முடியுமா என்று அவளுக்கு வியப்பாக இருந்தது. யாரிடமாவது சொன்னால்கூட நம்ப மாட்டார்கள்...

சம்பளம் வாங்கிக் கொண்டு வந்து, கவரை முதலில் அப்படியே நீட்டியபோது, 'முழுசும் இருக்கா, ஏதாவும் எடுத்துட்டியா?' என்றுதான் கேட்டான்.

ஆத்திரம், அருவருப்பு எல்லாம் துருத்திக்





''நம்ம வீட்லதான் மிக்ஸி இருக்குதே... அப்புறம் எதுக்கு புது மிக்ஸி வாங்கினே?''

''ஒரு மாச மசாலா சாமான்கள் இலவசமாத் தர்றதாச் சொன்னாங்க!

– அம்பை தேவா



'ஒரு சின்னத் தப்பைப் போய் அந்த இசை விமர்சகர் பெரிசா சுட்டிக்காட்டி விளாசிட்டார்.''

''என்ன தப்பு செஞ்சே?''

''நிகழ்ச்சியின் போது சலங்கை கட்டிக்க மறந்துட்டேன்.''

– குல்லு



"சாதி ஒழிப்பு மாநாட்டிலே ஏன் தலைவர் கலந்துக்கலையாம்?"

"அவரோட ஜாதிக்காரங்க ஒத்துக்கலையாம். அதனாலேதான்..."

– சீதா தம்பி

கொண்டு வர, எதுவுமே பேசாமல் மௌனமாக இருந்தாள் சாவித்திரி.

''கேட்கிறேன் இல்லே?''

''பே-ஸ்லிப் அதுலயே இருக்கு. சரியா இருக்கா பார்த்துடுங்க!''

ராமநாதன் கரன்ஸியை எண்ணி, சம்பளச் சீட்டைச் சரி பார்த்தது அவளுக்குள் இன்னும் ஆத்திரத்தைப் பெருக்கியது.

நல்ல மனிதர். நல்ல உத்தியோகம். கூடப் பிறப்புகள் அதிகம் இல்லை. ஒரே ஒரு சகோதரிதான். அவளுக்கும் கூடத் திருமணம் ஆகிவிட்டது என்று அம்மா எல்லாவற்றையும் விசாரித்துத்தான் சாவித்திரியை ராமநாதனுக்கு ஏற்ற வரனாகப் பிடித்தாள்.

ஆபீசில் கூட யாரோ விசாரித்துத்தான் அம்மாவிடம் சொல்லியிருந்தார்கள். ஆனால் இப்படி ஓர் அற்ப சுபாவம் ராமநாதனுக்கு இருக்கிறது என்று ஏன் யாரும் தன்னிடமோ, அம்மாவிடமோ சொல்லவே இல்லை?

எல்லாவற்றையும்விட, சகோதரியின் கணவருக்கு ஆஸ்பத்திரியில் பி-பாஸிடிவ் இரத்தம் கொடுத்ததற்குக் கூட, மெனக்கெட்டு கவுண்ட்டரில் போய், சாதாரணமாக இரத்தம் ஓர் யூனிட்டுக்கு என்ன சார்ஜ் செய்கிறார்கள் என்று விசாரித்து வைத்துக் கொண்டு, தங்கை கணவர் டிஸ்சார்ஜ் ஆகிய அன்று, 'ப்ளட் கொடுத்ததுக்கு எனக்கு இருநூறு ரூபா கொடுக்கணும் நீங்க!' என்று துளியும் இங்கிதம் இல்லாமல் ராமநாதன் சொன்னதைக் கேட்டு, அவமானம் பிடுங்கியது சாவித்திரிக்கு.

''என்னங்க இது?...'' என்று குறுக்கே பேசப் போனவளை, ''அதுக்கென்ன, இதா கொடுத்துடறேன் அண்ணா!'' என்று தங்கை சாரதா பர்சைத் திறந்து, எதுவுமே நடக்காத மாதிரி, இருநூறு ரூபாயைக் கொடுத்த போது அதிர்ந்தே போய்விட்டாள் சாவித்திரி.

சீ, என்ன மனிதர் இவர்!

ஆஸ்பத்திரியிலிருந்து வீடு திரும்பும் வரை ஸ்கூட்டரில் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை சாவித்திரி. அப்படியே ஸ்கூட்டரிலிருந்து குதித்து, தன் பிராணன் போய் விட்டால்கூடத் தேவலை என்று தோன்றிற்று அவளுக்கு.

வீட்டுக்குப் போன பிறகு, இனி கணவனுடன் ஒரு வார்த்தை என்றால் ஒரு வார்த்தைகூடப் பேசப் போவதில்லை என்று தீர்மானித்துக் கொண்டாள். ஆனால் அப்படி இருப்பது சாத்தியம்தானா என்று யோசிக்க முடியவில்லை.

ஏதோ ஒரு நாடகத்தில் இப்படித்தான் ஒரு மகா கருமியான கதாநாயகன், கையில் கால்குலேட்டருடன், எதற்கெடுத்தாலும் கணக்குப் போட்டுப் பார்த்து மனைவியை இம்சைப்படுத்தி வருகிற மாதிரி ஒரு நகைச்சுவைப் பாத்திரத்தைப் படைத்திருந்தார்கள். ஆனால்

யதார்த்தத்தில், சிரிப்பா வருகிறது? ஆத்திரம் அல்லவா பொங்கிக் கொண்டு வருகிறது?...

கீழ்த் தளத்துக்குப் போவதா, வேண்டாமா என்று, பூட்டிய கதவுக்கு வெளியே தவித்துக் கொண்டு நின்ற சாவித்திரிக்கு, திடீரென்று மனசு மாறி, ராமநாதன் கதவைத் திறந்து 'உள்ளே வா' என்று கூப்பிட மாட்டானா என்று சிறிய நப்பாசை தோன்றிற்று. ராமநாதனாவது, திடீர் என்று மனசு மாறுவதாவது!

ரோகிணியின் ஃப்ளாட் கதவு கொஞ்சமாகத் திறந்தே இருந்தது.

கணவன் துணியை வாங்க வேண்டாம் என்று கண்டித்துச் சொன்னதை எப்படி அவளிடம் சொல்லுவது? ராமநாதனின் சுபாவம் பற்றி அவளுக்கு ஏற்கெனவே தெரிந்திருந்தால் பரவாயில்லை...

காலிங் பெல்லை அழுத்திவிட்டுக் காத்திருந்தாள் சாவித்திரி.

ரோகிணி கதவை முழுவதுமாகத் திறந்தாள்.

சாவித்திரிக்குத் தொண்டை கரகரத்தது. கண்ணீர் வரும்போல் இருந்தது. "ஒண்ணுமில்லே. இது இப்போதைக்கி வேணாம்னார். வேற வாங்கியிருக்காராம்..." என்றாள்.

"ஓ! அதனால என்ன சாவித்திரி... ரூபாயத் திருப்பித் தந்துடட்டுமா? துணிய நீங்களே வச்சுக்குங்க. எப்ப வேணா பணம் கொடுங்க..." என்று ரோகிணி சொன்னபோது, அவளுக்கு ராமநாதனின் சுபாவம் தெரிந்த மாதிரிதான் இருந்தது.

"இல்லே வேணுங்கறபோது ரூபாயைக் கொடுத்திட்டே எடுத்துக்கறேனே!" என்றாள் சாவித்திரி.

ரோகிணி ரூபாயைத் திருப்பிக் கொடுத்தாள். ஆனால் துணியை வாங்கிக் கொள்ளவில்லை. "ரஞ்சனி ரொம்ப நல்லாயிருக்குன்னு அன்னிக்கே சொன்னா. அவளோட பர்த்தேடக்கு இருக்கட்டுமே!"

"இல்லே, அவர் கோவிச்சுப்பார்....." என்று தயங்கினாள் சாவித்திரி.

## "தோழிகளானோம்; தொழில் துவங்கினோம்!"

**ஒன்றுக்கு மேற்பட்ட பெண்கள் கூடிப் பேசினால், அது ஊர் வம்பாகத்தான் இருக்கும் என்கிற பொதுப்படையான கருத்தைப் பொய்யாக்கியிருக்கிறார்கள், கோவையைச் சேர்ந்த இந்தப் பெண்கள்.**

**தத்தம் குழந்தைகளுக்கு மதிய உணவு கொண்டுபோய்க் காத்திருக்கும் நேரத்தில் பரிச்சயம் ஏற்பட்டு தோழிகள் ஆனவர்கள், உமாராணி, பிரேமா, உமா ஆகியோர். தாங்கள் மூவரும் சேர்ந்து ஏதாவது செய்தால் என்ன என்று யோசித்து பேன்ஸி ஸ்டோர் ஒன்றைத் தொடங்கி விட்டார்கள். மூவரும் மாறி மாறி கடையைப் பார்த்துக் கொள்கிறார்கள். எங்கே போனாலும் சேர்ந்தே போகிறார்கள். இவர்களின் நட்புக்கும் கூட்டுத் தொழிலுக்கும் இவர்களது திருவாளர்களும் முழு ஒத்துழைப்புத் தருகிறார்கள் என்பதில் இவர்களுக்கு ஏக மகிழ்ச்சி!**

**– ரோகிணி**

"ரஞ்சனி எங்களுக்கும் குழந்தை மாதிரிதானே? பரவாயில்லே. எங்க பிரசன்ட்டா இருக்கட்டும்!"

சாவித்திரி அப்படியே நெகிழ்ந்து போனாள். ரோகிணி திருப்பித் தந்த ரூபாயை, அப்படியே அவளிடமே திருப்பிக் கொடுத்துவிட நினைத்தாள். அப்படிக் கொடுத்தால் அது ரோகிணியை மனசு நோகச் செய்யும். அதைவிட அவளுக்கு முக்கியமாகத் தோன்றியது, தன் உரிமையை ராமநாதனிடம் நிலைநாட்ட வேண்டும்.

பணத்தை அவனிடம் கொடுப்பதில்லை என்று தீர்மானித்துக் கொண்டாள். ராமநாதன் எப்படி நடந்து கொண்டாலும் அதை எதிர் கொள்ளுவதுதான் இதற்குச் சரியான முடிவாக இருக்கும் என்று சாவித்திரிக்குத் தோன்றிற்று.

ஒவ்வொரு படியாக அவள் மேலே ஏறிய போது ஒவ்வொரு காலடியிலும் அவள் மன உறுதி தெரிந்தது.

# 9

வேதார்த்தத்தை ஆண்டாள் எடுத்துக் கையாண்ட அழகைச் சொன்னேன்.

'விஷ்ணுவுக்கென்று எடுத்து வைக்கப்பட்ட ஹவிஸ், விஷ்ணுவுக்கே வினியோகமாக வேண்டும். அவனுக்கென்று உரிய ஆத்மா அவனுக்கே சமர்ப்பணமாக வேண்டும். மானிடர்களுக்குரியதல்ல எனது ஆத்மா' என்கிறாள் அவள்.

ஆண்டாள் இப்படிச் சொல்வதற்கு மூலம் எது என்று கேட்டால், ருக்மிணி சந்தேசத்தில் கிருஷ்ணனுக்கு எழுதியனுப்புகிறபோது,

'சிம்ஹத்துக்கு என்று வைக்கப்பட்ட பொருளை குள்ள நரி வந்து எடுத்துப் போனால் எப்படி பரிஹாஸாத்பதமாகுமோ, கேலிக்கூத்தாகுமோ... அப்படி இந்த ஆத்மா வேறு மனிதர்க்கு உரியதானால் கேலிக்கூத்தாகும். புருஷ சிம்ஹனான பரமாத்மாவுக்கே இந்த ஆத்மா சமர்ப்பணம்' என்று எழுதுகிறாள் ருக்மிணி. இதையேதான் ஆண்டாளும் சொல்லியிருக்கிறாள்.

தயிரை எடுத்து வைத்து சமர்ப்பிக்கும் போது, தயிரை ரக்ஷிக்கும்படி பகவானைப் பிரார்த்திக்கும் மந்திரம் உள்ளதாகச் சொன்னேன்.

தயிரை எல்லோரும் மறந்துவிட வேண்டும். தயிர் ஸ்தானத்திலே எது இருக்கிறது? இந்த ஆத்மாதான்! ஆத்மா அனர்த்தப் படாதபடி – கெட்டுப்போகாதபடி – அவன் ரக்ஷிக்க வேண்டும் என்பதே பிரார்த்தனை.

ஒரே ராத்திரியிலே ஆத்மா கெட்டுப் போய்விடும் என்றார் ஒருத்தர். ஒரு ராத்திரி என்னத்திற்கு...? ஒரே க்ஷணத்திலே கெட்டுப் போய்விடும்!

இதற்காகவே தினமும் மாத்யானிகம் பண்ணுகிறபோது ஒரு மந்திரம் சொல்கிறோம் :

'என்னை நீ பரிசுத்தி செய்ய வேண்டும். வாக்கினாலே, மனசினாலே, செயலினாலே செய்யப்பட்ட பாபங்கள்; ராத்திரி பண்ணிய பாபம், மத்தியானம் பண்ணிய பாபம்... எல்லாம் போய்விட வேண்டும்...' என்று மந்திரம்.

'இந்த மந்திரத்தினாலே என்ன தெரிகிறது?' என்று கேட்டால்...

'கட்டாயம் நாம் எல்லோரும் தினமும் பாபம் பண்ணுவோம்' என்று ஆகிறது அல்லவா! அதனால்தான் நித்யம் சொல்லக்கூடிய மந்திரத்திலேயே இப்படி வருகிறது!

ராத்திரியிலேயும் கெட்டுப் போய்விடலாம். மத்தியானத்திலேயும் கெட்டுப் போகலாம் – இந்த ஆத்மா கெட்டுப் போவதற்கு ஏகப்பட்ட சாதனங்களை நமக்குக் கொடுத்திருக்கிறான். பல பல போக மயக்குகள் – எத்தனை போக மயக்குகள்!

ஒன்றைப் பார்த்து விட்டால் கண்ணை அதிலேயிருந்து திருப்ப முடிவதில்லை.

ஆழ்வாருக்கு பகவானிடத்திலேயிருந்து திருப்ப முடிவதில்லை. சாமான்யர்களுக்கோ இதர விஷயங்களிலிருந்து திருப்ப முடிவதில்லை! இழுத்துக் கொண்டே போய் விடுகிறது! அதனால்தான் 'ஈருலகைப் படைக்க எண்ணி இருந்தார் வந்தார்' என்கிறார் சுவாமி தேசிகன்.

ஈருலகு என்றால் இரண்டு வகை வஸ்துக்கள் உடைய உலகு. அசையும் பொருள் அசையாப் பொருள் – இந்த இரண்டினால் சேர்ந்த உலகம் என்பது ஒரு பொருள்.

ஈர்க்கின்ற உலகு என்பது இன்னொரு பொருள்.

நம்மை அப்படியே இழுக்கும்! அது நம்மை நன்றாக இழுக்கிறது என்பது தெரிகிறதே! பூமிக்கே ஆகர்ஷண சக்தி உண்டு என்பது வெளியிடப்பட்டிருக்கிறது. ஆகையினாலே, இது ஈர்க்கின்ற உலகம். எல்லாவற்றையும் இழுக்கிறது. மனத்தை ஏகமாக இழுக்கிறது. கண்ணை இழுக்கிறது. மூக்கை இழுக்கிறது. நாக்கை இழுக்கிறது. காதை இழுக்கிறது. ஒரு சப்தத்துக்கு இடங்கொடுத்தால், அதைத் திருப்பித் திருப்பிக் கேட்கத் தோன்றுகிறது. அதற்காக சிரமப்படடு செலவு செய்யத் தோன்றுகிறது. அதற்காகப் பொருளைத் தேட

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்



வேண்டும் என்று தோன்றுகிறது. அக்கிரமம் பண்ணியாவது சம்பாதிக்க வேண்டுமென்று தோன்றுகிறது.

ஒரு வஸ்துவைச் சாப்பிட்டாலும் அப்படித்தான். அதே மாதிரி மறுபடியும் சாப்பிட வேண்டும் என்று தோன்றுகிறது.

ஆகையினாலே, இந்த்ரியங்கள் ரொம்ப பலம் வாய்ந்தவை. ஆத்மா கெட்டுப் போவதற்குப் பரம சத்ருக்கள். நம்மிடமே அவை இருக்கின்றன!

இந்த்ரியங்களே நமக்கு சத்ரு; இந்த இந்த்ரியங்களே நமக்கு நண்பர்கள்! க்ஷேமத்தை அடையவும் அவற்றை உபயோகிக்கலாம்; நாசத்தை அடையவும் உபயோகிக்கலாம். ஒரு க்ஷணத்திலே நம்மைக் கவிழ்த்துவிடும். ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். இந்த இந்த்ரியங்களை நிக்ரஹிக்க வேண்டும்.

ரிஷீகேசன் என்று பகவானுக்கு ஒரு திருநாமம். எதனால் அவனுக்கு இந்தத் திருநாமம் ஏற்பட்டது என்றால்,

ரிஷீகங்கள் என்றால் இந்த்ரியங்கள் என்று அர்த்தம். இந்த்ரியங்களுக்கெல்லாம் எஜமானனாக அவன் இருப்பதனாலே ரிஷீகேசன் என்று பெயர்.

நமக்கெல்லாம் என்ன பெயர்...? 'இந்த்ரிய கிங்கரர்' என்று பெயர்!

'அவன் இந்த்ரியங்களுக்கு எஜமானன்; நாமெல்லாம் இந்திரியங்களுக்கு வேலை ஆள்! அது சொல்கிற பிரகாரம் நாம் கேட்டுக் கொண்டிருக்கிறோம். அதனால்தான் இந்த்ரிய கிங்கரர் என்று நமக்குப் பெயர்.

*பொன்னைக் கொண்டு உரைகல் மீதே*
*நிறம்எழ உரைத்தாற்போல்*
*உன்னைக் கொண்டு என் நாவகம்பால்*
*மாற்று இன்றி உரைத்துக் கொண்டேன்*
*உன்னைக் கொண்டு என்னுள்*
*வைத்தேன்*
*என்னையும் உன்னில் இட்டேன்*
*என்னப்பா என் இருடீகேசா!*
*என்னுயிர்க்காவலனே!*

பெரியாழ்வார் என்ன சொல்கிறார் பாருங்கள்...

'என்னப்பா! ரிஷீகேசா! என்னுயிர்க் காவலனே. தங்கம் நல்லதா என்று பார்க்க வேண்டுமானால், உரை கல்லிலே உரைத்துப் பார்த்து, 'இது நல்லது' என்கிறார்கள். 'இது கெட்டது' என்கிறார்கள்... அந்த மாதிரி உன் பெருமையை என்னுடைய நாக்கு என்கிற உரைகல்லிலே உரைத்துப் பார்த்தேன். உன் பெருமை தெரிந்தது. உன்னை அப்படியே எடுத்துக் கொண்டுவந்து என் ஹ்ருதயத்திலே வைத்துக் கொண்டு விட்டேன். என்னையும் தூக்கி உன்னுள் வைத்தேன்...' என்கிறார்.

அதனால்தான் பெரியாழ்வாருக்கு விஷ்ணு சித்தர் என்று பெயர் – விஷ்ணுவைத் தமது சித்தத்தில் உடையவர்; விஷ்ணுவுடைய சித்தத்திலே தன்னை உடையவர்! – இருவித பொருளும் இந்த சப்தத்துக்குக் கிடைக்கும் : அவனுள்ளேயும் இவரை வைத்திருக்கிறார். அவனையும் கொண்டு வந்து தன்னுள் வைத்திருக்கிறார்.

'ஒரு ஊசி முனை போன்று இருக்கக் கூடியது. ஒரே சஞ்சலமாய் இருக்கக்கூடியது மனம்... அந்த மனத்திலே அவனைக் கொண்டு வந்து வைத்தேன் – இதயத்தில் வைத்தேன் என்று சொல்கிறீரே.... ஆழ்வாரே! அது முடியுமா என்ன...?' என்று ஒரு கேள்வி கேட்டால், அதற்கு பதிலும் அவரே – ஆழ்வாரே – சொல்லிவிட்டார் –

'அப்பா! என் ரிஷீகேசா என்னுயிர்க் காவலனே... என் ஆத்மாவுக்குக் காவலன் நீ. நான் நினைத்தால் அப்படிச் செய்ய முடியுமா? உன்னைக் கொண்டு என்னுள் வைப்பதும்; என்னைக் கொண்டு உன்னுள் வைப்பதும் நான் நிகழ்த்த முடியுமா...? நீ

## அருள்வாக்கு

நமக்கு தேஹ உபாதையிருக்கிறபோது ஈச்வர த்யானம் எப்படி ஒருமுகப்பட்டுப் பண்ணுவது? ஜ்வரம், பல்வலி என்று வந்தால் எப்படி பூஜை பண்ணுவது? சரீரத்தில் சக்தி இல்லாவிட்டால், 'சார்தாம்' என்று ஒவ்வொரு திக்கின் கோடியிலும் ஒரு க்ஷேத்ரமாக ஏகப்பட்ட புண்ய ஸ்தலங்களையும் புண்ய நதிகளையும் கொண்ட இந்த தேசத்தில் எப்படி க்ஷேத்ராடன தீர்த்தாடனங்கள் செய்வது? உடம்பிலே வலி அசக்தமென்றால் ஜபம் செய்ய முடியுமா? யோகம் முடியுமா? நிஷ்டை எங்கே? ஞானம் எங்கே?

இப்படியாக, பரமாத்ம ஸ்மரணைக்காகவே சரீரத்துக்கு வியாதி வராமல் Preventive-ஆகவும், வியாதி வந்தால் ஸ்வஸ்தப்படுத்திக்



கொள்வதற்காகவும் மருந்துகளையும் பத்யங்களையும், ஆஹார விஹார முறைகளையும் மற்ற ஸுகாதார விதிகளையும் சொல்லிக் கொடுப்பதற்கு ஒரு சாஸ்திரம் தேவைப்படத்தான் செய்கிறது. அதுதான் ஆயுர்வேதம். (தர்ம சாஸ்த்ர விதிகளின்படி ஒருத்தன் சுத்தமான வாழ்க்கை நடத்தி விட்டாலே Preventive; எந்த வியாதியும் வராது. ஆனாலும் வைத்ய சாஸ்த்ரமும் இதில் கொஞ்சம் சொல்ல வேண்டியதாயிருக்கிறது.)

வியாதியின் கஷ்டம் தீர்கிறது மட்டும் போதாது. வியாதியில்லாமல் தீர்க்க ஆயுளுடனும் இருக்கவேண்டும். அதற்கு இந்த வைத்ய முறை வழிகாட்டுகிறது என்பதால்தான் இதற்கு 'ஆயுர்வேதம்' என்று பெயர். 'எப்படியும் முடியப்போகிற ஆயுளை எதற்கு விருத்தி பண்ணிக் கொள்ள யத்தனம் பண்ண வேண்டும்?' என்றால் இதற்கும் காரணம் சொன்னேன். உடம்பை வைத்துக் கொண்டுதான் புண்யம் பண்ணிப் பாபத்தைப் போக்கிக்கணும், தர்ம அநுஷ்டானம் பண்ணிக் கர்ம சேஷத்தைக் கழிச்சக்கணும் என்று சொன்னேன். இப்போது நமக்கு வாய்த்திருக்கிற இந்த உடம்பு நசிக்கிறதற்கு முந்தியே அப்படி ''இருவினை யொப்பு, மல பரிபாகம்'' என்று (சைவ ஸித்தாந்திகள்) சொல்கிறபடி கர்மாவை ஈடுகட்டி மும்மலங்களை அகற்றிக் கொள்ள வேண்டும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

ரிஷீகேசன் அல்லவா! என் இந்த்ரியங்களையெல்லாம் அடக்கி, நீயே எனக்கு அருள் புரிந்ததனாலே இந்த பாக்கியம்...' என்று சொல்லி விட்டார்.

ஆகையினாலே பகவான் சங்கல்ப்பிக்க வேண்டும். சங்கல்ப்பித்தால்தான் எல்லா காரியமும் நடக்குமேயொழிய நாமாக நினைத்தால் மட்டுமே நடக்காது.

ஆகையினாலேதான் சத்யகாம: சத்ய சங்கல்ப: என்கிறது உபநிஷத். பகவத் சங்கல்பம் இருந்தால்தான் நாம் பண்ணிக் கொள்கிற சங்கல்ப்பம் நிறைவேறும்.

பகவத் பலத்தினாலேயும் பகவானுடைய சக்தியினாலேயும் இதைப் பண்ணுகிறேன் என்று ஒவ்வொரு காரியத்தையும் பண்ண வேண்டும். இதுதான் சாத்வீகத் தியாகம் என்பது. அவனுடைய ப்ரீதிக்காக அவனே காரியங்கள் நடத்திக் கொள்கிறான். அவை முடிகிறபோது அவன் நடத்திக் கொண்டான் என்று சொல்ல வேண்டும்.

ஆகையினாலேதான் யக்ஞத்துக்குரிய ஹவிஸை ரக்ஷிக்கும்படி அவனைப் பிரார்த்திக்கிறது. தயிரை ரக்ஷிக்கும்படி பிரார்த்திக்கிறது. தயிரை மறந்துவிட்டு ஆத்மாவை ரக்ஷிக்கும்படி பிரார்த்திக்கிறது.

ராத்திரியிலே கெட்டுப் போகாவண்ணம், பகலிலே கெட்டுப்போகாவண்ணம் இந்த ஆத்மாவை ரக்ஷிக்கிறான். இந்த இந்த்ரியங்களுக்கு வசமாகாத வண்ணம் ரொம்ப அழகாக ரக்ஷிக்கிறான்.

ஆத்மாவை நம்மால் ரக்ஷிக்க முடியுமா? நாம் அதைப் பார்த்திருக்கிறோமா? பார்த்திருந்தால்தானே அப்புறம் ரக்ஷிப்பதற்கு?

நமக்கு நாம் யார் என்பது தெரிகிறதா? சரீரம்தான் தெரிகிறது! இந்த சரீரத்தையே நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம். அழியக்கூடிய வஸ்துவுக்கே பொழுதெல்லாம் சரியாகப் போகிறது.

சரீரம் நன்றாக கண்ணுக்குத் தெரிகிறது; ஆகையினாலே சரீரத்தை ரக்ஷிக்கிறோம். அதுவும் ரக்ஷிப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறோம். நாம் பண்ணுகிற ரக்ஷணமெல்லாம் ரக்ஷித்ததாக ஆகுமா! கண்ணுக்குத் தெரிகிற சரீரத்துக்கே இந்த கதிதான் என்றால் ஆத்ம ஸ்வரூபம் எவ்வளவு சிறியது. அதை நம்மால் எப்படி ரக்ஷிக்க இயலும்?

ஆனால், அறிவை உடையது ஆத்மா. இப்போது நாம் கர்மாதீனமாக சம்ஸார பந்தத்திலே, பாப-புண்ய விசேஷத்தினால் கட்டுப்பட்டு அல்பமான இந்த்ரியங்களின் உதவியினால் அல்பமான விஷயங்களை மட்டுமே தெரிந்து கொள்ள முடிகிறது. இந்தக் கட்டிலேயிருந்து விடுபட்டு ஆத்மா விமுக்தி அடைந்ததென்றால் எல்லாம் அதனுடைய ஞானத்துக்கே விஷயமாகும்.

அப்படி விஷயமாவதற்குத் தடையாக அந்த ஆத்மாவைச் சுற்றிலும் எவ்வளவு பெரிய பெரிய துஷ்ட கிரஹங்களெல்லாம் சூழ்ந்திருக்கின்றன!

(தொடரும்)

அதிக மக்கள் இதனால் பயன் பெறுவது ஒருபுறம் இருக்க, செலவு மிகக் குறைச்சல் என்பது இவர் குறிப்பிடும் ப்ளஸ் பாயிண்டுகள்.

எண்ணெயில் வைட்டமின்-ஏ சேர்க்க, தயாரிப்பாளருக்கு, ஒரு மெட்ரிக் டன்னுக்கு 200 முதல் 250 ரூபாய் வரை ஆகும். இது உபயோகிப் பாளர் அளவில் பார்க்கும்போது வருடத் துக்கு இரண்டு ரூபாய் கூட ஆகாது.

# எண்ணெயில் இருக்குது கண் பார்வை!



• வெங்கடேஷ் மன்னார்

உலக சுகாதார அமைப்பின் அறிக்கைப்படி சுமார் எட்டுக் கோடி இந்தியர்கள் வைட்டமின்-ஏ குறை பாடு உள்ளவர்களாக இருக்கிறார்கள். கண் பார்வைக் குறைவுக்கு, வைட்ட மின்-ஏ ஒரு முக்கியக் காரணமாகச் சொல்லப்படுகிறது.

முருங்கைக் கீரை, காரட் என காய் கறி வகைகளைச் சேர்த்துக் கொள்ளுங்கள் என்று பிரசாரம் செய்வதைவிட, புதிதாக ஒரு வழியைக் கண்டு பிடித்திருக்கிறார் கனடாவி லுள்ள மைக்ரோ நியூட்ரியன்ட் அமைப்பில் பணியாற்றும் விஞ்ஞானி வெங்கடேஷ் மன்னார். (ஆமாம், நம் சென்னைக்காரரே தான்!)

சமையல் எண்ணெயை, தினசரி உப யோகிக்காதவர் இருக்க முடியாது அல்லவா?

அதனால், உப்பில் அயோடின் சேர்க்கிற மாதிரி சமையல் எண்ணெயிலேயே வைட்ட மின் ஏவைச் சேர்த்துவிட்டால் தீர்ந்தது பிரச்னை!

சமீபத்தில் ஓர் ஆராய்ச்சியின்படி, கடந்த ஐந்து வருடங்களில் சமையல் எண் ணெய் உபயோகம் முப்பது சதவிகி தத்துக்கு மேல் கூடியிருக்கிறதாம். ஒரு வருடத்தில் ஒரு நபர் சுமார் எட்டு கிலோ எண்ணெய் உபயோகிக்கிறார் என்கிறது இந்த ஆய்வு. ஆனால் காய்ச்சும் போதும், தாளிக்கும் போதும் வைட்டமின்-ஏ சத்து ஐம் பது சதவிகிதம் குறைந்து விடுகிற தாம்.

சமீபத்தில் தில்லியில் நடந்த எண்ணெய் வித்துக்கள் பிராஸஸிங் மாநாட்டில் பங்கு கொண்டு பேசிய, நிக்கலஸ் பிரமல் மருந்து கம்பெனியைச் சேர்ந்த விஞ் ஞானிகள் ஷிண்டேயும், சேஷாத்ரிநாதனும் சமையல் எண்ணெய்யுடன் வைடமின்-ஏவை இரண்டறக் கலப்பது பற்றிய ஆய்வறிக்கைகள் படித்தார்கள். "மன்னாரின் ஆராய்ச்சி முடிவு சரியானதே!" என்கிறார்கள் இருவருமே.

"ஆராய்ச்சி முடிவு சாதகமாய் இருந்தால் மட்டும் போதுமா? அரசியல் ஆதரவு, தொழில் துறை ஆதரவு, மக்கள் ஆதரவு மூன் றும் வேண்டுமே!" என்கிறார் இன்னொரு விஞ்ஞானி வர்கீஸ் ஆபிரகாம். ●

— சித்தார்த்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager; Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax : 2345621
Annual Subscription : India Rs. 250/-; Overseas Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India Rs. 125/-; Overseas Rs. 950/- (Air Mail)

